

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 19 Issue 08
ஆண்டு 19 இதழ் 08

March 2025 Rs.30
மார்ச் 2025 ரூ.30

**தமிழும் சமஸ்கிருதமும்**
இந்திரா பார்த்தசாரதி

**மீண்டும் மொழிப் போர்**
பிரபு திலக்

**மலையாள நடிகைகள் வென்றது எப்படி?**
பார்வதி திருவோத்து நேர்காணல்

## நோபல் உரை

# ஹான் காங்

ஆண்டு 19 இதழ் 08



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மார்ச் - 2025 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **இரா.செந்தில்குமார்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

## பாலியல் அத்துமீறல்களும் ஹேமா குழு அறிக்கையும்

# மலையாள நடிகைகள் வென்றது எப்படி?

தன்னோடு பணி செய்யும் நடிகையை கூலிப்படையினரை வைத்து பாலியல் பலாத்காரம் செய்ததென்பது, மலையாள சினிமா உலகில் மட்டுமல்ல, கேரளிய சமூக வரலாற்றில் எப்போதும் நிகழாததும் பயங்கரமானதுமாகும். ஆணாதிக்கமும் பணபல அதிகாரமும் நிரம்பி வழியும் மலையாள திரைப்படத் துறையில் நடக்கும் வேறு பல குற்றங்களைப்போலவே, இதுவும் வெளி உலகிற்குத் தெரியாமல் தேய்ந்து கடந்துபோகும் என்று நினைத்திருந்த வேளையில், குற்றவாளிகளை தப்பிக்கவிடாமல் செய்ததற்குப் பின்னால், முன்னெடுக்கப்பட்ட தீரம் மிக்க தொடர் போராட்டமே ஒரு காரணமாக அமைந்திருந்தது. குற்றவாளிகளுக்கு எதிராக போராடியவர்களில் நடிகை பார்வதி திருவோத்து முக்கியமானவர்.

**● பார்வதி திருவோத்து**

நேர்கண்டவர்: **நிலீன அத்தோளி** மலையாளத்தில் இருந்து தமிழில்: **கிருஷ்ணகோபால்**

**சி**றந்த நடிகை என்ற நிலையில் பல வெற்றிப் படங்களைக் கொடுத்து புகழடைந்திருந்த பார்வதி இந்த போராட்டம் மூலம் எதையுமே இழந்து விடவில்லை. அவர் ஆவேசத்தோடு பேசுகிறார். போராட்டத்தில் கலந்துகொள்கிறார். மலையாள சினிமா பெண் கலைஞர்கள் கூட்டமைப்பான WCC உடன் பயணப்படுகிறார்.

'கசபா' திரைப்படத்தில் பெண்களுக்கு எதிராக மம்முட்டி கதாபாத்திரம் பேசிய சர்ச்சையான வசனத்திற்கு எதிராக புதிய தலைமுறை நடிகையான பார்வதி திருவோத்து கடுமையான விமர்சனத்தை முன்வைத்தார். அது இப்போது வரையுள்ள மலையாள திரைப்பட வரலாற்றில் ஒரு அடையாளமாக மாறிப்போனது. சர்வாதிகாரம் நிரம்பிய கதாநாயக பிம்பம் ஒரு கதாநாயகியால் விமர்சிக்கப்பட்ட சந்தர்ப்பம் சினிமாவுக்கு வெளியே அரசியலாகப் பார்க்கப்பட்டது. பெண் தரப்பிலிருந்து தவறை சுட்டிக்காட்டி கேள்வி கேட்கப்பட்டது இந்திய திரைப்பட வரலாற்றில் அதுதான் முதல்முறை. இருப்பினும், மம்முட்டியை பார்வதி விமர்சனம் செய்ததை, சினிமாவின் வழியே வளர்ந்த ரசிகர் கூட்டம் அரசியலாகப் பார்க்கும்படியான ஒரு மோதல் போக்கை, சினிமாக் குறித்து எழுதுபவர்கள் மடைமாற்றம் செய்து, இருவருக்குமான இடைவெளியை அதிகப்படுத்தி விட்டார்கள். பார்வதியின் நிலைபாடென்பது, நாயகன் எதிர் கதாபாத்திரம் ஏற்க கூடாதென்றோ பெண்களுக்கெதிரான விமர்சனத்தை முன்வைக்கக் கூடாதென்பதோ அல்ல. கடந்துப் போன ஒன்றினை மகத்துவத்துவமான ஒன்றாக நினைத்து ஊதி பெரிதுப்படுத்துவது சமூகத்தின் வளர்ச்சியை பின்னோக்கிக் கொண்டுப்போகும் என்பதுதான். பார்வதியின் கருத்துகள் பலதளங்களில், பல விதங்களில் சர்சைக்கிடமாகியதுண்டு. நவீன இதழ் ஒன்று பார்வதிக்கு எதிராக பாலியல் வன்புணர்வு மிரட்டல் கூட விட்டது. தனிப்பட்ட முறையில் பல நெருக்கடிகளை பார்வதி சந்தித்திருப்பார் என்பதை இந்த மிரட்டல் வெளிப்படுத்துகிறது. அவ்வளவு வலுவோடு மலையாள சினிமாவில் ஆணாதிக்கம் நிறைந்திருக்கிறது.



பொது மக்களின் பண்பாடாக மாறிப்போயிருக்கும் சினிமாவில் மக்கள் ஆதரவில்லாமல் எந்த ஒரு விஷயத்தையும் முன்னெடுத்து செல்வது சிரமம். உண்மை இப்படியிருக்கும் போது எவ்வாறு கடினமான சவால்களை எதிர்கொண்டு பார்வதி வெற்றியடைந்தார் என யோசிக்கும் போது அதுதான் அவரது தனிச்சிறப்பாக அமைந்திருக்கிறது.



2017 ஆம் ஆண்டு நடிகை எதிர்கொண்ட எல்லை மீறிய பாலியல் அத்துமீறலை, ஏற்கனவே அவர்கள் எதிர்கொண்ட தந்திர அணுகுமுறை மூலம் இல்லாமல் ஆக்கியதைப் போல், எளிதில் திரைக்குப் பின்னால் மறைந்துப்போகச் செய்துவிடுவார்கள் என்றுதான் பார்க்கப்பட்டது. இந்த சூழலில் குற்றவாளிகளை தப்பிக்க விடக்கூடாது என கங்கணம் கட்டி பலப் பெண்கள் அணி சேர்ந்து போராடியதன் விளைவு இதை வேறு தளத்திற்கு எடுத்துச் சென்றது. குற்றவாளிகளை தப்பிக்கவிடாமல் நடத்திய போராட்டங்களின் பின் துணையோடு சினிமாவில் பெண்களுக்கு கிடைக்க வேண்டிய பாதுகாப்பு, உடைமாற்றுவதற்கான மறைவிடங்கள் போன்ற அடிப்படைப்படையான உரிமைக்காகவும் போராடினார்கள். யாருமே முன் வந்து உதவவில்லை என்ற புகாரில்லாமல், பின் துணை மட்டுமே விடிவுத்தராது என்று உணர்வு நிலையடைந்து, பெண்களுக்கு எதிரான அமைப்பை துக்கியெறியும் இலட்சிய ஆவேசத்தோடு WCC-ஐ உருவாக்கினார்கள். 'பெங்களூர் டேஸ்', 'எந்நும் நின்றெ மொய்தீன்', 'டேக் ஆப் 'போன்ற சினிமாகளில் நடித்து ஏறுமுகமாக போய்க் கொண்டிருந்த வேளையிலிருந்தே பார்வதியும் WCC-யின் உரிமைப் போராட்டத்தில் தன்னை இணைத்துக் கொண்டார்.

'உயரே' சினிமா வெளிவந்து, புறக்கணிக்க முடியாத நடிகையாக உயர்வடைந்து, யாருமே தட்டிப்பறிக்க முடியாத இடத்தில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டார். மம்முட்டியின் பெயரைச் சொல்லி இணையதள மிரட்டல் விடுவிக்கப்பட்ட கூட்டத்தினர் முன்பே மம்முட்டி பிரதான கதாநாயகனாக நடித்த 'புழு' சினிமாவில் ஒரு கதாபாத்திரமாக நடித்து உச்சத்தைத் தொட்டார். அப்போது மாநில, தேசிய விருதுகளும் பார்வதிக்கு கைவரப் பெற்றன. பிறகு தமிழிலும் ஹிந்தியிலும் நடித்து தன்னுடைய திறமையை வெளிப்படுத்தினார். 'தனிமைப்பட்டுப்போன எங்களுக்கு யாரும் உதவ முன்வர வேண்டாம்; எங்களுக்கானதை நாங்களே தேடிக் கண்டுப்பிடித்து கொள்வோம்' என புதிய முழக்கத்தோடு வந்தார். இது வெள்ளித்திரையில் உள்ள பல பெண்களுக்கு புதுத் தெம்பைக் கொடுத்தது.

WCC உடனான தனது பயணத்தைக் குறித்து, திரைப்படத்துறையில் தனது செயல்பாடுகளைக் குறித்து ஒப்புக்கு இல்லாமல் பரந்த அளவிளான விவாதத்தை முன்னெடுக்கும் படியாக 'மாத்ருபூமி' இதழுடன் பார்வதி தன் கருத்துகளை இந்த நேர்காணலில் பகிர்ந்துக்கொண்டார். தானும் ஒரு அங்கமாக இருக்கின்ற இயக்கத்தை குறித்தும் வெளிச்சத்துக்கு வர வேண்டிய அநீதிகளைக் குறித்தும் தனிப்பட்ட முறையில் பல கருத்துக்களை இதம் வழியே முன்வைக்கிறார் பார்வதி திருவோத்து...

**மலையாளத் திரைத்துறையில் மட்டுமல்ல இந்திய திரைத்துறை வரலாற்றிலும் ஒரு அடையாளமாக மாறியிருக்கிறது WCC. யாருடைய ஆதரவுமில்லாமல் பெண்கள் தூக்கி நடக்கிற இயக்கம் என நகைப்பிற்கிடமாகும் அவசியமும் இனிமேல் இல்லை. இவ்வாறான மாற்றத்தை எவ்வாறு பார்க்கிறீர்கள்?**

*இந்த மாற்றத்தின் பாய்ச்சலைக் காணும் போது மகிழ்ச்சியாக இருந்தபோதிலும் இந்த மாற்றத்திற்காக ஏழு வருடம் காத்திருக்க வேண்டியதை நினைக்கும் போது கவலையாக இருக்கிறது. முதல் முதலில் நாங்கள் சொல்வதை புரிந்துகொள்ளாமல் எதற்காக இவ்வாறு நடந்துகொண்டார்கள் என்ற குழப்பம் என் மனதில் இன்னும் இருந்து கொண்டிருக்கிறது. மாற்றம் வருவதற்கு காலம் அதிகம் ஆகுமென்றும் அதனிடையே நாம் தீர்ப்பை எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை என்றும் WCC-இல் உள்ள சகோதரிமார்களிடமும் தோழிமார்களிடமும் அனைத்தையும் நினைவுப்படுத்தி, ஆற்றுப்படுத்த வேண்டியிருந்தது. உதவியற்ற நிலைக் கண்டும் உற்சாகமிழக்கச் செய்யும் வார்த்தைகளைக் கேட்டும் கடந்து சென்ற வேளையில், இந்த அங்கீகாரம் கிடைத்தது, சமூகத்தின் பல துறைகளைச் சார்ந்த சிலரின் துணைக்கொண்டு மட்டுமே. சமூக அமைப்புகள், சினிமா விமர்சகர்கள், அரசியல் ஒருங்கிணைப்பு இது எல்லாவற்றின் துணைகொண்டுதான் WCC வளர்ந்தது. இனிமேலும் செய்வதற்கு நிறைய இருக்கிறது. WCC-இன் துணை கொண்டுதான் நான் முழுமையாக, எனக்கான அடையாளங்களோடு திரும்பி வருகிறேன். ஏழு வருடங்களானாலும் பின்வாங்காமல் முன்னோக்கி மட்டுமே சென்றோம் என்பது சாதாரண விஷயமல்ல. பலரும் தனிப்பட்ட காரியங்களை தள்ளி வைத்து, தியாகம் செய்து, இயக்கத்தை அடியொற்றி உறுதியாக நின்றார்கள்.*

**யாருக்கெல்லாம் நன்றி சொல்ல விருப்பப்படுறீங்க?**

*நீண்ட பட்டியலே உள்ளது. ஏழு வருடங்களானாலும் முன்வைத்தக் காலை பின்வைக்காமல் முன்னோக்கிச் சென்றோம் என்பது எளிதான விஷயமல்ல. பல சொந்தக் காரியங்களை நாங்கள் தவிர்க்க வேண்டியிருந்தது. பல விஷயங்களை விட்டுக் கொடுத்தோம். கலைத் துறையை விட்டு வேறு அலுவலகப் பணிக்கு சென்றவர்கள் எங்கள் கூட்டத்தில் இருந்தார்கள். இருப்பினும் அவர்கள் உறுதியாக நின்றார்கள். தனித்து விடப்பட்ட நடிகையுடைய தைரியம்தான் எங்களுக்கு வழிகாட்டியாக இருந்தது. அதனால்தான் தொடக்கத்திலிருந்தே அவருடைய போராட்டத்தின் தீவிரத் தன்மையை உணர்ந்துகொண்டு நாங்கள் அவர் பக்கம் நின்றோம். பெரிய பதவியில் இருக்கும் ஒரு பெண் வழக்கறிஞர் எங்கள் பக்கம் இருந்தார். நீங்கள் எதற்காக இந்த அமைப்பைத் தொடங்கினீர்கள் என்ற அர்த்தம் உங்களுக்கு இப்போது புரியாது என்று அவர் எங்களுக்கு சொல்லியதுண்டு. இன்றுதான் அதற்கான விடைக் கிடைத்தது.*

**AMMA-வில் இருந்துகொண்டு கழிவறைக்காக போராட்டம் நடத்தியப் போதும் சரி, தனித்து விடப்பட்ட நடிகைக்காக களத்தில் நிற்கும் போதும் சரி, இத்தனை சிரமங்களை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும் என நினைத்துப் பார்த்ததுண்டா?**

*ஒன்றில் இவ்விடத்தை விட்டு அகன்று விட வேண்டும்; இல்லையென்றால் இங்கே தன்னை நிலைநிறுத்திக் கொண்டு எல்லோரும் கவனிக்கும் படி வாழ வேண்டும். இது இரண்டும்தான் நாம் செய்ய வேண்டிய காரியம். தொழில் செய்யுமிடத்தில் மரியாதையில்லாமல் நாம் இருப்பதற்கு அவசியமில்லை அல்லவா? களத்தில் நின்று போராடுவோம் என்று சற்று குழப்பத்தோடுதான் எங்களில் பலரும் நின்றோம். நாங்கள் சொல்வது சாதாரணமான எல்லோரும் உடன்படக்கூடிய விஷயம்தானே, அதனால் எதிர்ப்பு உருவாகாது என நம்பினோம். அதெல்லாம் திடீரென மாறியது. எல்லா நெருக்கடிகளையும் எதிர்கொள்ள நாங்கள் தயாராகிய போதும் முதல் மூன்று மூன்றரை வருடங்கள் சொல்லில் அடங்காத வேதனைகளை எதிர்கொண்டு கடந்து சென்றோம். இப்போது கஷ்டங்களின் பின்னால் உள்ள பலனை நாங்கள் அடைந்திருக்கிறோம். அதனால்தான் ஒரு நாள், நாங்கள் செய்யும் காரியங்கள் எத்தனை சிறியதானாலும் பெரியதானாலும் முன்வைத்தக் காலை பின்வைக்கக் கூடாது என்பதை உணர்ந்தோம். இனிமேல் என்ன நிகழ்ந்தாலும் குறிக்கோள்தான் முக்கியம் என்பது சிந்தையில் நிறைந்திருக்கிறது. எல்லோரும் பாதுகாப்பாக அவரவர் கலையில் கவனம்பெறும் வகையில் தொழில் கிடைக்க வழிவகை பெற வேண்டும். இந்த குறிக்கோள் நோக்கை இழந்துவிடாமல் பார்த்துகொள்வோம்.*

**பல்வேறுப்பட்ட பெரிய கதாபாத்திரங்களை ஏற்று நடித்ததற்கு பின்னால் சமூக ஊடகங்களின் பின்புலம் இருந்தது. 2018-இல் செய்தியாளர் சந்திப்பில் என நினைக்கிறேன்; முகம் வாடி, கண்ணீர் தழும்பி நின்ற பார்வதியின் முகம் இன்னும் எனது மனதில் உண்டு...**

*2017-இல் ‘கசபா’ திரைப்படத்தின் சர்ச்சைக்கிடையில் நான் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என பாடம் எடுத்தனர். இது பார்வதி எனும் தனி மனுசிக்கான விஷயமல்ல; இது எல்லாப் பெண்களுக்குமான போராட்டம் என்ற நிலைப்பாடு வெளிப்படையாக எல்லோருக்கும் சென்று சேர்ந்தபோதுதான் எதிர்ப்புகளை நான் எதிர்கொண்ட விதம் மாறியது. ஆனால், 2018-இல் நான் நடத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்தில் பத்திரிகையாளர்களின் எதிர்வினையை என்னால் எதிர்கொள்ள இயலவில்லை. சில பத்திரிகையாளர்கள் பாலியல் ரீதியில் துன்புறுத்தப்பட்டவர்களின் பெயர்களைச் சொல்லவில்லை அல்லவா என்ற ரீதியில் அணுகினார்கள். புகார்களைச் சொல்ல விரும்பாத பெண்களை அவமதித்தவர்களையும் AMMA-விலிருந்து ராஜினாமா செய்தவர்களின் கடிதத்தையும் அந்த பத்திரிகையாளர்கள் சந்திப்பில் நான் வெளியிட்டேன். நான் AMMA-விலிருந்து வெளியேறக் காரணம் அந்த கடிதத்தில் இருந்தது. தைரியத்தோடும் ஆற்றல்கொண்டும் ஒவ்வொரு வரியையும் வாசித்துக் கொண்டிருக்கும் போதும் மனதளவில் தகர்ந்து கொண்டிருந்தேன்.*

வார்த்தை தடுமாறியது, தைரியமாக இரு என என்னை நானே சொல்லிக்கொண்டு வாசித்துக் கொண்டிருந்தேன். சில பத்திரிகையாளர்களின் பச்சையான கேள்விகளை எதிர்கொள்ளும் தோறும் நாங்கள் ஒருவருக்கொருவர் மேசையினடியில் கைகோர்த்தபடி தைரியப்படுத்திக் கொண்டோம். அப்போதைய மனோபாவங்கள் எல்லாம் இப்போதைய பத்திரிகையாளர்களிடம் இல்லை என்பதே மகிழ்ச்சிகரமானது.

**அவ்வாறான பத்திரிகையாளர்களின் எதிர்வினை உங்கள் நம்பிக்கையை சீர்க்குலைத்ததா? எவ்வாறு அவ்வாறான எதிர்வினைகளை WCC வழியே கடந்து வந்தீர்கள்?**

பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் நடந்த நிகழ்வு, கற்பனையான எதிர்பார்ப்புகளை தள்ளி வைத்து, யதார்த்தத்தோடு விஷயங்களை பார்க்கத் தூண்டியது. நிறைய விஷயங்கள் யதார்த்த உலகின் உளவியலைப் புரிந்துகொள்ள உதவியது. இனி யாரெல்லாம் நம்மோடு இருப்பார்கள்; இனி யாரும் இல்லையென்றால் கூட நாம் என்ன செய்யவேண்டும்? நாம் தொடர்ந்து இந்தத் துறையில் நீடிக்க முடியுமா? என்பனப் போன்று சிந்தித்துக்கொண்டு, மிகவும் மோசமான காரியங்களை கண்டுகொண்டு முன்னோக்கிச் செல்ல நாங்கள் கற்றோம்.

ஹேமா கமிட்டி ரிப்போர்ட் வெளிவரும் என்ற எதிர்பார்ப்பு எங்களிடமிருந்து எப்போதோ அணைந்து போயிருந்தது. இனி அது வெளிவரவில்லையென்றால் தலைகீழாக மாற்றம் நிகழாதிருக்க என்னுடைய மனசை நான் பழக்கப்படுத்தியிருந்தேன். இருப்பினும் எதிர்பார்ப்போடுதான் இருந்தேன். இனிமேல் அணையாது என என் உள் மனது தொடர்ந்து ஓசையெழுப்பிக் கொண்டிருந்தது. ஒரு வழி அடைத்தால் மற்றொரு வழி திறக்கும் என்ற நம்பிக்கையின் ஊடே நாங்கள் எல்லோரும் கிடைக்க வேண்டிய சமூக நீதியும் உரிமையும் சரியான வாய்ப்புகளை பெற்றுத்தரும்படியான சினிமா உலகம் உருவாகும் என்ற எதிர்பார்ப்பு எங்களுக்கிருந்தது. நான் எதிர்பார்த்த பல வாய்ப்புகள் நழுவிச் சென்றப் போதிலும் ஒற்றைச் சிந்தனையோடிருக்கும் சகோதரிமார்கள் நம்பிக்கை இழக்கக் கூடாது என ஞாபகப்படுத்திக் கொண்டேயிருந்தேன்.

**சரியான கருத்து சுதந்திர நிலைபாடுள்ள உறுபினர்களை WCC கொண்டுள்ளது. அறுதியிட்டுச் சொன்னால் உள்ளுக்குள் அபிப்ராய பேதம் இல்லாமல் இருக்காது. அந்த அபிப்ராய பேதங்களை ஏற்றுக்கொண்டு கருத்துச் சுதந்திர முன்னுரிமையோடு எல்லோரையும் எவ்வாறு ஒருங்கிணைத்து கொண்டு செல்கிறீர்கள்?**

நாங்கள் சேர்ந்து தொடங்கும் போது வெறும் பதினாறு, பதினேழு பேர்தான் இருந்தோம். அதன்பிறகு நிறைய பேர்கள் வந்து சேர்ந்தார்கள். உரையாடல்கள், கருத்து மோதல்கள், பயிற்சிப் பட்டறைகள், இவைகளை நடத்தி எங்களை நாங்களே வலிமைப்படுத்திக் கொண்டு சமகால சூழல் குறிந்து கூடுதல் விழிபுணர்வடைந்து அறிவு பெற்று, முன்னே போகும் வழிகளை நாங்கள் கண்டடைந்தோம். ஒரு இலட்சிய பாதையை முன்வைத்து மற்ற சில்லறைத்தனமான குற்றச்சாட்டுகளை கண்டுகொள்ளாமல் ஒரு ஆரோக்கியமான பாதைக்கு திரும்பினோம். ஒரு கூட்டுச் செயல்பாடு என்ற நிலையில் எங்களுடைய முன்னெடுப்பு தொழில் செய்யும் உரிமையும் அதில் ஏற்படும் பிரச்சனைக்கு தீர்வும் காண வேண்டும் என்பதாகும். சினிமா நடைமுறைச் சட்டம் வெளியே வந்ததை நாங்கள் வரவேற்பது இந்த அடிப்படை உரிமையை பெற்றுக் கொள்வதற்காகத்தான். மற்றபடி பரஸ்பரம் குற்றச்சாட்டுக்களை கூறிக் கொண்டிருப்பது எங்களது நோக்கமல்ல. பாதுகாப்பாகவும் கௌரவத்தோடும் சமூக நீதியோடும் தொழில் செய்யுமிடம் இருக்க வேண்டுமென்று நினைக்கிறோம். எத்தனை காலம் ஆனாலும் மாற்றம் வரும் என்று உறுதியாக நம்புகிறோம். அது வரைக்கும் எங்கள் கூட்டுச்செயல்பாடின் குரல் ஒலித்துக் கொண்டேயிருக்கும்.

**2018-இல் நடந்த பத்திரிகையாளர் சந்திப்பொன்றில் WCC பாகத்திலிருந்து பெரிய அளவில் 'மீ டு' வெளிப்படும் என ஊடகங்களிடம் எதிர்பார்ப்பிருந்தது. 'மீ டு' எனச் சொல்லும் இயக்கத்தின் போக்கை மாற்றும் காரியத்தைத்தான் இந்த ஊடகங்கள் தீவிரமாக முன்னெடுக்கின்றன என அபிப்ராயப்பட்டிருந்தீர்கள். இந்த எண்ணத்திற்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்?**

நாம் தண்டிக்கப்பட மாட்டோம்; பிடி கிடைக்க மாட்டோம் என்ற துணிச்சலில், ஒரு கும்பல் வேட்டைக்காரர்கள் நல்லவர்கள் போல் வேஷமிட்டு நடித்துக்கொண்டு, சுதந்திரமாக நடமாடித் திரியும் காலகட்டத்தில்தான், ஒரு கூட்டம் பெண்கள் தாங்கள் பாலியல் சுரண்டல், பாலியல் அத்துமீறலுக்கு உள்ளாக்கப்பட்டதையும் வெளிப்படையாக பேசினார்கள். இவ்வாறு ஏமாற்றப்பட்டதைப் பற்றி பேசாமல் மௌனமாக இருக்க முடியாது. வேட்டைக்காரர்களின் வழி இனி மிக எளிதாக இருக்க முடியாது என்ற அறிவிப்பைச் சொல்வதுதான் 'மீ டு'வின் முக்கியத்துவம் வாய்ந்த வரலாறு. வெளிப்படையாகப் பேசுவதன் வழியே பூச் செண்டுகளல்ல கல்லெறிகள் தான் கிடைக்கும் எனத் தெரிந்தும் பெண்கள் பேசத் துணிந்தார்கள். பல பெண்களுக்கும் அது அவர்களுடைய மோசமான நடவடிக்கையின் நாடகத்திலிருந்து மனம் சமாதானமடைந்து தப்பித்தலுக்காக வேண்டி இருக்கலாம். அறம்சார்ந்த நிலையில் அவர்களின் வெளிப்படையானப் பேச்சு இருக்கும் பட்சத்தில் 'மீ டு' இயக்கத்திற்கு அது வலு சேர்க்கும் விதமாக இருக்கும். தொடரும் ஒவ்வொரு 'மீ டு'வின் போதும் ஒளிந்திருந்தவர்கள் இன்று பொது சமூகத்தின் முன்பு வெளிப்பட்டு நிற்கிறார்கள். நீதி கிடைக்க காலதாமதமாகும் தோறும் வெளிப்படையாக பேசிய

*ஒவ்வொரு பெண்களும் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டி வரும். இதையெல்லாம் புரிந்துகொண்டுதான் பலரும் இந்த துறைக்குள் வருகிறார்கள். இருப்பினும் பாதுகாப்புணர்வு கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லாமல், குடும்பத்தினரின் துணையில்லாமல் இருக்கும் பெண்களும் இந்தக் கூட்டத்தில் இருக்கிறார்கள். இதையெல்லாம் கவனத்தில் கொண்டு ஆராயாமல் வேட்டைக்காரர்களின் பெயரைச் சொல்லு, புகார் கொடு எனப் பெண்களிடம் கட்டாயப்படுத்துவது சரியான நடவடிக்கையல்ல. தனிமைப்பட்டுப் போன பெண்களுக்கு சட்டரீதியான பாதுகாப்பு கிடைக்குமா என்பதை தெளிவுப்படுத்த வேண்டும். அதனால்தான் புகார் கொடுக்கவோ முன்னடுத்துச் செல்லவோ எந்தப் பெண்ணையும் கட்டாயப்படுத்தவில்லை. கட்டாயப்படுத்தவும் முடியாது.*

**பாதிக்கப்பட்டவர்களின் வெளிப்படையான பேச்சு, தேவையான ஒன்றுதான். ஆனால், பெண்கள் எதிர்கொள்ளுகின்ற பிரச்சனைகள் எல்லாம் பாலியல் சுரண்டல் என்கிற இடத்தில்தான் கொண்டுபோய் விடுகிறது. ஹேமா கமிட்டி சர்ச்சைகள் 'மீ டூ'வாகச் சுருங்கிப் போனது என கருதுகிறீர்களா?**

*சமூகநீதிக்கான இந்த முன்னெடுப்பு ஒற்றை முயற்சியில் தீர்வு கிடைக்கக் கூடியதல்ல. ஆரம்பத்தில் பல தடைகள் ஏற்படுத்தி இதை சுருக்கவும் இல்லாமல் ஆக்கவும் பல முன்னெடுப்புகள் நடந்தன. ஆனால், தீர்வை வேண்டி நடந்த இந்த இயக்கத்தின் செயல்பாட்டை ஒரு இடத்தில் நிறுத்தவோ முடக்கவோ முடியவில்லை. ஒவ்வொருவரின் அனுபவங்களும் இதற்கு பங்களிப்பு செய்து துணையாக நின்றன. இவ்வாறான சம்பவங்கள் நடக்கும் போதெல்லாம் இதனுடைய முக்கியத்தும் குறித்து மற்றவர்களை உணரச் செய்தோம். எந்த வகையான விவாதங்கள் நடந்தாலும் தீர்வுக்கான வழி ஒன்றே குறிக்கோளாகயிருந்தது. பாலியல் சுரண்டல்கள் குறித்து எத்தனை விவாதங்கள் நடந்தாலும் ஒரு கட்டம் வந்து சேரும் போது அதன் தீர்வு என்னவென்ற கேள்வி பொது சமூகத்திற்கு வருமல்லவா? அந்த தீர்வை நோக்கி நகர வேண்டுமென்றால் தொடர்ந்து அதைக் குறித்து விவாதங்கள் நடக்க வேண்டும். இதனால் இது தொடர்புடைய பலதும் வெளிவரும். பாலியல் சுரண்டலுக்குட்பட்டவர்கள் எதிர்கொள்ளும் நெருக்குதல்கள், அவர்களுக்கு கிடைக்காமல் காலதாமதமாகும் நீதி, இவையெல்லாம் நமது நாட்டில் கவலைகொள்ளச் செய்யும் விஷயமாகும். அதனால் விவாதங்கள் தொடர்ந்து நடப்பது நல்லது தானே? இவ்வாறு பல விவாதங்கள் நடத்தப்பட்டுத்தானே விதிகள் உருவாகி அரசியலமைப்பு சட்டமாக வந்தது. ஒரு காலத்தில் இப்படிப்பட்ட விஷயங்கள் விவாதப் பொருளாக ஆக்கப்பட்டதில்லை. இப்போது அதில் மாற்றம் வந்திருக்கிறது. இனியும் மாறும்.*

**'மீ டூ' இயக்கத்தை இல்லாமலாக்க அதன் மீது சுமத்தப்பட்ட தவறான குற்றச்சாட்டுகளை எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும் என நினைத்தீர்கள்?**

*எந்த ஒரு போராட்டத்தையும் தகர்ப்பதற்கான முயற்சிகள் நடக்கும் என்பது இயல்பான விஷயம்தான். பாலியல் சுரண்டல் ஏற்பட்டு அதை வெளிப்படையாகச் சொல்ல விருப்பமுள்ள பெண்களுக்கு நம்பிக்கை ஏற்படும் ரீதியிலான அமைப்பு முன்காலத்தில் இருந்ததில்லை. ஹேமா கமிட்டி விவாதங்களுக்கு பிறகு பாதிக்கப்பட்டவர்களுக்கு நன்மை கிடைக்கும் அணுகுமுறையின் வழியே, பொது சமூகத்திற்கும் அமைப்பிற்கும் இடையே நல்ல மாற்றங்கள் உருவாகியுள்ளது. 'இது தவறான குற்றச்சாட்டாக இருக்கும்? சினிமாத் துறையை இல்லாமலாக்கும் குற்றச்சாட்டாக இருக்கலாமோ? உண்மையான குற்றச்சாட்டு இதுவாகத்தான் இருக்கும்?' என்று பல யூகங்களை உருவாக்கி, யாரும் தீர்ப்பு சொல்வதற்கு சட்டப்படி உரிமையில்லை; இருப்பினும் நாங்கள் பாதிக்கப்பட்டவர்கள் பக்கத்தில் நிற்பதுதான் எங்களுடைய நிலைப்பாடு.*

*பாதிக்கப்பட்டவர்கள் வெளிப்படையாக குற்றச்சாட்டை முன்வைத்தால் இதையேன் முன்னமே சொல்லவில்லை எனக் கேட்கிறார்கள். சாட்சியில்லாமல் எப்படி நம்பமுடியும் என்பன போன்ற கேள்விகள்தான் நமது சமூகத்தின் பொதுவான நிலைபாடு. இனிமேல் வெளிப்படையாக சொல்லவில்லையென்றாலோ நீங்கள் செய்வது சரியல்ல, தைரியமாக சொல்ல முன்வர வேண்டும் என்பன போன்று சொல்வார்கள். நான் ஒரு கேள்வி கேட்கட்டுமா. பெண்கள் எந்த நம்பிக்கையின் அடிப்படையில் வெளிப்படையாக பேச வருகிறார்கள்?*

*காலம் தாமதித்து கிடைக்கும் நீதியும் கேலியாகப் பார்க்கப்படும்பொது சமூகத்திற்கு முன் நின்று கொண்டு, அவள் பக்கம் அல்லவா நாம் நிற்க வேண்டும்? அது தானே மனிதாபிமானம். அதற்குப் பதிலாக யார் பாதிப்படையச் செய்தார்களோ அவர்களுக்கல்லவா முன்னுரிமைக் கொடுக்கிறோம்.*

**பாலியல் துன்புறுத்தலுக்கு உள்ளாக்கப்பட்ட நடிகையின் துணிச்சல் மிக்கப் போராட்டத்தின் பின்னணியில் WCC – யின் முக்கியத்துவம் இருந்தது. தனிப்பட்ட முறையில் பார்வதியின் பங்களிப்பும் எவ்வளவு தூரம் இந்த விஷயத்தில் அவருக்கு துணையாக இருந்தது?**

*பாதிக்கப்பட்டவர் அனுபவித்த வேதனை, பயம், தனிமை, ஏமாற்றம், புறக்கணிப்பு, தாமதமாகும் நீதி இது பற்றியெல்லாம் யாரும் விவாதத்திற்கு உட்படுத்தவில்லை. நான் அவரைப் பற்றி ஞாபகப்படுத்தி பார்க்கும் போதெல்லாம் அவருடைய ஒரு சாதாரண நாள் எப்படியிருக்கும் என்று சிந்திப்பது உண்டு. ஒரு பெரிய நாடகம் போல் கடந்துப் போகிற விஷயமல்ல; வெளிப்படையாகப் பேசுவதன் வழியே வருந்தத்தக்க*



பல கேள்விகளை எதிர்கொண்டு நல்ல ஒரு வாழ்க்கையை வாழ வேண்டி தன்னைப் புதிப்பித்துகொள்வது என்பது அவ்வளவு எளிதானதல்ல. இதையெல்லாம் அனுபவித்துக் கொண்டு இந்த போராட்டத்தை அடுத்தக் கட்டத்திற்கு எடுத்துப் போவதைக் காணும் போதெல்லாம் அவர்மீது மரியாதைக் கூடுகிறது. இப்போதும் அவர் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆதரவான போராட்டம் தொடர்ந்து கொண்டிருக்க வேண்டுமென்று விருப்புகிறார். பாதிக்கப்பட்டவர் என்ற காரணம் கொண்டுதான் அவர் மீண்டெழ முடிந்தது. இன்னும் அதிக சுமைகளை அவர் பேரில் ஏற்றக் கூடாதென நினைக்கிறேன்.

**நடிகை மீது பாலியல் அத்துமீறல் நிகழ்ந்த வழக்கில் குற்றவாளியான பள்ஸர்சுனிக்கு முன் ஜாமின் வழங்கப்பட்டிருக்கிறது. இதெல்லாம் வழக்கு தொடுத்தவரின் நம்பிக்கையை சீர்குலைக்கும் விஷயமாக கருத முடியும். அந்த சமயத்தில்தான், ஹேமா கமிட்டி அறிக்கைக்குப் பிறகு வெளிப்படையாக பேசலாமே? புகாரளிக்கக் கூடாதா? போன்ற கேள்விகள் பல திசைகளிலிருந்தும் கேட்கத் தொடங்கியது.**

பாதிக்கப்பட்டவர்களில் எத்தனை பேருக்கு நியாயமான நீதி கிடைத்திருக்கிறது என்பதை நாம் எண்ணியே சொல்லிவிடலாம். கிடைத்திருக்கவும் செய்யலாம். ஆனால், இதெல்லாம் எவ்வளவு காலத்திற்கு பிறகு கிடைத்தது. வெளிப்படையாக பேசியதினால், தான் பார்த்து வந்த வேலையையும் சொந்த பந்தங்களையும் சாதாரணமான வாழ்க்கையையும் இழந்த எத்தனையோ பேருண்டு. சமூகம் கைவிட்டு விடுவது, தனிமைப்படுத்தப்படுதல் போன்ற பல இழப்புகளையும் எதிர்கொள்ள வேண்டியது வரும். காசு, பணம் உள்ள குற்றவாளிகள் வழக்குகளை 9, 10 வருடங்கள் என நீட்டிக்கச் செய்வார்கள்.

வழக்காடு மன்றத்தில் குற்றவாளிகளிடம் வழக்குக்கு சம்பந்தமற்ற கேள்விகளை கேட்டுவிட்டு, வெளியே கடந்துபோகும் குற்றவாளியிடம் 'உன் உடலை காண்பி ' என ஒரு நீதியரசர் சொன்னதாக வெளிவந்தச் செய்தியை படித்திருக்கிறேன். உண்மையில் இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் பாதிக்கப்பட்ட பெண்களின் பயணமும் இருக்கிறது. இதுதான் யதார்த்த காட்சிகள். இப்படியிருக்கும் போது பெண்களிடம் நீங்கள் புகாரளிக்கவில்லையா என கேட்பது பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதியல்லவா? இவ்வாறு வழக்குகள் நீண்டுச் செல்லும் போது குற்றவாளிகளுக்கு ஜாமின் கிடைக்கிறது. காலதாமதாகும் போது நீதி மறுக்கப்படுகிறது. இதெல்லாம் நடந்து கொண்டிருப்பதை அறிந்த பின்பும் பாதிக்கப்பட்ட பெண்கள் பராதிக் கொடுக்கவில்லை என்ற ரீதியில் அவர்களை அணுகுவது கவலையளிப்பதாக இருக்கிறது.

**ஐ கேன் ஹே செக்ஸ் வித் யூ? எனபெண்களிடம் ஆண்கள் வெளிப்படையாக கேட்பதில் தவறொன்றுமில்லை என்றும் ஒரு 'நோ'வில் முடிந்து போகும் காரியம்தான் என்பன போன்ற விளக்கங்களை கொடுக்கும் சில நடிகர்கள் நமது திரைப்படத் துறையில் இருக்கிறார்கள். பணிசெய்யும் இடங்களில் பெண்களிடம் கேட்கப்படும் இது போன்ற கேள்விகள் முன்னேற்றமடைந்த சமூகத்தின் குணங்களில் ஒன்றுதானே என நினைப்பவர்களுக்கு என்ன சொல்கிறீர்கள்?**

ஒருவரின் உரிமை என்ன என்பதை குறித்து முதலில் புரிதல் வேண்டும். முறையற்ற பழகலுக்கும் நட்போடு பழகலுக்குமான எல்லை என்ன என்பதனை புரிந்துகொள்ளாமல் போவதுதான் இதுபோன்ற கேள்விக்கான மூலக்காரணம். தொழில் செய்யுமிடத்தில் வந்து இது போன்ற கேள்விகள் கேட்கப்படுவதை இயல்பாக எடுத்துகொள்ள வேண்டுமெனில் 'நோ' சொன்னால் அந்த பெண்கள் அதன் பிறகு பல விதங்களிலும் நெருக்கடிகளை சந்திக்க மாட்டார்கள் என்பதற்கு உத்திரவாதம் உண்டா? 'நோ' சொன்னால் நெருக்கடிகளைச் சந்திக்க வேண்டி வருமோ எனப் பயந்து 'எஸ்' சொல்ல வேண்டிய அவல நிலைக்கு பெண்கள் தள்ளப்படுகிறார்கள். வலுக்கட்டாயமாக ஒப்புகொள்ளச் செய்வது போல்தானே இதுவும். தனிமைப் படுத்தப்படுத்துதல், புறக்கணித்தல், அழுத்தம் கொடுத்தல், எதிர் நடவடிக்கைகள் போன்றவைகள் ஒரே ஒரு 'நோ' சொன்னதற்காக பெண்கள் அனுபவிக்க வேண்டிய தண்டனையாகிறது. இதுதான் சமகாலத்து சமூகச் சூழ்நிலை.

முன்னேற்றமடைந்த நாகரிகத்தின் ஒரு பகுதியாக, செக்ஸ் கேட்டால் என்னக் குற்றம் என்று கேட்கிற ஆண்களுக்கு என் கேள்வி, 'நோ' சொன்னால் விட்டு விலகி அதற்கு பின் நெருக்கடிக் கொடுக்காமல் நடந்துகொள்வீர்களா என்பது மட்டுமே.

காமம் என்பது இயல்பான விஷயம் என்ற விவாதத்தை முன்வைத்தால் கூட காமம் உருவான

*உடனே பெண்கள் அதை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் என்றிருக்கிறதா என்ன? அது பெண்களின் கடமையும் அல்ல.*

**கலைஞர்கள் என்ற நிலையில் தினமும் இது போன்ற பிரச்சனைகளை சந்தித்து முன்னோக்கிப் போகும் போது உங்கள் இயங்கு திறன் பாதிக்கப்படும் அல்லவா? நிம்மதியாக பணிச் செய்ய வேண்டிய ஒரு சூழல் வேண்டாமா?**

*நிறைய நிறைய. WCC ஆட்கள்தானே நீங்கள் என ஒதுக்கி வைத்து பலரும் கடந்து செல்வார்கள். அழகுணர்சியோடு கற்பனையும் கலந்து பணி செய்பவர்களுக்கு கிடைக்க வேண்டிய சில விசயங்கள் உண்டு. கூட்டுச் செயல்பாடுகளுக்கிடையே நிறுத்தற்குறி வைத்தாற்போல் நின்று கொண்டு கதையைப் பற்றி சிந்திக்கவோ நடிக்கவோ முடியவில்லை. நிரந்தரம் போராடுவதால் ஏற்படும் கோபம், கவலை இதையெல்லாம் மடைமாற்றிக் கொண்டுதான் புதிய வாய்ப்புகளை உருவாக்கிக்கொள்கிறோம் எங்களில் பலரும். ஒரு 'ஆர்ட்டிஸ்ட்' என்ற நிலையில் பெரிய வெற்றியாகக் கருதுவது இதைத்தான். ஆனால், சமூக நீதி கிடைக்க நடத்தும் போராட்டம் வெற்றியடைய வேண்டித்தான் நாம் இங்கு நிற்கிறோம் என்ற உறுதியான நம்பிக்கை எங்களுக்குண்டு. ஒரு வழியுமல்லாமல், அதாவது எந்த ஒரு மாற்றுவழியுமல்லாமல் இங்கு இருப்பதற்கு காரணம் இந்த அடக்குமுறையை மாற்ற வேண்டிதான். பணி வாய்ப்புகள் கிடைக்காமல் இருப்பதென்பது பிரச்சனைதான். ஆனால், பணி கிடைக்க நெருப்புப் பிழம்பாக மாறியிருக்கிறோம்.*

*தயாரிப்பாளர்களுக்கு பிடிபடாத விஷயம் ஒன்று உண்டு. எங்களுக்கு கிடைக்கும் ஒவ்வொரு வாய்ப்பையும் இல்லாமலாக்கும் காரியத்தை அவர்கள் தொடர்ந்து செய்து கொண்டிருப்பார்களானால் ஒன்றுமில்லாமல் அவர்கள்தான் நடுத்தெருவில் நிற்பார்கள்.*

**குற்றச்சாட்டுக்கு உள்ளான நடிகர்களான சித்திக், அலன்சியரோடு இணைந்து இரண்டு திரைப்படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆழமாக வேரிட்டிருக்கும் சித்தாந்தத்தை கருத்திற்கொண்டு இவர்கள் போன்றோரோடு உங்களைப் போன்றவர் துணைநிற்பது நியாயமில்லை என நினைக்கிற சில பேராவது இருப்பார்கள். அவர்களோடு இந்த விஷயத்தில் பகிர்ந்துகொள்ள விரும்புகின்ற உங்கள் தரப்பு நிலைபாடு என்ன?**

*எனக்கு கிடைத்த சில முன்னுரிமை என்பது ஒரு வரயறைக்குட்பட்டது. அதற்குள் நின்றுகொண்டு பல விஷயங்களையும் புறக்கணிக்க முடிந்திருக்கிறது. சில விஷயங்களை புறக்கணிக்க முடிந்திருக்கவில்லை. பலரோடு பணி செய்ய வேண்டாமென்று முன்பே முடிவுச் செய்திருக்கிறேன். அதனால் ஏற்பட்ட இழப்புகளை நான் இழப்புகளாக எடுத்துகொள்ளவில்லை. இதுதான் என்னுடைய கொள்கை கோட்பாடு. நான் ஒரு தயாரிப்பாளராக இல்லாமல் இருக்கும் வரை, இயக்குநர் கதைக்கேற்றவாறு தேர்ந்தெடுக்கப்படும் நடிகர்களின் விஷயத்தில் தலையிட எனக்கு உரிமையில்லை. ஒரு கட்டம் வரையில் சொல்லலாம், இவரிருந்தால் என்னால் நடிக்க முடியாதென. ஆனால், அப்போதும் கூட இழப்பு என்பது எனக்கு மட்டுமானதாகவே இருக்கும். நானில்லாமல் திட்டங்களை செயல்படுத்தி முன்னோக்கிப் போவார்கள். இதுமாதிரியான பல காட்சிகளை பார்த்து கடந்து செல்வதுண்டு. நாம் பார்க்க வேண்டியது நம் கட்டுப்பாட்டில் என்ன இருக்கிறதென்பதல்ல. பழிகள் சுமத்தப்படுவதும் பாதிக்கப்படுவதும் அதிலிருந்து எழுந்து வர முயற்சிச் செய்வதும் நாங்களல்லவா? அதனால்தான் தவறை சரியாக்க வேண்டும் என்ற குற்றச்சாட்டை என்மீது வைப்பது சரியல்ல. கேள்விகள் எழுப்பப்படுவது பெண்களுக்கு எதிராக மட்டுமே. இயக்குநர் மீதோ தயாரிப்பாளர் மீதோ கேள்விகள் எழுப்பப்படுவதில்லை? அவர்களிடம் கேள்விகள் கேட்கப்பட வேண்டும் என்றல்ல. ஆனால், அவர்களிடம் கேட்கப்படவில்லை என்றால் என்னோடு எதற்கு கேட்கிறீர்கள்? காரணம் நான் தொழிலதிபர் இல்லை அல்லவா? பல காரணங்களுக்காக எத்தனையோ பெண்கள் இந்தத் துறையை விட்டு வெளியேறி இருக்கிறார்கள் என்பது தெரியுமா? பெண்களிடம் நட்பு பாராட்டாத சினிமாத் துறையில் நாம் இருக்க வேண்டாம் என்றுதான் பலரும் வெளியேறியது. அவர்களைப் போல் நீங்களும் வெளியேறுவதாக இருந்தால் வெளியேறுங்கள் என்பதுதான் உங்கள் கேள்வி என்றால், நான் வெளியேறப்போவதில்லை என்பதுதான் எனது பதில். எனக்கு உரிமையுள்ள இடத்தை நான் எடுத்துக்கொண்டு இவ் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த துறையில் என்னை நிலைநிறுத்த உறுதியோடு இருக்கிறேன்.*

**'நோ' சொல்ல முடியாமலிருக்கலாம்; அது அவர்களோட தவறல்ல என்ற செய்தியை WCC வெளிப்படையாக பேசியிருக்கிறது. அதே வேளையில் எனக்கு மோசமான அனுபவங்கள் ஒன்றும் ஏற்படவில்லை என்ற விதத்தில் ஜோமோள் உட்பட சில நடிகைகள் அறிவித்திருந்தார்கள். தவறை எதிர்கொள்ள நேரிட்டவர்கள் மோசமானவர்கள் என்றும், நாங்கள் நேர்மையாக இருப்பதால் பாதுகாப்பாக இருக்கிறோம் என்பனப் போன்றும் சிந்தை, சினிமாவில் இருக்கும் பெண்கள் பலருக்கும் இருக்கிறது.**

*இவ்வாறான சிந்தையின் அபத்தம் குறித்து நான் சொல்கிறேன். நான் பொறுப்பானவளும் ஒழுக்கமுள்ள பெண்ணாகவும் இருந்ததால் இவ்வாறான சம்பவங்களை நான் எதிர்கொள்ளாமல் கடந்து சென்றேன் என்ற சிந்தனை சிலருக்கு இருக்கலாம். ஆனால், அது தவறான எண்ணமாகும். நீங்கள் பிரிவினைகளை உருவாக்கிக் கொண்டாலும் இல்லையென்றாலும் பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் சீண்டல்கள்,*

பாலியல் அத்துமீறல்களில் பாகுபாடுகள் ஏற்படுவதில்லை. நீங்கள் ஒரு பெண்ணாக இருப்பதனால் உங்களுக்கு இது எப்போது வேண்டுமென்றாலும் நிகழலாம். அதிஷ்டத்தின் சிறிய கூறு இருப்பதால் அது உங்களுக்கு நிகழாமல் நீங்கள் தப்பித்துக் கொண்டிருக்கிறீர்கள். நமது நாட்டில் ஒவ்வொரு பதினஞ்சு நிமிடத்திலும் ஒரு பாலியல் அத்துமீறல் நடக்கிறது என தகவல் பதிவாகியிருக்கிறது. இந்நிலையில் நீங்கள் பாலியல் வன்புணர்வு, பாலியல் சீண்டலுக்கு, பாலியல் அத்துமீறலுக்கு உள்ளாக்கப்படுவதில்லை என்றால் அது அதிஷ்டமாகவே கருத வேண்டும். இனிமேலும் ஒரு பெண்பிள்ளை இவ்வாறான ஒரு மோசமான அனுபவத்தை எதிர்கொண்டு கடந்துப் போகவில்லையென்றால் அவர்களின் விஷயத்தில் நான் மிகவும் மகிழ்ச்சியுடையவளாக இருப்பேன்.

**எல்லா இடங்களிலும் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளையே சினிமாவிலும் பெண்கள் எதிர்கொள்கிறார்கள். இதில் ஏன் பாகுபாடு பார்க்க வேண்டும் என மோகன்லால் உட்பட பலர் சாதாரணமாக சொல்லிக்கொண்டு கடந்து செல்கிறார்கள். மற்றத் துறைகளை விட பெண்கள் அதிகமும் வஞ்சிக்கப்படுவது சினிமாவில் அல்லவா? இரண்டையும் ஒரு போலப் பார்ப்பது சரியானதா?**

ஒருவர் ஒருப் பிரச்சனையை முன் வைக்கும் போது மற்றவர்களுக்கும் பிரச்சனை உண்டல்லவா எனச் சொல்வது சரியான முறையல்ல. வேறொரு துறையில் அவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சனையை எனக்கு சீர்ப்படுத்த இயலாது. நீங்கள் உங்கள் வீட்டை சுத்தமாக்க வைக்கப் பாருங்கள். மீதி உள்ளவர் அவர்களுடையதை பார்ப்பார்கள். சினிமாத்துறையில் அநீதி கூடுவதற்குக் காரணம் அதை கண்காணிக்க ஒரு முறைசார்ந்த அமைப்பு இல்லாததே ஆகும். ஹேமா கமிட்டி அறிக்கை முழுமைபெறாதது என்றுதான் அது சொல்கிறது. கூடுதலானவர்களா இல்லை குறைவானவர்களா? என்ன நடக்கிறது என்பதை அறிய வேண்டுமென்றால் எப்படி அணுகுவது என்பதைக் குறித்தெல்லாம் சிந்திக்க வேண்டியுள்ளது. இவ்வாறான அறிக்கைகள் நமது பாதையை திசைத் திருப்புகிறது. இது குற்றவாளிகளாக இருக்கலாம் என நாம் சந்தேகிக்கும் நபர்கள் தப்பிப்பதற்கு வழியை உருவாக்கும். இந்தப் பயணத்தில் எங்களோடு கூட்டு சேர்ந்து வழி நடத்திய ஆண்கள் எவருமே இல்லையென்று சொல்ல முடியாது. ஆனால், உரத்த குரலில் தைரியம் தந்து துணைநின்ற ஆண்கள் குறைவு. பெண்கள் இப்போது வெளிப்படையாகப் பேசுவது பாலியல் சீண்டல்களைக் குறித்து மட்டுமல்ல. தொழில் செய்யுமிடத்தில் நிர்ணயிக்கப்பட்ட நேரத்திற்கு அதிகமாக அடிமைப் போல் வேலைச் செய்பவர்கள் மீது நிகழும் அடக்குமுறைக்கு எதிராக, அடிப்படை உரிமைகள் குறித்த புரிதலை உருவாக்குதல் என பலதைப் பற்றியும் வெளிப்படையாக பேசுகிறார்கள். இதில் பெண்கள் எதிர்கொள்ளும் நெருக்கடிகள் மட்டுமல்ல ஆண் பெண் பாகுபாடில்லாமல் எல்லாரின் பிரச்சனைகளையும் முன்வைத்துப் பேசுகிறார்கள். அதற்கான தீர்வை தேடுதல் வழியாக கண்டடைகிறோம். அதனை முன்னிட்டுதான் நீ பெரியவன் நான் பெரியவன் என்ற ஈகோவை ஒதுக்கி வைத்து ஒன்று சேர்ந்து தீர்வை நோக்கிய பயணங்களை முடிக்கி விட வேண்டும் என்கிறேன்.

**பி. உன்னிக்கிருஷ்ணன், ஹேமா கமிட்டி WCC-யிடம் மட்டுமே கேட்டிருக்கிறது என பார்வதிக்கு எதிரே சில காரியங்களை சொல்லியிருக்கிறார். WCC உருவாவதற்கு முன்பு 13 சினிமாக்கள் நடித்திருக்கும் பார்வதி, WCC வந்த பிறகு 11 சினிமாக்கள் நடித்திருக்கிறார் எனச் சொல்லியிருக்கிறார். அதாவது பார்வதிக்கு பெரிய அளவில் வாய்ப்புகள் குறையவில்லை எனச் சொல்ல வருகிறார்.**

என்னுடைய பங்களிப்பைப் பற்றி பலரும் தனிப்பட்ட விமர்சனம் செய்யும் போது அதை தனிப்பட்ட முறையிலான அபிப்ராயமாகவே பார்க்கிறேன். காரணம் அவர்கள் யாரும் என்னோடு ஒரு விவாதத்திற்கு கூட வந்ததில்லை. எங்கள் சம்பந்தப்பட்ட உரையாடலுக்கோ விவாதத்திலோ பங்கேற்காத ஒருவர் என்னைக் குறித்து தனிப்பட்ட முறையில் திடீரென குதித்து வந்து அபிப்ராயம் சொல்வதை நான் எப்படி புரிந்துகொள்வது என தெரியவில்லை. என்னைப் பற்றிச் சொல்லும் போது எனது முழு பயணத்தைப் பற்றி புரிந்துகொள்ளாமல் என்னைப் பற்றிய புள்ளிவிவரங்கள் எப்படி முழுமையாகும். ஒருவரை வேலையிலிருந்து வெளியில் தள்ளும் போது, நமது பார்வையில் காண்பது போலல்ல, அதில் பல அதிகாரமட்ட தந்திரங்கள் இருக்கும். அது நான் நடித்த சினிமாவின் எண்ணிக்கையை வைத்து தீர்மானிக்கப்படும் ஒன்றல்ல. சரி அப்படியே எண்ணிக்கையை வைத்து நாம் விவரித்து பேச முற்படுவோமாயின் கூட ஒருவன் தொடக்க காலத்தில் கிடைக்கும் வாய்ப்புகள் போலவா அவர் வெற்றிகரமான ஒருவராக மாறியபின் வாய்ப்புகள் அமைகின்றன? அப்போதும் கணக்கு சரியாகவில்லை அல்லவா? இவ்விதமான விவாதங்கள் எனக்கு புதுமையானதாகத் தோன்றவில்லை. காலங்கள் தோறும் இவ்விதமான அவநம்பிக்கை, எதிர்ப்புகளையும் கண்டு வருகிறேன். WCC பெண்களுக்கான பணிச்சூழல் பாதுகாப்பை கண்காணிக்கும் அமைப்பு. இதிலுள்ள பாதுகாப்பற்றச் சூழல் WCC-யுடன் நிற்பதில்லை. இதையும் நான் இயல்பானதுதான் எனப் புரிந்துகொள்கிறேன்.

**பல இழப்புகளை சந்திக்க நேரிடும் என்ற சுய உணர்வோடுதானே இந்தப் போராட்டத்தில் காலெடுத்து வைத்தீர்கள். தனிப்பட்ட முறையில் எதை இழந்தீர்கள்?**

எண்ணிக்கையில் அடங்கா இழப்புகளை நாங்கள் சந்தித்தோம். சொந்தபந்தங்கள், நண்பர்கள், வேலை,

உளவியல் நோய், உடல் நலம் என எல்லாவற்றையும் அது பாதித்தது. ஆனால், இதைத் தேர்வு செய்தது நானாக இருந்தேன். இழப்புகளை இழப்புகளாக தோன்றுவதை அதற்கு மதிப்பளிக்கும் போதுதான் உணர்ந்துகொள்ள முடியும். இழந்துப் போன வாய்ப்புகளை குறித்துச் சொல்ல வேண்டுமா? வாய்ப்புகளை உருவாக்கிக் கொள்வேன் என்ற ஆற்றலை நான் கடந்த காலங்களிலிருந்து பெற்றிருக்கிறேன். அதை உணர்த்தியவர்களுக்கு நன்றி. இப் போராட்டம் தொடங்கி ஏழு வருடமாகிறது. இழப்புகளை கணக்கிடுவதற்கான நேரமில்லை. குலைந்துப் போன இடத்திலிருந்து பூப்பது ஒரு புதிய பொதுஉடைமையின் அறிவு. அதிலிருந்து படிப்பதற்கு நிறைய உண்டு. பல காரியங்கள் செய்வதற்குள்ளது. அவ்வாறு பார்க்கப்போனால் இழப்பெல்லாம் வரவுதான்.

**பார்வதியின் குடும்பம் எப்படிப்பட்டது ? ஒரு தெளிந்த சிந்தனை மரபு என்பது ஒரு தலைமுறைக்கு முன்பே பார்வதிக்கு இருந்திருக்குமென நான் யோசித்தது உண்டு. குடும்பம்தானே அதன் ஆணிவேராக இருந்திருக்க முடியும்?**

அப்பாவும் அம்மாவும் தம்பியும் நானும் உள்ள குடும்பம். என்னுடைய அப்பாவும் அம்மாவும் பாலியல் உரிமைக் கோரல் எடுப்பதை நான் கண்டிருக்கவில்லை. அப்பா வீட்டிலுள்ள வேலைகள் செய்தார். அது இயல்பாகவே நடந்தது. வாழ்க்கைத் துணை என்ற நிலையில் எல்லாப் பொறுப்புகளையும் பங்கிட்டு செய்ய வேண்டுமென்ற உணர்வு ரீதியான பங்கீட்டறிவு அவர்களுக்கிடையே இருந்தது. இவற்றையெல்லாம் கண்டு வளர்ந்ததால் நானும் எனது சகோதரனும் மிகவும் அறிவுபூர்வமாக விஷயங்களை அணுகுகிறோம். பெண்கள் இதைத்தான் செய்ய வேண்டும் என்ற வகைப்படுத்தல் வீட்டில் இருந்ததில்லை. அப்பாவையும் அம்மாவையும் கண்டு வளர்ந்த உலகம் மிகவும் யதார்த்தமானது. சிறுவயது தொட்டே வீட்டில் எல்லா விஷயங்களையும் வெளிப்படையாகவே பேசுவோம். எல்லோருடைய அபிப்ராயங்களையும் கேட்போம். பல விஷயங்களைப் பற்றியும் வெளிப்படையான விவாதங்கள் நடந்தன. அந்த விவாதங்களில் என்னுடைய பார்வைக்கும் மதிப்பிருந்தது. அதெல்லாம் சேர்ந்துதான் சமத்துவம் என்ற அடிப்படையான உரிமையை நான் எல்லோரிடமிருந்தும் எதிர்பார்க்கிறேன். பள்ளிக்கூடத்திலிருந்து வெளிவரும் போது நான் எனது கருத்துக்களை முன் வைக்கும் போது, 'ஓ நீ இப்படியெல்லாம் சிந்திக்கிற ஆள் அல்லவா?' என கேலி பேசும் ஆட்கள் எதிர்வினைச் செய்வதுண்டு. இந்நிலையில் நான் ஏமாற்றமடைந்து குழப்பத்தில் ஆவேன். பெண்கள் ஒரு கருத்தைச் சொல்லும் போது சமூகத்தில் அதற்கு ஒரு மதிப்பில்லையென்று போகப்போகத்தான் உணர்ந்துகொண்டேன். பெண் குழந்தையாக இருக்கிறாய் பேசும்போது சிந்தித்துப் பேசணும் என்ற விதத்தில் தடையேற்படுத்தி இருந்தால் நான் உங்கள் முன் பார்வதியாக நின்றிருக்க மாட்டேன்.

சிறுவயதில் எனக்கு நிறைய நண்பர்கள் இருந்ததில்லை. ஆனால், ஆரோக்கியமான விவாதங்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என சில நண்பர்களிடமிருந்துக் கற்றுக்கொண்ட பல நற்குணங்களுண்டு. மற்றவர்களின் கருத்துக்கு மதிப்பளித்து மாற்றுக் கருத்தை சொல்லலாம் என்பன உட்பட. அரசியல் வயப்பட்ட நண்பர்கள் எனக்கு உள்ளனர். அவரில் பலரும் ஆபத்தான இடங்களிலிருந்து என்னைக் காப்பற்றியவர்கள்.

பார்வதி எவ்வாறு ஆற்றல் வாய்ந்த பெண்ணானாள் எனச் சொல்ல வரும் போது என்னை நானாகக் கண்டு நடந்த குடும்பமும், என்னை அதிகமும் நேசிக்கும் குறைவான நண்பர்களும் தான் அதற்கான காரணம். அது எனக்கொரு சிறப்பு சலுகைதான் என கருதுகிறேன்.

**குழந்தைப் பருவத்தில் எங்கு நின்று வளர்ந்தீர்கள். படிப்பு எவ்விதம் நடந்தது? உங்களுக்குப் பிடித்தமான விசயம் என்ன?**

கோழிக்கோட்டில் பிறந்தேன். அப்பா பரப்பனங்காடிக்காரர். அம்மா கோழிக்கோட்டுக்காரி. குழந்தைப் பருவத்தில் இரண்டு இடங்களிலும் நின்று வளர்ந்தேன். முக்கியமாக விடுமுறைக் காலங்களை அங்கு செலவழித்தேன். கோழிக்கோடு கேந்திரா வித்யாலயத்தில் படிப்பைத் தொடங்கினேன். பிறகு சிறிது காலம் டில்லியில் இருந்தேன். அதன்பிறகு திருவனந்தபுரத்தை நிரந்தர இருப்பிடமாகக் கொண்டு வசித்து வருகிறேன். ஆல் செயின்ட் கல்லூரியில் ஆங்கிலப் பட்டயப் படிப்பை முடித்தேன்.

**வாசிப்பை அவசியமான ஒன்றாகக் கருதுகிறீர்களா? ஒரு நடிகைக்கு புத்தக வாசிப்பு என்பது எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. நீங்கள் வாசிப்பது புனைக்கதைகளா அல்லது புனைக்கதை அல்லாதவைகளா?**

பல காலமாக புனைகதை அல்லாதவைகளைத்தான் வாசித்தேன். பிஏ படித்து விட்டு எம்ஏ பகுதிநேர தொலைக்கல்வியில் படித்தேன். அப்போதே நான் நடிக்கத் தொடங்கியிருந்தேன். கல்விப்புலம் சார்ந்த விஷயங்களை பலநேரங்களிலும் தவறவிட்டிருக்கிறோனோ என நினைத்துப் பார்ப்பதுண்டு. பீர் குரூப்புகளோடு கலந்து பழகுவதன் மூலம் கிடைக்கிற சமூக புரிதல்களை இழந்து விடுகிறோம் என்ற உணர்வு உண்டு. இருப்பினும் அதையெல்லாம் மீறி இணையதளத்தில் நான் விரும்பியதை வாசிக்கிறேன். தற்போது புனைகதை பக்கம் திரும்பியிருக்கிறேன். வாசிப்பு கலைஞர்களை மேன்மைப்படுத்தும் எனக் கருதுகிறேன். புத்தகங்கள் எனக்கு ஆறுதலாக இருக்கிறது. இந்த பெரிய பூமிப்பந்தில் நாம் தனியாள் அல்ல என ஞாபகப்படுத்திக் கொண்டேயிருக்கின்றன புத்தகங்கள்.

*mail to:* **Krishnaa150gopal@gmail.com**

நன்றி: 'மாத்ருபூமி' வார இதழ், அக்டோபர் 2024

# முயங்கொலி குறிப்புகள்

43

● கயல்

ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி





சரேலென விழிப்பு வந்தது.
முதலில் விழித்தது
உடலா?
நினைவா?

மூக்குத்திச் சுடரின் மினுங்கலில்
பக்கத்தில் படுத்திருக்கிற முகத்தைப்
பார்க்கிறாள்.
இது யார்?

நொடிகளுக்குமுன்
மூர்க்கமாய் முத்தமிட்டபடி என்
உடலெங்கும் தன்னை நிதானமாகத் தேடிய உதடுகள்
இவையா?

நாவு சுழற்றி
நதியின் நீரளைந்து
நதியின் குளுமையை
அதற்கே உணர்த்தல் சாத்தியமா?

ஒவ்வொரு முத்தத்தையும்
சீரற்ற இடைவெளியால்
நிரப்பியபடி
பாதம் சேர்கிற நேரம்
பொறுமையிழந்தது அவனா நானா?

கண்களில் வழிந்துகொண்டிருக்கிற
நீரின் துளி
கனவு கலைந்ததற்கா?
கட்டிலில் கிடக்கிற இந்த முகம்
அந்த முகமில்லையே எனும் ஏக்கத்தாலா?

நாளை மறுபடி உறக்கம் வருமா?
வந்தாலும்
சொர்க்கபுரியின் கள்ளச்சாவியோடு அந்தக் கை வருமா?
தலையணையை அணைத்துத் தூங்கும்
இதே கையா என்று கண்டுவிட இயலுமா?

விழிப்பினிடையே இப்போது
நினைவுக்கு வருகிறது....
கல்லூரியில் எப்போதும் பின்தொடர்ந்த ஓர் முகம்,
உருகி உருகிக் காதலித்த முகம்,
எனக்கே எனக்கென்று மருகிய முகம்,
எவரும் வேண்டாம்
நீ மட்டும்போதும் என்றபோது
கண்கள் ஒளிர
அணைத்துக்கொண்ட அந்த முகம்....

பனிப் புகையின் இடையே
மெல்லத் துவங்குகிறது
கனவில் வந்த அந்த முகம்.

லேசான குறட்டையோடு
ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும்
இவனுடையது தானது.

இப்போது மனதுள்
படர்கிற உணர்வு
ஏமாற்றமா?
துக்கமா?
ஆசுவாசமா?

தொடரும்

*mail to:* **dr.kayalvizhi2020@gmail.com**

# துளிர்விடும் சொந்தங்கள்

அந்திநேரத்துச் செவ்வானம் நிர்மலமாக இருந்தது. உறைவிடந்தேடி மரங்களை வட்டமிடும் பறவைகளின் கூட்டுக் கீசல்களும் எப்போதாவது ஒருதரம் சாலையில் விரையும் பாரவுந்துகளின் இரைச்சலும் இக்கிராமத்தின் அமைதியைக் குலைக்கின்றன.

● பொ.கருணாகரமூர்த்தி
ஓவியம்: உஷா சாந்தாராம்

இதுவரை என்னுடன் பேசிக்கொண்டிருந்த எங்கள் குடும்ப நண்பரான நல்லையாப்பத்தர் சால்வையை உதறித்தோளில் போட்டுக்கொண்டு எழுந்துபோகையில், "உனது வாழ்க்கை, உனது இஷ்டம், ஏதோ நல்லபடி யோசித்து நல்ல முடிவுக்குவா மகன்" என்பதில் நல்ல நல்லவென்பதை அழுத்திப் பகர்ந்துவிட்டு மென்னிருளில் கலந்துபோனார். மேற்குத் திசையிலிருந்து சோகம் சுமந்த மாங்குயிலின் கூவலொன்று விட்டுவிட்டு மிதந்து வந்துகொண்டிருக்கிறது. குயிலின் கூவலோடு பத்தர் சொல்லிவிட்டுப்போன விஷயம் என் மனதைக் கலைத்துப்போடவும் அது ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பதான முன்நிகழ்வுகளுக்கு நடைபோடுகிறது. என்னால் எதுவித முடிவுக்கும் வரமுடியவில்லை.



பல்கலைக்கழகம் புகுமுக வகுப்புவரைதான் படித்திருந்தேன், அதனுள் புகமுடியவில்லை. பல நோக்கக்கூட்டுறவுச் சங்கத்தில் விற்பனையாளர் போன்ற சிற்றூழியங்களைப் பெற்றுக்கொள்ளக்கூட முடியாமலிருந்தது. தந்தையும் அகாலமாகச்சென்று மறைந்துவிட்டார். வாழ்ந்த காலத்தும் பொருண்மிய மேலாண்மையறியாத வெள்ளந்தியாக இருந்ததேதவிர குடி, அபினியன்ன லாகிரிப் பழக்கங்கள் எதுவுமில்லை. என்ன உழைத்த செல்வம் எதையும் சேமித்துவைக்கத் தெரியவில்லை. தன் நட்புவட்டத்தில் சில சீட்டுக்கள் மட்டும் கட்டியிருந்தார். அவர் மறைந்துவிடச் சீட்டுப் பிடித்தவர்களும் அதைவிடவேகத்தில் காணாமலாயினர்.

சுற்று வட்டாரத்திலுள்ள தென்னந்தோப்புகளில் மரங்களுக்கு இயற்கைப் பசளை பதித்தல், தொட்டிகளில் ஊறப்போட்ட தென்னை/ தேங்காய் மட்டைகளை அடித்துத் தும்பாக்குதலன்ன என் உடலுழைப்பிலான ஊதியத்தில் எனதும், அம்மா, தங்கை தேன்மொழியின் வயிறுகள் கழுவப்படும். அப்போது என் மடியில் கனமில்லை. என்னுடைய உடமையென்று துருவேறிய ஒரு மிதியுந்தும் இரண்டு நாலுமுழம் கதர் வேட்டி, ஷேர்ட்டுகளும் மட்டுமே இருந்தன. டீ-ஷேர்ட், ஜீன்ஸ் எல்லாம் யாரும் வசதியான வீட்டுப் பையன்கள் அணிவதைப் பார்ப்பதோடு சரி.

எங்களுக்கு நெருங்கிய உறவென்று இருப்பவர் எம் தாய்மாமன். அவரது முழுப்பெயர் தீனதயாளன் முத்துக்குமாரு. ஊரவர் அவரை 'முத்துக்கும்மாறு' என்பர். அத்தை கோதுமை நிறத்தில் அழகாக இருப்பார். மாமா முதல்த்தர எழுதுவினையராக பணியிலிருந்த காலத்தில் மருத்துவர்கள், பொறியாளர்கள் எல்லைக்கு, நயினாதீவெனும் சிறு தீவகத்திலிருந்து ஏராளம் சீதனம் கொண்டுவந்து மாமா குடும்பத்தில் சங்கமமாகியவரென்பதைத் தவிர அத்தையைப் பற்றி மேலதிகமாக எதுவும் தெரியாது. இந்த முத்துக்குமாறான மாமாவின் தங்கையை எங்கள் அப்பா காந்தர்வமணம்புரியப்போன காலத்திலிருந்தே இரண்டு குடும்பங்களுக்குமான ஒட்டுறவில் விரிசல் ஏற்பட்டுவிட்டது. எங்கள் மாமாவைப்போல அல்லாமல் எங்கள் தாத்தாவை ஊருக்கே நியாயஞ் சொல்லக்கூடிய ஒரு நியாயவான் என்பர்கள். இருந்தும் இவ்விரிசல் எப்படி ஆழமாயிற்றென்பது இற்றைவரை எமக்குப் புரிவதுமில்லை. நாங்கள் சிறுவர்களாக இருந்தபோதே தாத்தாவும் பாட்டியும் காலகதி அடைந்துவிட்டதால் அவர்களின் மடியில் தவழ்ந்து ஒட்டி விளையாடும் பாக்கியமும் நமக்குக் கிடைக்கவில்லை. விரிசலும் வெளியும் மட்டும் வாழ்ந்திருந்தன.

மாமா பொதுவேலைகள் திணைக்களத்தில் முப்பது ஆண்டுகள் எழுதுவினையராகக் கதிரையைத் தேய்த்து ஓய்ந்த வயதில் இப்போதுதான் தலைமை எழுதுவினையராகியுள்ளார். அவரது பணிஓய்வுக்கு இன்னும் நாலைந்து ஆண்டுகளே உள்ளன. அவர்களின்

மூத்தமகன் மாதவன் கொழும்பில் 'ஆர்பிகோ' எனும் இறப்பர், தும்பு மெத்தைகள் ஏற்றுமதிக் குழுமத்தின் ஆலோசனை அலுவலராகப் பணியாற்றுகிறான். அக்குழுமமே வழங்கியுள்ள வளமனை, சீருந்தென வசதியான வாழ்வு அவனது.

அடுத்தவள் கோசலையை தீவு முழுவதுக்கும், நீரிறைக்கும் இயந்திரங்கள், மிதியுந்துகள், உழவு இயந்திர உதிரிப்பாகங்கள் விநியோகிக்கும் ஒரு குழுமத்தின் சொந்தக்காரனின் குடும்பத்தில் திருமணஞ்செய்து கொடுத்திருந்தனர்.

அடுத்தவள்தான் அருவி. தாயின் கோதுமை நிறத்தைக் கொண்டிருக்கும் அழகி. எம் வழிதெருவில் குறுக்கிட்டாலோ, எங்கள் செங்காரிப் பசு அறுத்துக்கொண்டு அவர்களது தோட்டத்துக்குள் புகுந்துகொண்டு அதை நான் பிடித்துவரப்போகும் வேளைகளிலோ ஒளிந்துகொள்வாள். வெட்கமாம். எனக்கும் அவள்மீது ஒரு ஈர்ப்பிருந்தும், மாமாவை வழிக்குக் கொண்டுவர முடியாதென்பதால் `சாய்க்... அப்படியொன்றுமில்லை' என்று என்னை மாற்றிக்கொண்டிருந்துவிட்டேன்.

அடுத்தது அயன், கவின் என்று அங்குலவித்தியாசத்தில் இரண்டு பையன்கள்; ஐந்தும் ஆறும் வாசிக்கிறார்கள்.

நல்லையாப்பத்தர் எங்கள் வீட்டுக்கு வரும் ஒவ்வொரு தடவையும் தேநீரோ கோப்பியோ குடித்தானதும் ஆலாபிப்பதைப்போல், ''எதுக்கும் நீங்கள் மாதவனைக் கைநழுவ விட்டிடப்படாது, எப்பிடியும் ஆளை மடக்கித் தேன்மொழி கழுத்தில மாட்டிடவேணும்'' என்பார். அப்பாவின் இறுதிச் சடங்குகளில் மாமா செலவுசெய்த ஆயிரத்தைநூறு ரூபா பணத்தைக்கூட, நான் முப்பத்தோராம் நாட்காரியங்கள் கழித்துக் கொண்டுபோய்க் கொடுத்தபோது வாங்கி, உள்மடியில் சொருகிக்கொண்ட மாமாவின் உள்மனம் பத்தருக்கு இன்னும் சரியாகப் பிடிபடாததில ஒருநாள் போய் மாமாவிடம் லேசாகக் கதைவிட்டுப் பார்த்திருக்கிறார்.

''இதென்ன விசர்க்கதை காணும் நீர் பறையிறது... அவன் வெளிநாட்டுக்காரங்களோட பிஸினெஸ் செய்யிற, அவங்கள் வந்துபோற பெரீய கொம்பனியில டிறெக்டேஸ்ர்ஸ் றேஞ்ஜில வேலை பார்க்கிறான். இவள் பத்தாவதே அரும்பொட்டில பாஸ் பண்ணியிருக்கிற கிராமத்துப் பெட்டை இங்கிலிஸூம் வராது. இவள் கொழும்புக்குப் போய் அவன்ட ஸ்டேட்டசுக்குச் சமாளிப்பளே.''

"ஒரு தாய்மாமனே இப்பிடி ஸ்டேட்டஸ் பாத்து சுற்றத்துக்குள்ள ஒரு தகப்பன் இல்லாத பிள்ளையைக் கைகழுவி விடுறது அறமில்லைத் தம்பி.''

"சீதனங்கூட எங்களுக்கு இரண்டாம்பட்சந்தான். ஆனால், அவனுக்கு அந்த இடத்தில சமாளிச்சு வாழக்கூடிய ஒரு படிச்சபிள்ளையைத்தான் நாங்கள் கட்டி வைக்கோணும். எப்படி விளங்கப்படுத்தினாலும் நிலமையைப் புரிஞ்சுகொள்ளிறியளில்லையே மாமா.''



என்னதான் எனக்குநானே சமாதானங்கள் கூறிக்கொண்டிருந்தாலும் அதலபாதாளத்திலிருக்கும் என் பொருண்மியசோகம் என்னை அரித்துக் கொண்டிருந்தது. நிரந்தர வருமானத்தோட ஒரு வேலையைத்தேடி அலைந்துகொண்டிருந்தேன். ஒருநாள் மதியம் நல்லையாப்பத்தர் தன் மிதியுந்தில் வீட்டுக்கு வந்திருந்தார். நடப்பில் அவர் எங்கள் வீட்டுக்கு மாலையிலோ இரவிலோ வந்து பேசிக்கொண்டிருந்துவிட்டு வீடு திரும்புவதுதான் வழமை. அன்று முகத்திலொரு பிரத்தியேக விகசிப்பு பூசியிருந்தது, அவர் தன்வியாபார விடயங்களுக்கோ திருமணங்களுக்கோ போகும்போது விசிறிக்கொள்ளும் குனேகா மருக்கொழுந்து வாசமும் அவர்கூட வந்திருந்தது. என்மனதுக்குத் திருமனசு ஏதோ நல்லசெய்திதான் கொண்டுவந்திருக்கிறார் என்றன சமிக்ஞைகள். அம்மாவோ தங்கையோ கொடுத்த பால்க்கோப்பியை ரசித்துக் குடித்தபின், "இந்தக் காலத்தில் என்னால்க்கூட ஒருவருக்கு ஒரு வேலையை வாங்கிக்கொடுக்க முடியுதென்பதை நம்பமுடியாமலிருக்கு'' என்றார். மேலே என்னதான் சொல்லப்போகிறார் என்கிற ஆவலில் நானும் அம்மாவும் அவரது முகத்தைப் பார்க்கவும், அவர் தொடர்ந்தார்.

''நித்தியகல்யாணி ஜுவெல்லேர்ஸ்காரர் என்று நான் ஓடருக்கு வேலைகள் செய்துகொடுக்கிற குடும்பமொன்று கன்னாதிட்டியில இருக்கு.

அவர்களுக்கு எக்கவுண்ட் செக்ஸனில வேலை செய்ய ஒரு நேர்மையான கணக்காளர் தேவையாம். அதுதான் நான் தம்பியின்ர பெயரோட, குடும்பப் பின்னணியெல்லாம் எடுத்துச்சொல்லி உரக்கப் பரிந்துரைத்திருக்கிறேன். அந்த முதலாளிக்கு வேணுகோபாலென்று பெயர். பூர்வீகம் திருச்சி மாவட்டம். நம்ப, தியாகராஜாபாகவதர் தனக்கொரு சித்தப்பாவாம். தங்கமான மனுஷன். இன்றைக்குப் பின்னேரமே உம்மைக் கூட்டிவரச் சொல்லியிருக்கிறார். அதுதான் சமாசாரம்'' என்றுவிட்டுச் சிரித்தார்.

அன்றே சுணக்காமல் வெள்ளைக்குட்டி என்பவருடைய வாடகைவண்டியை அமர்த்திக்கொண்டு வேணுகோபாலாச்சாரியின் வீட்டையடைந்தோம். அவரே எழுந்துவந்து எங்களை வரவேற்று உள்ளே அழைத்துப்போனார். முதற்பார்வையிலேயே என்னை அவருக்கும் எனக்கு அவரையும் பிடித்துப்போய்விட்டன. அடுத்த திங்களே வேலையில் சேரச்சொல்லிவிட்டார். நான் கல்லூரியில் படித்திருந்த கணக்கியல் உதவிசெய்ய, நடைமுறையில் அதை எப்படிப் பிரயோகிப்பதென்ற யுக்திகளையும் நுட்பங்களையும் கணக்குப் பதிவேடுகளைப் பயன்செய்யும் விதங்களையும் இரண்டுமூன்று மாதங்களிலேயே அவர்களிடம் கற்றுக்கொண்டுவிட்டேன். தங்கநகைகள், சவரின்கள், பிஸ்கெட்டுகள் அவற்றின் விலை எப்போது ஏறும் எப்போது இறங்கும் என்பதுபோன்ற நுணுக்கங்கள், நகைத்தொழிலாளருக்கு தங்கத்தை நிறுத்துக்கொடுப்பது, தயாரிப்புகளான பின் நிறைகளை சேதாரங்கள் தள்ளி மீளச்சரிபார்த்துப் பெற்றுக்கொள்வதென நகைவியாபாரத்தின் சூக்குமங்கள் எல்லாம் எனக்கு மெல்லமெல்ல அத்துபடியாயின.

காலவோட்டத்தில் வேணுகோபாலாச்சாரியாருக்கும் எனக்குமான உறவு முதலாளி, ஊழியன் என்ற நிலையிலிருந்துமாறி ஒரு தந்தைக்கும் மகனுக்குமான உறவைப்போலாகியது. என்னை மனசு நிறைந்து 'அப்பன்' என்றுதான் அழைப்பார். நாம் ஒரே மேசையில் எதிரெதிரே இருந்து சாப்பிடுவதிலிருந்து, ஊர்ப்பாடுகள், உலகப்பாடுகள், அரசியல் அரட்டைகள், அங்கதங்கள் என்றாகி, எங்குடும்பத்துக்கும் அவர்களது குடும்பத்துக்குமான உறவும் நெருக்கமும் வளர்ந்து அத்தியந்த பந்துக்களைப்போலானோம். ஆசாரியார் கடைச்சிப்பந்திகளுடனோ தொழிலாளர்களுடனோ ஏதும் முரண்பாடென்றால் முகத்துக்கு நேரேயே உச்சியால் இரத்தங்கசிய வைதுவிட்டு மாலையில் அவர்களிடம் அப்படி ஒன்றும் நிகழாததுபோல், `வீட்ல ஒண்ணும் விஷேசமில்லையாப்பா... பொண்ணு, மருமோள் எல்லாம் இன்னும் முழுகிட்டுத்தான் இருக்காளவையா...' என்பார். அவர்கள் வீட்டில் காலை ஆகாரமாக இட்லியோ தோசையோ வார்த்தால் அவர்கள் வீட்டுப் பணிப்பெண்ணிடம் தனியாக எனக்குக் கடைக்கே கொடுத்து அனுப்புவார் முதலாளிவீட்டு மங்களம்மாமி. ஊழியம் ஆரம்பமாகிய ஆறுமாதகாலத்தில் 750ஆம் இலக்கத் தடத்தின் பேருந்தைத் தவறவிட்ட சிலநாட்களில் நான் தாமதமாகப் பணிக்கு வந்ததைக் கவனித்தவர் தங்கள் வீட்டுத்தாழ்வாரத்தில் பாவிப்பின்றி நின்றிருந்த BSA 250 CC ரக உந்துருளியை என்னை எடுத்துக்கொள்ளச் சொன்னார். கதர்வேட்டிசட்டை அணியும் என்முதலாளி காந்தீயத்தில் மட்டுமல்லாது நேரம் கிடைத்த வேளைகளிலெல்லாம் சிவஞானபோதத்திலும் திருவருட்பயனிலும் சிக்கெடுத்து, தம்மபதத்திலும் ஜிட்டு கிருஷ்ணமூர்த்தியிலும் தோய்ந்திருப்பார். அதீதமான தமிழறிவோடு அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்திருந்த அதிமானிடர்களில் ஆச்சாரியாரும் ஒருவர் என்பது மிகையல்ல.

நித்தியகல்யாணி நகைமாளிகையின் பின்னான வளவில் அவர்களது வீடும் நகைவேலைகள் செய்யும் பட்டறையும் இருந்தன. மக்களுக்கு நகைக்கான தேவைகள்கூடி வியாபாரம் சூடாகும் தை பங்குனி வைகாசி ஆவணி மாதங்களில் நல்லையாப்பத்தரும் அவ்வப்போ அங்கே வந்து அவர்களுடன் சேர்ந்து பட்டறையில் பணிசெய்வார். பதக்கங்கள், மோதிரங்களுக்கு எனாமல் மருவுதல், அட்டிகை, நெக்கிலஸுகளுக்குக் கற்கள் பதித்தலில் வித்தகர் அவர். பட்டறைக்குள் பணிசெய்யும் ஆசாரிமார்களின் 'டொக்குடொக்குடொக்கு' என்ற தட்டல் தறைச்சல்ச் சத்தங்களும் விதூஷகப் பேச்சுக்களும் வெடிச் சிரிப்புகளுமாக எந்நேரமும் கலகலப்பாகப் பட்டறை இருக்கும்.

நல்லையாப்பத்தர் வேலைசெய்துகொண்டிருந்த ஒரு சக ஊழியரிடம், "காணும் சுந்தரி... நானெல்லாம் எளந்தாரியா வேலை பழகிற காலத்தில பவுண் என்ன விலை போயிருக்குமெங்கிறீரு..."

சுந்தரம் நாடகீயமாக போலிப்பௌவியத்தோட வாய்பொத்தி, "திருமனசே நவின்றாக்க... நாம தெரிஞ்சுப்போம்ல."



“சிங்கப்பூரிலிருந்து வாற ஒவ்வொரு கப்பல்லயும் பிஸ்கெட்டாயும் சவரனாயும் தங்கம் வந்து கொட்டினப்போ, ஒரு சவரன் பத்து ரூபாய்தான் காணும், மிஞ்சிப்போனால் இருபத்தைஞ்சு சதம் மேல கீழ இருக்கும். அதுதான் சில பழசுகள் இப்பவும் பத்து ரூபாயைப் பவுண் எங்கிறது.”

சுந்தரம் வாயைப் பிளந்திருக்க, “அப்போ நீரு நெனைக்கப்படா நல்லையா அம்மான் பத்துவிரலுக்கும் மோதிரங்கொளுவி, பத்துப்பிடி சங்கிலியும் சூடிப் பகுமானமாய்த் திரிஞ்சிருப்பாரெண்டு.”

“திரிஞ்சிருக்க மாட்டீகளா பின்னே…”

“என்ர வயசுக்கு இதுவரை ஒரு இலக்ஷம் மோதிரங்களாவது இணக்கியிருப்பன் காணும்.”

“நமக்கென்றொரு மோதிரம் அப்பவுமில்லை, இப்பவுமில்லை. நமக்கென்று பகவான் அப்பிடி விதிச்சிருக்கான்” என்று சலித்தவர் சற்று யோசித்தவர்போல் இடைவெளிவிட்டு…

”மூத்தக்காவுக்குத் திருமணமானபோது அத்தான் ஒண்ணேகால் வீசத்தில தோழன் மோதிரமொன்று எனக்கு இணக்குவித்துப் போட்டவர்தான், அதுவுமெங்கேயோ காத்தாடியேத்த நான் விரசா ஓடினப்போ… கழன்று காத்தில பறந்திட்டிதுகா” என்றுவிட்டு மௌனித்து இருக்கவும் முழுப்பட்டறையும் சிரிப்பால் குலுங்கி ஓய்ந்தது.

நான் வேணுகோபாலாச்சாரியாரின் நகைமாளிகையில் பணிக்குச் சேர்ந்த ஐந்துவருட காலத்தில் அவர்களின் வியாபாரம் ஓங்கிவளர்ந்ததைத் தவிர, சென்னையில் தாத்தா பாட்டியோடிருந்து படித்துக் கொண்டிருந்த அவரது ஒரே மகள் அகல்யாவுக்கு அரச உயர் அலுவலர் ஒருவருடன் திருமணமாகிப் பெயரன் பெயர்த்திகளைப் பெற்றுக்கொண்டனர். மகளின் திருமணத்துக்குச் சென்று ஒரு மாதத்தில் திரும்பி விடுவதாகத் தாயகஞ்சென்றவர்கள் யாழ்ப்பாணம் திரும்ப நாலைந்து மாதங்களாகின. அவர் இங்கேயே இருந்த மாதிரிக்கு நான் வியாபாரத்தைச் செவ்வனே நிர்வகித்து, கணக்குகளையும் பணத்தையும் செம்மையாகக் கையாண்டதில் அவர்களுக்குப் பரிபூரண திருப்தி.

இனிமேலும், ’எதுக்கப்பா நாங்கள் சொத்தும் சுகமும் தேடவேணும்’ என்று அவரது மகளும் மருமகனும் இன்னும் மீதமிருந்த சொந்த பந்துக்களும் ’சீக்கிரம் ஊருக்கே வந்திடுங்க’ என்று அழுத்தத் தொடங்கவும் நாளடைவில் அவர்கள் வியாபாரத்தில் ஆர்வமும் ஊக்கமுங்குன்றி, மனதளவில் தாயகத்துக்குத் திரும்பத் தயாராகுவதை அவரின் செயல் சாங்கியங்கள் பிரதிபலித்தன.

1970இல் நடந்த பொதுத்தேர்தலின் பின் ஸ்ரீமாவோ பண்டாரநாயகவின் தலைமையிலான எஸ்.எல்.எஃப்.பி கட்சி, சமசமாஜ / கொம்மியூனிஸ்ட் கட்சிகளுடன்



கூட்டணி அமைத்துக்கொண்டு ஆட்சிக்கு வந்தது. வந்த ஆறே மாதத்தில் செலவாகும் அந்நியச் செலவாணியைக் கட்டுப்படுத்துவதாகக் கருதிக்கொண்டு பம்பா வெங்காயம், மசூர் பருப்புத் தொடங்கி, உள்ளி, கொத்துமல்லி, சீரகம், வெந்தயம் வரை உபவுணவுப் பண்டங்களின் இறக்குமதியைக் கட்டுப்படுத்தியது. அடுத்ததாக வாகனங்களின் இறக்குமதியையும் நிறுத்தவும், எனக்குள் ஒரு பட்சி ’அடுத்தது தங்கந்தான்’ என்று தினமும் என் காதில் வந்து கீசத் தொடங்கிற்று.

தங்கம், வெள்ளியின் சந்தைவிலை சுபகாரியங்கள் அருகலாயிருக்கும் தமிழ் மாசி, சித்திரை ஆடி புரட்டாதி ஆகிய மாதங்களில் சில ரூபாய்கள் இறங்கினாலும் இறங்குமே தவிர பெரிதாகச் சரிந்து முதலீட்டாளர்கள் எவருக்கும் நட்டமேற்படுத்தாது. தங்கநகை வாணிபத்தின் அனுகூலம் அது.

வேணுகோபாலாச்சாரியாரும் தன் வியாபாரம் முதலீடுகள் விடயத்தில் எவரதும் ஆலோசனைகளைக் கேட்பவராக நானும் அறிந்திருக்கவில்லை.

என் கணிப்பை மிகுந்த தயக்கத்துடன் ஆசாரியாரிடம் பக்குவமாக எடுத்துச் சொல்லலாமென்று அவர் காப்பி குடித்துத் தாம்பூலம் தரித்து முகம் விகசிப்போடிருந்த ஒரு பொழுதில் அவரை அணுகினேன்.

”சமூகம்… கோவிச்சுக்கலேன்னா சிறியவன் ஒண்ணு சொல்லலாமா…”

“விஷயம்… சின்னதா பெரீஸா…”

“அது நீங்க எடுத்துக்கிற விதத்தில இருக்கு.“

"பெரிஸாய்ப் பீடிகை போட்டிட்டு என் பொண்ணைக் கேட்கலேன்னாச் சரிதான்…. அவளுக்கு எப்போதோ ஊர்ல கல்யாணம் ஆயிடிச்சுப்பா உனக்குத் தெரியாதா…"

வழக்கம்போல் என்னுடன் அங்கதம் பண்ணினார். அதன் திசையைத் திருப்பி சந்தை நிலவரத்தின் போக்கையும் தர்க்கரீதியாகத் தங்கம் விலையேறப்போவது பற்றிய என் அனுமானத்தையும் எடுத்துச் சொன்னேன்.

என் அனுமானத்தை ஒப்புக்கொண்டார். சுணங்காது தொலைவரிகள் சிங்கப்பூருக்கும் பாங்கொக்கும் அனுப்பி பிஸ்கெட்டும் சவரினுமாக ஐந்து கிலோ தங்கம் இறக்குமதி செய்விக்க ஊக்குவித்தேன். நாம் அனுமானித்ததைப்போல் அரசு தங்கத்தில் கையைவைக்க, அதே மாதத்தில் 180 ‹-› 190 ரூபாய்களிடையில் துடித்துக் கொண்டிருந்த தங்கம் திடுப்பென 400 ரூபாய்க்கு எகிறவும் நான் ஒரு தேவதூதனைப்போல ஆசாரியார் குடும்பத்தால் ஆகர்ஷிக்கப்பட்டேன்.

அவர்களின் தாயகத்துக்குத் திரும்புவதான தயாரிப்புகள் மெல்ல மெல்ல ஆரம்பித்துவிட்ட ஒரு நாளில் நாம் சம்பாஷித்திக் கொண்டிருந்தபோது வேணுகோபாலாச்சாரியார், நாடு திரும்பும் தமக்குக்கூட எடுத்துச்செல்லும் சொத்துக்களின் அளவுக்கு எல்லை வரம்புகள் உள்ளவிஷயத்தை எனக்கு ஒரு தகவலாகச் சொன்னார். பின்னர், "உன் ஊழியத்தால் அமைந்த நிதி உனக்கான சம்பாவனையே" என்றார். அவரது தத்துவார்த்த பூடகப் பேச்சு உடனடியாக எனக்கு விளங்கவில்லை. நானும் நானுண்டு என்பாடுண்டு என்று என்பணியோடு பின்னி உழன்று கொண்டிருந்தேன். ஒருநாள் மாலை திடீரென்று, "இன்றைக்கு வக்கீலை வரச்சொல்லி ஏற்பாடு பண்ணியிருக்கேன். அம்மாவையும் தங்கையையும் அழைச்சிண்டு வீட்டுக்கு வந்திடு அப்பன்" என்றொரு ஆக்ஞைத்தொனியில் சொன்னார்.

"என்னையா சொல்றீங்க…" என்று தலையைச் சொறிந்தேன்.

"ஆமா… கண்ணா இந்தக் கடையை உனக்கே எழுதித் தந்திடறதா இருக்கோம்" என்றார்.

"சும்மா… கலாய்க்காதீங்கையா என்னால தாங்கேலா…" என்றேன்.

"சொல்றதைக் கேள். எல்லாமே சத்தியம், உன் நாணயத்துக்கு என் காரையும் என் பரிசாக தந்திடறேன், எடுத்துக்கோ."

என் நினைவுப் புலத்தில் முன் எப்போதும் நிகழ்ந்திராதபடிக்கு என்னவெல்லாமோ செய்தது. உள்ளுக்குள் சத்தமில்லாதவொரு நிலவதிர்வு ஏற்பட்டதைப் போலிருந்தது. இதெல்லாம் என் வாழ்க்கையில் நேரும் நிகழ்வுகள்தானா… அவரைத் தொழுவதைத் தவிர எனக்கு வேறொன்றுஞ் செய்யத் தெரியவில்லை.

"உன்னை என் பெற்றுக்கொள்ளாத மகனாக என்றைக்கோ நானும் மங்களமும் வரித்துக்கொண்டுவிட்டோம்."

"அதை உணராமல் இருக்கிறேனா…" எனக்கு அழுகை முட்டிப் பேசவரவில்லை.

"எங்களுக்கு எடுத்துச்செல்ல முடியாமலிருக்கிற சொத்தை ஆதனத்தை விற்று வேணுமின்னா இங்கே சின்னதாயொரு கோவில் கட்டலாம், குளத்தை வெட்டலாம். மிஞ்சிப்போனா ஏலவே இருக்கிற கோயில் ஒண்ணுக்குக் கோபுரம் கட்டலாம். அதனால சமூகத்துக்குப் பெரிசா ஒண்ணும் நன்மை கொழித்திடப் போவதில்லை. தேவையிருக்கிற ஒரு குடும்பத்துக்கே கையளித்தோம்னா சந்ததிக்கும் அது கஞ்சி குடிச்சிட்டிருக்கும். எனக்குத் தெரிஞ்ச வட்டத்தில அதைப்பெறக்கூடிய தகுதி ஆனந்தவர்த்தன் குடும்பத்தைத் தவிர இன்னொன்று இருப்பதாக எமக்குத் தெரியவில்லை."

`அப்பன்' என்பதை விடுத்து அன்று இரண்டாவது தடவையாக என் பெயரை முழுமையாகச்சொன்னார்.

நல்லதொரு மிதியுந்தேயில்லாமல் நலிந்திருந்தவன் நித்தியகல்யாணி நகை மாளிகையின் உரிமையாளனாகிய கதைச் சுருக்கம் இதுதான்.

**வி**தி, பகவான், அறம், மறம், பாவம், புண்ணியம் இதுகள் எல்லாவற்றிலும் நம்பிக்கை வைத்திருக்கும் நல்லையா ஆசாரியார், "இந்த வணிக ஸ்தலத்தை உனக்கென்றே பகவான் நமோவெனப் படைச்சிருக்கார். இடையில கொஞ்சநாள் வேணுகோபாலாச்சாரியாரும் அனுபவிக்கட்டுமேயென்று அந்தாள் கையில கொடுத்து வைச்சிருந்திருக்கார் தெரியுமோ… எல்லாம் அவன் சித்தமும் விளையாட்டும் கண்ணா" என்பார் . என் வாழ்க்கையின் திருப்பத்துக்குக் காள்கோலாயமந்தவர் அவர்தான். நடக்கவிருக்கும் அவரது மகளது திருமணத்துக்கு, நகை நட்டுகளோடு, சேர்ந்தான இதர செலவு சித்தாயங்களையும் நானே செய்வதாக உள்ளேன்.

இப்போ எனக்கு `மங்களயோசனை' ஒன்று சொல்கிறேனென்று வந்திருக்கிறார். `உறவுகள் அறுந்து போகப்படாதாம்.' அது சந்தேகமில்லாமல் மாமன்விட்ட தூதாகத்தானிருக்கும்.

"மாமன் மேல இருக்கிற தனிப்பட்ட காய்ச்சல்ல உன்னையே நம்பியிருக்கிற அருவியை ஒதுக்கிவிட்டு நீ இனிப்புதிதாக ஒரு ஒருத்தியைக் கொணாந்து அந்த இடத்தில உன் குடும்பத்துக்குள்ள வைக்கிறது, அறஞ்சார்ந்த காரியமல்ல. தேன்மொழியைக்கூட மாதவனுக்கு எடுக்க அவர்கள் தயாராகிட்டார்கள் தெரியுமோ… மனுசனுக்கு வாழ்க்கையின் அநித்தியம்

லேசில புரிஞ்சிடறதில்ல. அதனாலதான் அவன் அகம்பாவங்கூடி ஆடறதும் செல்வசுகத்தால லோகத்தையே புரட்டிடுவேங்கிறதும் சமயத்தில அவனே தப்பு – வஞ்சனை- இகழ்ச்சி – ஏன் ஆராதனை பண்ணிக்கறதுகூட... நீ படிச்ச பையன், சாமானியனல்ல, என்னடா மாமா எங்கிட்டயே காலேட்ஷேபம் பண்றாரேன்னு நெனைச்சுடப்படாது. லோகத்தில தப்பு, தவறு என்று இருக்கிறதாலதான் தர்மத்தைப் பற்றின பேச்சே வருது... எல்லாத்தையும் எல்லாரையும் மன்னிக்கத் தெரிஞ்சவந்தான் அதிமானுஷன். எல்லாத்தையும் நல்லாய்ப் புரிஞ்சுப்பே. ஏதோ நல்ல முடிவுக்கு வா மகன்" என்றுவிட்டு மறுபடியும் சூதானமாகத் தட்டத்துள் நல்ல சீவலாகத்தேடி, வெற்றிலைச் சுருளுள் வைத்து வாய்க்குள் திணித்துக்கொண்டு, சால்வையை உதறித்தோளில் போட்டபடி கிளம்புகிறார் நல்லையா ஆசாரியார்.

மாமா குடும்பத்துக்கு, அருவிக்கு நான் பொருத்தமான்வன்தான் என்கிற நினைப்பையும் ஆங்கிலந்தெரியாத தேன்மொழி மாதவன்கூடக் கொழும்பில் குடும்பம் நடத்துவாள் என்கிற நம்பிக்கையையும் தந்த மாயாவி எது? உலர்ந்து கொண்டிருந்த சொந்தங்களின் வேரில் பரவித் துளிர்விடவைக்கும் அந்த உயிர்ப்பூக்கி எது... என் சிந்தனை குழம்புகிறது. நான் கயிற்றுக் கட்டிலில் சாய்ந்து படுத்துக்கொள்கிறேன். அந்திச் செவ்வானத்தில் அப்போதுதான் பிறந்த சில தாரகைகள் துள்ளி மின்னத் தொடங்குகின்றன. ●

*mail to:* **karunah08@yahoo.com**



# செந்தி கவிதைகள்

ஓவியம்: nathaniel emerson

## மரணவீட்டில் அலையும் கரப்பான்பூச்சிகள்

நீத்தார் உடல் கிடத்தப்பட்டிருக்கும்
அவ்வறையில்
அவர்கள் நெருக்கமாக
அமர்ந்திருக்கிறார்கள்.
சிலர்
அங்குமிங்குமாக அலைகிறார்கள்.
சாமியாஷான
பந்தலில் கரப்பான்பூச்சிகள் சில
இருக்கின்றன.
அவைகள்
அங்குமிங்குமாக மெல்ல ஊர்கின்றன.
வலதுபுற இடையில்
சொருகப்பட்டிருக்கும் கைக்குட்டைப் பக்கம்
அவை மெல்ல திரும்புகின்றன.
மெலிந்த தேகம் கொண்டவளை
அவைகள் நோக்குகின்றன.
கூட்டம் நிறைந்த
அவ்வறையில்
கால்கள் ஊடே அவைகள் மெல்ல ஊர்கின்றன.
போவதும் வருவதுமாக இருக்கும்
கூந்தல் கலைந்த தேகம் பக்கம்
அவைகளின் கண்கள் விரிகின்றன.
மேலும்
மார்பு விலகும் அந்தக் கணத்தில்
விரைந்து செல்கின்றன.
நீண்ட விரல்கள் கொண்ட
கொலுசுகளை
சுற்றுகின்றன.
பிடி மேலும் இறுகுகிறது.
யாரோ ஒருத்தி கை ஊன்றி எழுகையில்
அப்பக்கம் செல்கின்றன கரப்பான்பூச்சிகள்.
சமயத்தில்
புட்டங்களை நெருங்குகின்றன.
நடுத்தர வயதையொத்தவள்
ஒரு விரல் கொண்டு
ப்ராவை சரி செய்கையில்
மேலே ஊர்ந்து செல்கின்றன.
இவ்வாறாக
கரப்பான்பூச்சிகள் சில மரணவீட்டில்
தேகம் புசித்து
திளைக்கின்றன.

## பின் மதியம் ரயில் காட்சி

இப்பின் மதியத்தில்
புறநகர் ரயில் நிலையம்
அமைதியாக
இருக்கிறது.
பராமரிப்புப் பணிகளில்
ஈடுபட்டிருப்பவர்கள்
ஐயமற்று வடநாட்டு இளைஞர்கள்தான்.
நீர் நிரம்பிய நீலநிற ட்ரம்மில்
விருட்டென்று
காக்கை ஒன்று அமர்கிறது.
ரயிலுக்குக்
காத்திருப்பவர்கள் யாருடனாவது
அலைபேசியில்
பேசிக் கொண்டிருக்கிறார்கள்.
இளம் ஜோடி ஒன்று
மெய்மறந்து
கைகள் கோர்த்து
தலைசாய்த்துக் கொண்டிருக்கிறது.
யுவதி ஒருத்தி
வீடியோ ஹாலில்
வெகு நேரமாக இருக்கிறாள்.
ஒரு நிலையம்
ஒரு தயாரிப்பு
தேன்
செக்கு எண்ணெய்
மிளகு
பூண்டு
ஏலக்காய்
வாழைப்பழம் சகிதம்
மெலிந்த தேகம் கொண்டவள்
அமர்ந்திருக்கிறாள்.
சிறு அறிவிப்பு.



பேஸஞ்சரில் அவசரமாக ஏறுகிறார்கள்.
கடைசி நிமிடத்தில்
டிக்கெட் எடுத்து ஒருவன் ஓடி வருகிறான்.
புதிதாகப் பணியில் சேர்ந்த குட்டையான
இளவயதுப் பெண்
பச்சைக் கொடி காட்டுகிறாள்.
ரயிலின் கடைசிப்பெட்டியை
வெறித்தபடி இருக்கிறேன்.
ஆளரவமற்று
இப்போது
தனியாக இருக்கிறது ரயில் நிலையம்.

## எப்போதும் ஏதாவதொரு ஜன்னலில் அமர்ந்தேயிருக்கும் குருவி

அது தன் தானியங்களையோ
அல்லது
தனது கிளையையோ நினைத்துக்கொள்கிறது
மேலும்
பறந்து சென்ற கணத்தில்
திரும்பவும் வந்து அமர்கிறது
தனது
இணைக்காக அது காத்திருக்கவும் கூடும்
இங்குமங்கும்
தலை திருப்ப முயற்சிக்கிறது
சில வேளைகளில்
ஜன்னல் கண்ணாடிகளை
கொத்திப் பார்க்கிறது
வீட்டின் தானியக்காரி குவளையில்
நீரும் வைத்துவிட்டுப் போகிறாள்
இப்போது
இணையும் வந்து சேர்ந்தது
தத்தித்தத்தி விளையாடத் தொடங்குகின்றன
பின் முத்தமிட்டுக் கொள்கின்றன
தெருவில் யாரோ ஒருவன்
ஹாரன் அடித்தபடி
சுவரோரம் நிறுத்தும் சப்தத்தில்
பதற்றத்துடன்
சற்று தொலைவில் இருக்கும் மரத்தில்
அமர்ந்து கொள்கிறது
ஜன்னலில் குருவிகள் அற்ற
ஞாயிறின் நண்பகல்
மௌனம் கொண்டிருக்கிறது.

## இறந்தவர்களின் எண்களை எப்படிப் பின்தொடர்வது

இறந்தவர்களின்
எண்களை அழிக்க நினைக்கையில்
கைகள்
சற்று தடுமாறுகின்றன.
அப்படியே இருக்கட்டுமென்று
விடவும் முடியவில்லை.
இறந்தவர்களின் எண்களை
வைத்துக் கொண்டு என்னதான் செய்வது.
இறந்தவர்களின்
குரல்கள்
அவ்வெண்ணில் ஒரு போதும்
கேட்கப் போவதில்லை.
இறந்தவர்களின்
எண்களில்
யாரோ ஒருவர் பேசுவது மிகவும்
பதற்றமாக இருக்கிறது.
அந்த எண்கள்
இறந்தவனுக்கு மட்டுமே சொந்தம்
என்று பதிந்து போனது.
இனி
இறந்தவர்களின் எண்களுக்கு
என்னவிதமான
மெஸேஜ் செய்ய இயலும்.
ஒருவித அசூசையுடனேயே
சமீபத்தில்
இறந்தவனின் எண்களை
டெலிட் செய்தேன்.

## கனவுகள் சுரக்கும் மூளை வாய்த்தவன்

பேய்மழைபோல்
அவனது இரவுகளில் கனவுகள் பொழிகின்றன.

இருள் பிரதேசத்தில்
வெட்டுண்ட புழுவினைப்போல்
நெளிகிறான்.
கோரப்பற்கள் அவனைக் கொஞ்சம்
கொஞ்சமாகக் குதறுகிறது.
குருதி பெருகும் ஆற்றின் மைய்யத்தில்
தத்தளிக்கிறான்.
போதாக்குறைக்கு
வாய்பிளந்து முதலையொன்று
விரைந்து வருகிறது.
திடுமென
தூரத்தில்
காடு தீப்பற்றி எரிகிறது.
பாலைத்திணையில்
நீர் சொட்டுக்காக அலைந்து திரிகிறான்.
ரத்தக்காட்டேறியொன்று
பள்ளத்தாக்கில்
அவனது உடலை வீசிச்செல்கிறது.
பனிப்பிரதேசத்தில்
கனியொன்றைச் சுவைக்கிறான்.
தவிர
எரிமலைக்குழம்பின் ஜ்வாலையில்
குளிர்காய்கிறான்.
இப்போது
அவனது
உடலில் விதவிதமான மலர்கள்
பூக்கத் தொடங்குகின்றன.

## தீ வளர்க்கும் பெண்

நீலநிற கண்களைக் கொண்ட அப்பெண்
பனிப்பொழிவு மிகுந்த
அடர்வனத்தின் ஊடாக
அங்குமிங்குமாக அலைந்து திரிகிறாள்.
அவளது பாதங்கள் பட்டு
சருகுகள் தீப்பிடிக்கின்றன.
செந்நிற கனிகள் பறித்து
ருசிகாண்கிறாள்.
ஊசிப்பாலைகள் நிறைந்த
காட்டுப்பூக்களைப் பறித்து
தலையில் சூடிக்கொள்கிறாள்.
பழுப்பு நிற மரங்களின் ஊடாக
ஒளிக்கதிர் பாய்கிறது.
பெயர் தெரியாத பூச்சிகளும்
வண்டினங்களும்
வட்டமிடுகின்றன.
அவ்வுயர் மரத்தின் தேனடையில்
கல்லொன்றை விட்டெறிகிறாள்.
பின்
அவ்வடர்கானகத்தின்
நடுவேயுள்ள நீர் நிலையில்
வண்ண நிற மீன்போல்
நீந்திச் செல்கிறாள்.
உடன் குட்டி மீன்கள்
அவளைப் பின் தொடர்கின்றன.
பாசிகள் படர்ந்த அதனின் கரையில்
மெல்ல ஏறி கூந்தலைச் சிலுப்புகிறாள்.
இப்போது
மீண்டும் பற்றிக் கொள்கிறது காடு.

## மகரந்தம் சூடிய உடல் கொண்டவள்

நீண்ட உடல்கொண்ட அவள்
மகரந்தம் சூடிக்கொண்டு அலைகின்றாள்.
அவளைப் பின்தொடர்கிற ஆண்கள்
கிறங்கிப்போகிறார்கள்.
அவள் கடக்கும் பாதைகள் எங்கும்
பூக்கள் முளைக்கத் தொடங்கிவிடுகின்றன.
அவளது
தோட்டத்தில் அதிகாலையில்
குயிலொன்று இசைக்கத் தொடங்குகிறது.
அவளின்
ஒவ்வொரு நடையிலும்
வனமொன்று துளிர்க்கின்றது.
காட்டுப்பட்சிகளைத்
தனது கைகளில் ஏந்தியபடி
திரிகின்றாள்.
விதவிதமான மலர்கள் அணிந்து கொள்ளும்
அவளது உடலிலிருந்து
கூட்டமாக வண்டுகள்
வெளியேறிக் கொண்டிருக்கின்றன.
இப்போது
எண்ணற்ற காடுகளை
அவளது உடல் துப்பி வைக்கிறது.

## இருண்மையின் வெளி

பிறழ்வின் கணங்கள் சேமிக்கும்
நினைவுகள் பேசும் அயர்ச்சியை
வரைந்து செல்கிறது அக்கோடு.
மனக்குகையின்
இருளில் மூழ்கி வௌவால் கூட்டமொன்று
அசூசையான மொழியில்
சப்தமிட்டுக் கொள்கின்றன.
குகையெங்கும்
குமட்டும் வாடை படர்ந்திருக்கிறது.
அதனை சுவாசித்தபடி தலைகீழாய்
நடக்கத் துவங்குகிறேன்.
வரை ஆடுகள்
ஓவியமாக இருக்கும்
பாறையைத் தொட்டுப் பார்க்கிறேன்.
சிக்கிமுக்கி கல் கொண்டு மூட்டுகிறேன்.
எனது
வால் திடுமென மறைகிறது.

நிமிர்ந்து நடக்கிறேன்.
அரவங்கள் நெளியும் புதருக்குள் மெல்ல
நுழைகின்றேன்.
அப்போது
கனியொன்று வாய்த்தது.
இப்போது
பிரதேசமெங்கும் நான் இருக்கிறேன்.

## புலன் மயக்கம்

இரவு ரயில் போல் நீண்டு ஓடுகிறது.
இரவு தொடங்குகையில்
இங்கேயொரு
பச்சை மற்றும் சிவப்புக் கம்பளங்கள்
விரிகின்றன.
நெடிய இவ்விரவில் சில் வண்டுகள்
பறக்கத் தொடங்குகின்றன.
பேரமைதி கொண்டிருக்கும் இரவில்
தூரதேசத்து இளவரசியைத்
தேடத் தொடங்குகிறானவன்.
வாரணங்கள் பூட்டி
விரைந்து செல்கிறானவன்.
ஏழு கடல் தாண்டி ஏழு மலை தாண்டி
விரைகிறதது.
மாடத்தில் விளக்கு எரிய
தனது ராஜகுமாரனுக்காக காத்திருக்கிறாள்
ஒரு தேவதை.
சட்டென வந்தடைந்தவன்
அவளை கைகளில் ஏந்தி
திணை வந்து சேர்ந்தான்.
இப்போது இரவு தன்னைப் பெயர்த்து
எழுதிக் கொண்டிருந்தது.

## மழைக்காலத்துக் காட்சி

செம்பருத்திப் பூத்துக் கிடக்கிறது.
அணில்
முருங்கை மரத்தில் ஏறுவதும்
இறங்குவதுமாக உள்ளது.
சிட்டுக்குருவிகள் இரண்டு
ஜன்னல் பக்கம் திரிகின்றன.
வீடுகள் அற்ற வெளியில்
செம்போத்து ஒன்று மெல்ல எட்டு வைக்கிறது.
எருக்கஞ்செடிப்பூக்கள் மீது கருவண்டுகள்
நடனமாடுகின்றன.
சரக்கொன்றை
நேற்று பெய்த மழையில்
மகிழ்ச்சி கொண்டிருக்கின்றது.
புற்கள் விரவிக் கிடக்கும்
அப் பிரதேசத்தில்
மாடுகள் மேய்ச்சல் கொள்கின்றன.
புங்கை மர நிழலில் மைனாக்கள்
தத்தித் திரிகின்றன.
புங்கையின் வாசம் அச்ஜோடிகள்
மயங்கித் திரியச் செய்கிறது.
தும்பை கொண்டு
வண்ணத்துப் பூச்சிகளை
சிலர் துரத்துகிறார்கள்.
தட்டான்கள்
அக்குளத்தைச் சுற்றி
வந்து கொண்டிருக்கின்றன.
முக்குளிப்பான்கள் சில அங்குமிங்குமாக
அலைகின்றன.
உடைந்த மரக்கிளையில் அமர்ந்திருந்த
நாரையொன்று விருட்டெனக்
கவ்வி மேலெழுந்தது.
இலைகளின் நுனியில் நீர் தொங்க
பூவரசு நிழல் கொண்டிருக்கிறது.
மேலும் இரு காதல் ஜோடிகள்
அங்கு வந்து சேர்ந்தன.
இப்போது முத்தங்கள்
அக்காடெங்கும் பரவியது.
நானொரு மஞ்சணத்திப் பழமொன்று
பறித்துத் திரும்புகையில்
ஐம்பது ஆண்டுகள் ஆகியிருந்தது.

## வேப்பம் பூக்கள் உதிரும் பகல்

வேப்பம் பூக்கள் உதிரும் கோடையில்
அவள் மெதுவாக வந்து கொண்டிருந்தாள்.
கண்மாய்க்கரை மஞ்சணத்தி மறைவில்
மைனாக்கள் இரண்டு
எட்டு வைத்துக் கொண்டிருந்தன.
தூரத்தில் ஆடுகளை
ஒழுங்கு செய்துகொண்டிருந்தானொருவன்.
தும்பைச் செடிகள் கொண்டு இருவர்
பாப்பாத்தியைத் துரத்திக்கொண்டிருந்தனர்.
தட்டான்கள் சில
கண்களை உருட்டிக்கொண்டிருந்தன.
மேலும்
வேப்பம் பூக்கள்
உதிரத் தொடங்கியிருந்தன.
அவள்
சன்னமாகப் பாடத் தொடங்கியிருத்தாள்.
தும்பைக்குள் அகப்படாத
வண்ணத்துப்பூச்சிகள்
தாவணியில் ஒட்டிக்கொண்டன.
இப்போது
நான் அவளை உலுக்கினேன்
வண்ணநிறங்கள் சுமந்து
அவள் மேற்கே பறக்கத் தொடங்கினாள்.

*mail to:* **senthi.punaivu@gmail.com**

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

12

2024

# ஒளியும் சரடும்

பார்த்ததை, கேட்டதை, முகர்ந்ததை, தன்மையுடைய குளிரையும் வலியைக் கொண்ட வெம்மையையும் அனுபவித்ததை, இதயம் படபடத்ததை, தூக்கத்தையும் பசியையும் உணர்ந்ததை, நடப்பதை, ஓடுவதை, காற்றையும் மழையையும் பனியையும் தொடுவதை, கைகளைச் சேர்த்துக்கொள்வதை என் உடல் அனுபவிக்க அவற்றை நான் எழுத்தில் கொண்டு வருகிறேன்.

## ஹான் காங் | HAN KANG

● தமிழில்: ஸிந்துஜா

இந்தப் பரவசம் நிரம்பிய உணர்வுகளை உடம்புக்குள் ஓடும் இரத்தத்தின் இயல்புடன் என் வாக்கியங்களில் கொண்டு வருகிறேன்; ஏதோ நான் ஒரு மின்னோட்டத்தைப் பாய்ச்சுவது போல. இந்த மின்சாரம் என் வாசகர்கள் மீது செலுத்தப்படும் போது எனக்கு ஆச்சரியமும் நெகிழ்வும் ஏற்படுகின்றன. இத்தகைய தருணங்களில் மொழி எனும் சாதனம் ஏற்படுத்தும் தொடர்பை அனுபவிக்கிறேன்; எப்படி என் கேள்விகள் வாசகர்களை ஒரு மின்னோட்டமென அடைகின்றன என்று புரிந்துகொள்கிறேன். இந்த சரடின் மூலம் என்னோடு இணைந்து கொண்டவர்களுக்கும் இனிமேல் வரப் போகிறவர்களுக்கும் என் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.



கடந்த ஜனவரியில், தவிர்க்க முடியாது நாங்கள் வேறிடத்துக்குச் சென்று குடியேற வேண்டிய நேரத்தில், சாமான்கள் வைக்கும் அறையைக் காலி செய்யும் முயற்சியில் ஈடுபட்ட போது, என் பழைய ஷூ பாக்ஸ் கையில் தட்டுப்பட்டது. திறந்து பார்த்த போது என் சிறுபிராயத்து டயரிகள் பல அதில் காணப்பட்டன. பத்திரிகைகளின் அடுக்குகளில் ஒரு துண்டுப் பிரசுரம் காணப்பட்டது. அதன் மேல் 'கவிதை நூல்' என்று பென்சிலால் எழுதப்பட்டிருந்தது. ஐந்து 'ஏ5' தாள் அளவில் அரைப் பக்கங்களாக மடிக்கப்பட்டு ஒரு மெலிதான புத்தகமாகப் பின் செய்யப்பட்டிருந்தது. தலைப்பின் கீழ் வளைந்து வளைந்து செல்லும் இரு கோடுகளை வரைந்திருந்தேன். இடது பக்கத்தில் ஆறு படிகளின் மூலம் ஒரு கோடு

## ஹான் காங்

ஹான் காங், தென் கொரிய எழுத்தாளர். 1970ஆம் ஆண்டு பிறந்தவர். இவரது தந்தை ஹான் சியூங் வோனும் புகழ் பெற்ற நாவலாசிரியர். ஹான் காங், தனது 23ஆம் வயதில் 'இலக்கியமும் சமூகமும்' என்ற பத்திரிகையில் கவிதைகள் எழுதி தனது இலக்கிய பயணத்தை தொடங்கினார். அடுத்த இரண்டாண்டுகளில் அவரது சிறுகதை தொகுப்பு பதிப்பிக்கப்பட்டது. அதன் பின் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் வெளியான 'தி வெஜிடேரியன்' நாவல் இவருக்கு சர்வதேச அங்கீகாரத்தை பெற்றுத் தந்தது. 2024இல் நோபல் பரிசை வென்றது. தென்கொரியாவிலிருந்து நோபல் விருதைப் பெறும் முதல் எழுத்தாளர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஹான் காங் இதுவரை எட்டு நாவல்கள், பல குறு நாவல்கள், கட்டுரை மற்றும் கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். இவரது 'த ஒயிட் புக்' என்ற நாவல் சர்வதேச புக்கர் பரிசுக்கு பரிந்துரைக்கப்பட்டது.






மேலேறிச் செல்ல, வலது பக்கம் இன்னொரு கோடு ஏழு படிகளில் கீழிறங்கியது போல வரைந்திருந்தேன். அது அட்டைப்பட ஓவியமா? அல்லது அர்த்தமற்ற ஒரு கிறுக்கலா?

அது 1979ஆம் வருடம். அந்தப் புத்தகத்தின் பின்புறத்தில் என் பெயர் எழுதப்பட்டிருந்தது. உள்ளே எட்டு கவிதைகள் அழகாகப் பென்சிலால் எழுதப்பட்டிருந்தன. ஒவ்வொரு பக்கத்தின் கீழும் கால வரிசைப்படி எட்டு தேதிகள் குறிக்கப்பட்டிருந்தன. அங்கு எழுதப்பட்ட வரிகள் பேதைமை நிறைந்த, மெருகேறாத ஓர் எட்டு வயதுச் சிறுமியைக் காட்டின. ஏப்ரலில் எழுதப்பட்டிருந்த ஓர் கவிதை என் கவனத்தை ஈர்த்தது. கீழ்க்கண்ட வரிகளுடன்:

**எங்கு இருக்கிறது அன்பு?**
**அது படபடக்கும் என் உள்ளத்தினுள்ளே.**

**அன்பு என்றால் என்ன?**
**அது நம் உள்ளங்களை இணைக்கும் ஒரு தங்கச் சரடு.**

அந்த கணத்தில் நான் நாற்பது வருடங்களுக்கு முன்னே அனுப்பப்பட்டேன். ஒரு மதிய வேளையில் அந்தத் துண்டுப் பிரசுரத்தை நான் கையாண்டதன் நினைவுகள் என்னைச் சூழ்ந்தன. அளி ரப்பருடன் கூடிய கொண்டையுடன் வைத்திருந்த என் குண்டுப் பென்சில், என் தந்தையின் அறையிலிருந்து தள்ளிக்கொண்டு வந்திருந்த உலோக ஸ்டேப்ளர் ஆகியவை நினைவுக்கு வந்தன. எங்கள் குடும்பம் சியோலுக்குப் போய்க் குடியிருக்கப் போகிறது என்று அறிந்த பின், நான், என் கவிதைகள் எழுதப்பட்ட காகிதங்கள், நோட்டுப் புத்தகங்களின் ஓரங்கள், பேரேட்டுப் பதிவுகளின் பக்கங்கள் ஆகியவற்றைத் திரட்டி ஒரு தனித்த தொகுப்பாக எடுத்து வைத்துக்கொண்டேன் என்பது நினைவுக்கு வந்தது. ஏனோ தெரியவில்லை, நான் என்னுடைய 'கவிதை நூலை' யாரிடமும் காண்பிக்கவில்லை.

டயரிகளையும் கவிதை நூலையும் எடுத்த இடத்தில் வைத்து மூடுவதற்கு முன்பு என் போனில் அந்தக் கவிதையை போட்டோ எடுத்துக்கொண்டேன். முன்பு எழுதிய வார்த்தைகளுக்கும் இப்போது நான் இருக்கும் நிலைமைக்கும் உள்ள தொடர்ச்சியை என்னுடன் வைத்துக்கொள்ள விரும்பினேன்; என் படபடக்கும் உள்ளத்தை. நம் உள்ளங்களுக்கு நடுவே இணைக்கும் அந்தத் தங்கச் சரடு, ஒளியை வெளிப்படுத்தும் ஒரு சரடு.

பதினான்கு வருடங்களுக்குப் பின்னர் என்னுடைய முதல் கவிதையும் அதற்கு அடுத்த ஆண்டு என் முதல் சிறுகதையும் பிரசுரம் பெற்று நான் படைப்பாளியாகி விட்டேன். அடுத்த ஐந்து ஆண்டுகளில் மூன்று வருஷங்களாக நான் எழுதி வந்த நாவலைப் பிரசுரித்தேன். கவிதைகளையும் சிறுகதைகளையும் விட நாவல் எழுதுவது என்னை வெகுவாக ஈர்த்தது. என் சொந்த வாழ்க்கையின் கணிசமான பகுதியை விட்டுக்கொடுத்து, நான் எழுதிய புத்தகங்கள் ஒரு வருடம் முதல் ஏழு வருடங்கள் வரை எடுத்துக்கொண்டன. இதுதான் என்னை என் எழுத்து இழுத்துக்கொள்ளும் முறை. நான் தோண்டி எடுப்பதற்கும் வாசம் செய்வதற்கும் வழி வகுத்த கேள்விகள் அவசரமானவையாகவும் அவசியமானவையாகவும் இருந்ததால் இந்த விட்டுக் கொடுத்தலை நான் ஏற்றுக்கொண்டேன்.

ஒவ்வொரு முறையும், நான் நாவலை எழுதும் போது, எழும் கேள்விகளை நான் வரவேற்கிறேன். அவற்றைத் தழுவிக்கொள்கிறேன். இந்தக் கேள்விகளின் முடிவுகளை நான் அடைவது - நான் விடையைக் கண்டுபிடித்தவுடன் அவை வேறுவிதமாகி விடுகின்றன - என் எழுத்து முடிவடைந்து விடும் சமயத்தில்தான். அந்தத் தருணத்தில் நான் ஆரம்பித்த போது இருந்த ஆளாக இல்லாது மாற்றம் கொள்கிறேன். அவ்வாறு மாறிய பின் மறுபடியும் ஆரம்பிக்கிறேன். அடுத்த கேள்விகள் தொடர்கின்றன. சங்கிலியைப் போல, மேலும் கீழும் அலைந்து திரியும் தொடரும் சதுரங்க ஆட்ட வகை போல. புதிதாக எழுதுவதில் ஈடுபடுகிறேன்.

எனது மூன்றாவது நாவலான The Vegetarianஐ 2003இலிருந்து 2005 வரை எழுதிய போது சில சிக்கலான கேள்விகள் என்னைச் சூழ்ந்திருந்தன. ஒருவர் முற்றிலும் அப்பாவியாக இருக்க முடியுமா? எந்த அளவுக்கு நாம் வன்முறையை நிராகரிக்க முடியும்? மனிதர் என்னும் பிராணியை ஒருவர் நிராகரித்தால் என்ன நேரும்?

வன்முறையை நிராகரிக்கும் விதமாக மாமிசத்தை உண்ண மறுத்து, இறுதியில் எல்லா உணவையும், நீரைத் தவிர மற்றபானங்களையும் ஏற்க மறுப்பதன் மூலம், The Vegetarian நாவலின் கதாநாயகி இயாங்ஹை தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் முயற்சிக்குப் பதிலாக வாழ்வின் இறுதி முனையைச் சந்திக்க நேரிடுகிறது. அவளும் அவளது சகோதரியான இன்ஹையும் எதிர்கொள்ளும் கொடுங்கனவுகளால் கிழிக்கப்பட்டு, சத்தமின்றிக் கதறி, இறுதியை ஒன்றாய்ச் சந்திக்கிறார்கள். இறுதிக் காட்சியை நான் ஆம்புலன்சில் நடப்பதாக எழுதினேன். இந்தக் கதையுலகில் அவள் உயிருடன் இருக்கிறாள் என்னும் என் நம்பிக்கையைத் தெரிவிக்கும் முகமாக. கார் மழைப் பாதையில் வேகமாகச் செல்லுகிறது. கீழே பளபளக்கும் பச்சை இலைகளை மூத்த சகோதரி காரின் ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள். ஏதோ பதிலை எதிர்பார்ப்பவளாக, அல்லது எதிர்ப்பின் சமிக்ஞையை எதிர்கொள்பவளாக. முழு நாவலும் கேள்விகளை இறைக்கின்றது. காண்பதும் கண்டதில் மறுப்பதும் என ஒரு பதிலுக்குக் காத்திருக்கும் நிலைமை.

The Vegetarian-ஐத் தொடர்ந்து வெளிவந்த Ink and Blood இக்கேள்விகளைத் தொடர்வதாயிருந்தது. வன்முறையை மறுக்க வாழ்க்கையையும் உலகத்தையும் மறுப்பது என்பது இயலாதது. நாம் தாவரங்களாக



மாறிவிட முடியாது. பிறகு நாம் தொடர்வது எப்படி? இந்தப் புதிர் நிறைந்த நாவலில் ரோமானிய எழுத்துக்களிலும் சாய்வெழுத்துக்களிலும் எழுதப்பட்ட வாக்கியங்கள் ஒன்றின் மேல் ஒன்று நெருக்கியடித்துக் கொண்டு நின்றன. சாவின் நிழலுடன் போராடும் கதையின் முக்கிய பாத்திரம், அவளுடைய சிநேகிதியின் மரணம் தற்கொலையால் விளைந்ததல்ல என்று நிரூபிக்க, தன் வாழ்க்கையைப் பணயம் வைத்துப் போராடுகிறாள். மரணத்திலிருந்தும் அழிவிலிருந்தும் விடுபட்டு வெளியேற, அவள் தன்னையே தரையில் இழுத்துக்கொண்டு போவதாக நான் எழுதிய இறுதிக் காட்சியின் போது, நானே எனக்குள் கேட்டுக்கொண்ட கேள்விகள்: 'நாம் இறுதியில் பிழைத்தெழக் கூடாதா? உண்மையை வெளிக்கொணரும் சாட்சியாக நமது வாழ்க்கைகள் அமைய வேண்டாமா?'

Greek Lessons என்னும் என் ஐந்தாவது நாவலில் இக்கேள்விகளை நான் மேலும் தூண்டித் துருவிப் பார்த்தேன். நாம் இவ்வுலகில் வாழ வேண்டுமென்றால், இந்தத் தருணங்கள் அதை சாத்தியமாக்குகின்றனவா? அமைதியும் இருளும் நிறைந்த அவரவரது தனிப்பட்ட பாதைகளில் ஓர் ஊமைப் பெண்ணும் பார்வை இழந்த ஒருவனும் நடந்து வருகையில் அவர்களது பாதைகள் சந்திக்கின்றன. இந்தக் கதையின் தொடுபுலனை நெருங்கிய தருணங்களை நான் விவரிக்க விரும்பினேன். அந்தப் பெண் அமைதியையும் இருளையும் ஊடுருவிக்கொண்டு மெதுவாகச் செல்லுகையில் தன் கையை நீட்டி அந்த ஆணின் உள்ளங்கையில் சில வார்த்தைகளை எழுதுவதாக நாவல் செல்கிறது. ஒளிமிகுந்த அந்த சமயம் வெளிப்படுத்தும் அழிவற்ற நிரந்தரத்தை இந்த பாத்திரங்களும் தத்தம் மென்மையான உணர்வுகளில் வெளிப்படுத்துகிறார்கள். நான் கேட்க விரும்பிய கேள்வி இதுதான்: 'இந்த வன்முறை சூழ்ந்த உலகில் நாம் மனிதத் தன்மையின் மேன்மையை, அதன் அரவணைத்துச் செல்லும் இருப்பை உணர்ந்து வாழ முடியாதா?'

இந்தக் கேள்வியின் முடிவை நான் அடைந்ததும், என் அடுத்த நாவலைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். 2012ஆம் வருட வசந்த காலமது. அப்போது நான் என் ஐந்தாவது நாவலைப் பிரசுரித்து விட்டேன். ஒளியையும் வெம்மையையும் வெளிப்படுத்தும் ஒரு நாவலை எழுதும் அடுத்த அடியை எடுத்து வைக்க வேண்டும் என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். உலகை அரவணைத்துச் செல்லும் வாழ்க்கையைப் பற்றிய இந்த நாவலில் உணர்ச்சிகளை வெளிப்படையாக, சற்று ஆரவாரமாக வெளிப்படுத்தி நிரப்பிவிடத் தீர்மானித்தேன். விரைவில் தலைப்பையும் கண்டுபிடித்து முதல் வரைவையும் இருபது பக்கங்களுக்கு எழுதிய பிறகு, மேலே தொடர முடியவில்லை. எனக்குள் ஏதோ ஒன்று அந்த நாவலை எழுதவிடாமல் தடுத்துக் கொண்டிருந்ததை உணர்ந்தேன். அதுவரை நான் க்வாங்ஜுவைப் பற்றி எழுத நினைத்திருக்கவில்லை.

எனக்கு ஒன்பது வயதாகும் போது என் குடும்பத்துடன் ஜனவரி 1980இல் க்வாங்ஜுவை விட்டு வெளியேறினேன். மிகப் பெரும் படுகொலைகள் அங்கு நடக்கவிருந்த

நான்கு மாதங்களுக்கு முன்னால். சில வருஷங்கள் கழித்து வீட்டில் பெரியவர்கள் யாருமில்லாத நேரத்தில் புத்தக அலமாரியில் இருந்த 'க்வாங்ஜு புகைப்பட நூல்' என்னும் புத்தகத்தைப் பிரித்துப் பார்த்தேன். அப்போது எனக்குப் பனிரெண்டு வயது. அதில் காணப்பட்ட புகைப்படங்களில் க்வாங்ஜுவில் வசித்த ஜனங்களும் மாணவர்களும் அரசைக் கவிழ்த்து ராணுவம் அதிகாரத்தைக் கைப்பற்றியதை எதிர்த்ததால் தடிகளாலும் துப்பாக்கிகளாலும் கத்திகளாலும் கொல்லப்பட்டதைக் காண முடிந்தது. அந்தக் கலவரங்களில் தப்பித்தவர்களும் இறந்தவர்களின் குடும்பத்தைச் சார்ந்தவர்களும் ரகசியமாக இந்தப் புத்தகத்தைப் பிரசுரித்து வெளியிட்டார்கள். ஏனெனில் அச்சமயம் உண்மையை வெளிப்படுத்தும் இந்தப் புத்தகம் ஊடகங்களின் மூலம் அடக்கியாளப்பட்டு வெளிவந்த பொய்ப் பிரச்சாரங்களை முறியடித்ததாக இருந்தது. அப்போது சிறுமியாக இருந்த எனக்கு அந்தப் படங்களில் உறைந்திருந்த அரசியல் முக்கியத்துவம் புரிபடவில்லை. குதறப்பட்டிருந்த அந்த முகங்கள் என் மனதில் நிலைத்துவிட்டன. என் மனதில் எழுந்த மனிதர்களை பற்றிய அடிப்படை வினா: 'ஒருவர் மற்றவர் மீது நிகழ்த்தும் இதுவா மனிதச் செயல்?'

அதன்பிறகு பல்கலைக் கழக மருத்துவமனையின் முன்பாக முடிவில்லாத வரிசையில் நின்று இரத்த தானம் செய்யக் காத்துக் கொண்டிருக்கும் மனிதர்கள் அடங்கிய புகைப்படம் ஒன்றைப் பார்த்தேன். 'ஒருவர் மற்றவர் மீது நிகழ்த்தும் இதுவா மனிதச் செயல்?' இந்த இரு கேள்விகளும் ஒன்றை ஒன்று மோதிக்கொண்டு, சமரசமற்றும் போராடும் திறமையற்றும் உருவாக்கிய முடிச்சை என்னால் பிரித்தெடுக்க முடியவில்லை.

2012ஆம் ஆண்டில் ஒருநாள் செறிவான வாழ்க்கையை நேசிக்கும் ஒரு நாவலை எழுதத் தீர்மானித்தேன். ஆனால், மறுபடியும் தீர்க்க முடியாத இந்தப் பிரச்சனையால் நான் எதிர்ப்பைச் சந்தித்தேன். மனிதர்களின் மீதான ஆழமான நம்பிக்கையை நான் இழந்து வெகு காலமாகியிருந்தது. அப்படியிருக்கும் போது நான் எப்படி இந்த உலகை அணைத்துக்கொள்ள முடியும்? தவிர்க்க முடியாத இந்தப் புதிரை நான் எதிர்கொள்ள வேண்டுமென்றால் நான் என் செயல்பாடுகளை முன்னெடுத்துச் செல்ல வேண்டும் என்று உணர்ந்தேன். என் எழுத்தின் மூலம்தான் இதைச் சாதித்துக் கடக்க முடியும் என்று புரிந்துகொண்டேன்.

அந்த வருடத்தின் பெரும்பான்மைப் பொழுதை நாவலை வடிவமைக்கும் முயற்சியில் ஈடுபட்டேன். 1980ஆம் வருட மே மாத க்வாங்ஜு நிலைமை இந்தப் புத்தகத்தின் ஓர் அடுக்கில் இடம்பெறும் என்றிருந்தேன். மாங்வோல் - டாங்கில் இருந்த கல்லறைக்குச் சென்றேன். நடுப்பகலைக் கடந்திருந்த அந்த நேரம் முந்திய இரவு பெய்திருந்த பனியில் மூழ்கிக் கிடந்தது. என் மார்பில்



கைகளைக் கட்டியபடி குளிர் நடுக்கும் அந்த கல்லறையிலிருந்து வெளியே வந்தேன். என் அடுத்த நாவல் க்வாங்ஜுவை வைத்து முழுக்க முழுக்க எழுதப்படுமேயல்லாது புத்தகத்தின் ஓர் அடுக்காக நின்றுவிடாது என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். 900 சான்றுகள் நிறைந்திருந்த புத்தகமொன்றை வாங்கி தினத்துக்கு ஒன்பது மணி நேரமென்று ஒரு மாதம் அதில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த ஒவ்வொரு சான்றையும் படித்து முடித்தேன். அதன்பிறகு க்வாங்ஜுவில் மட்டுமில்லாது அருகில் இருந்த பகுதிகளில் நடந்த அரசாங்க வன்முறை விவரங்களையும் திரட்டினேன். இதன் நீட்சியாக, உலகெங்கும், சரித்திரம் முழுவதிலும், கடந்த கால, நிகழ்கால மனிதப் படுகொலை நிகழ்வுகளைப் படித்து முடித்தேன்.

என் ஆராய்ச்சிக் காலத்தில் என் மனதில் இரண்டு கேள்விகள் முன்னணியில் நின்றன. என் இருபதுகளில் ஒவ்வொரு வருட டயரியிலும் இந்த வரிகளை எழுதினேன்:

**நிகழ் காலம் இறந்த காலத்துக்கு உதவுமா? உயிருடன் இருப்பவர்கள் இறந்தவர்களைக் காக்க முடியுமா?**

நான் படிக்கப் படிக்க இவை சாத்தியமற்ற கேள்விகள் என்று தெளிவாகியது. வாழ்க்கையின் இருண்ட பகுதிகளைத் தொட்டு எதிர்ப்பட்ட இவை, ஏற்கெனவே

மனிதர்கள் மீது நம்பிக்கை சிதைந்து கிடந்த என் மனதை இன்னும் உடைத்தெறிந்தன. அநேகமாக நாவலை எழுதும் முயற்சியைக் கைவிட்டேன் என்றுதான் கூற வேண்டும். அதன்பிறகு, இரவுப் பள்ளியில் பணிபுரியும் ஒரு ஆசிரியர் தன் நாட்குறிப்பில் எழுதிய வரிகளைப் படித்தேன். பார்க் யாங் ஜூன் என்னும் அந்த சங்கோஜமான இளைஞன், 1980 மே மாதத்தில் பத்து நாள்கள் நடந்த எழுச்சியின் போது, க்வாங்ஜூவில் சுயாட்சியை விரும்பிய குழு ஒன்று நடத்திய ஆர்ப்பாட்ட நிகழ்வில் கலந்துகொண்டான். அங்கு மறுபடியும் சிப்பாய்கள் அதிகாலையில் வருவார்கள் என்று தெரிந்தும் அரசாங்கத் தலைமையகம் இருந்த கட்டிடத்தில்தான் அவன் தங்கியிருந்தான். அவ்விடத்தில் அவன் சுடப்பட்டு இறந்தான். அவனது கடைசி நாளன்று தனது டயரியில் அவன் எழுதியிருந்ததாவது: ‘ஏன் இறைவனே, எனக்கு மனசாட்சி இருக்கிறது? ஏன் அது என்னைப் பிடுங்கித் துன்புறுத்துகிறது? நான் வாழ விரும்புகிறேன்.’

இவற்றைப் படித்ததும் என் நாவல் எப்படிப் படைக்கப்பட வேண்டும் என்னும் தெளிவு ஒரு மின்னலைப் போலத் தோன்றியதை அறிந்தேன். என்னுடைய இரண்டு கேள்விகளும் மாற்றப்பட வேண்டியவாயின.

**கடந்த காலம் நிகழ்காலத்துக்கு உதவுமா? இறந்தவர்கள் உயிருடன் இருப்பவர்களைக் காக்க முடியுமா?**

பின்னர் நான் Human Acts-ஐ எழுதிக்கொண்டிருக்கும் போது கடந்த காலம் நிகழ்காலத்துக்கு உதவுகிறது என்றும் இறந்தவர்கள் உயிருடன் இருப்பவர்களுக்கு உதவுகிறார்கள் என்றும் சில சமயங்களில் உணர்ந்தேன். நான் அவ்வப்போது கல்லறைக்கு மறுபடியும் சென்றேன். அச்சமயங்களில் காலநிலை சுமுகமாகத் திகழ்ந்தது. நான் கண்களை மூடிக்கொள்ளும் போது சூரியனின் ஆரஞ்சுக் கதிர்கள் என் கண் இமைகளை வருடுவதாக உணர்ந்தேன். அது வாழ்வின் ஒளி என்று எனக்குத் தோன்றிற்று. விவரிக்க முடியாத இளஞ்சூட்டுடன் ஒளியும் காற்றும் என்னைத் தழுவுவதாக உணர்ந்தேன்.

அந்தப் புகைப்படங்கள் அடங்கிய புத்தகத்தைப் பார்த்த பின் வெகு காலத்துக்கு என் மனதில் நிலை நின்ற கேள்விகள்: ‘எப்படி மனிதர்களிடம் இவ்வளவு வன்முறை உணர்வு? அதே நேரம் எப்படி அவர்கள் இத்தகைய பேரளவிலான வன்முறைக்கு எதிராக நிற்கிறார்கள்? மனிதர்கள் என்பவர்கள்தான் யார்? மனித பயங்கரங்களும் மனித மரியாதைகளும் என்ற இரண்டு செங்குத்தான பாறைகளுக்கு நடுவேயுள்ள இடைவெளியில் புகுந்து சமரசம் செய்வது சாத்தியம்தானா?’

அதற்கு நான் இறந்தவர்களின் உதவியைத்தான் பெற வேண்டும். Human Acts நாவலில் வரும் குழந்தையான டாங் - ஹோ தனது தாயின் கையுடன் சேர்த்துக்கொண்டு அவளைச் சூரியனை நோக்கி நகர்ந்து செல்லச் செய்வது போல.

இறந்தவர்கள், உறவுகளை இழந்து வாடுபவர்கள், அல்லது தப்பித்து வந்தவர்கள் ஆகியோருக்கு இழைக்கப்பட்ட அநீதியை என்னால் மாற்றிவிட முடியாது. நாவலின் ஆரம்பத்திலும் இறுதியிலும் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றுவது போல் இறந்தவர்கள் புதைக்கப்பட்ட, அவர்களுக்கான இறுதிச் சடங்குகள் செய்யப்பட்ட நகரசபை உடற்பயிற்சிக் கட்டிடத்தில் நாவலின் முதல் காட்சியை அமைத்திருக்கிறேன். அங்கே பதினைந்து வயதான டாங்-ஹோ உடல்களின் மீது வெள்ளைத் துணிகளைப் போர்த்தி மெழுகுவர்த்திகளை ஏற்றுகிறான். தீயினுள் சுடர் விடும் நீல நிற ஜுவாலையைப் பார்த்தபடி.

இந்த நாவலின் கொரியத் தலைப்பு Sonyeon-i-onda. கடைசி வார்த்தையான onda-வின் அர்த்தம் ‘வா’. Sonyeon-ஐ முன்னிலையில் நீ என்று அழைக்கப்படும் போது - அது உரிமையுடனோ அல்லது அலட்சியமாகவோ இருப்பினும் - அவன் விழித்தெழுந்து பிரத்யட்சத்தை நோக்கி நடக்கிறான். அவன் காலடிகள் ஒரு ஆவியின் அடிகளாக இருக்கின்றன. அவன் நெருங்க நெருங்க இப்போது என்னும் நிலையை அடைகிறான். மனித மென்மையும் குரூரமும் அளவிடமுடியாத இணைகோடுகளாய் காலத்தையும் இடத்தையும் தொடும் போது க்வாங்ஜு என்பது ஒரு இடத்தின் பெயர் (proper noun) என்பதிலிருந்து அழிந்து அது ஒரு பெயர்ச்சொல்லாக (noun) மாறிவிடுகிறது. இதை நான் இந்தப் புத்தகத்தை எழுதும் போது கற்றேன். காலத்தையும் பெருவெளியையும் கடந்து இது நம்மிடம் திரும்பத் திரும்ப வருகிறது. எப்போதும் நிகழ்காலமாக (present tense). இப்போதும் கூட.

இந்தப் புத்தகம் பிரசுரமானதும் அதைப் படித்த வாசகர்கள், படிக்கும் போது தாம் உணர்ந்த வலியினைப் பற்றி என்னிடம் கூறியதும் ஆச்சரியமடைந்தேன். நான் எழுதும் போது உணர்ந்த வலியும் வாசகர்கள் உணர்ந்ததாகத் தெரிவித்த வலியும் ஒன்றுக்கொன்று எப்படித் தொடர்பு கொண்டது என்று யோசித்துப் பார்த்தேன். இத்தகைய மாளாத் துயரத்துக்கான பின்னணி என்ன? நாம் மனிதத்தன்மை மீது ஆழ்ந்த நம்பிக்கை கொள்ள வேண்டும் என்று விரும்பும் போது அந்த நம்பிக்கையை ஆட்டம் காண வைத்தால் நாமே அழிக்கப்பட்டு விட்டது போல உணருகின்றோமா? நாம் மனிதர்களை நேசிக்க விரும்புகையில் அது ஆட்டம் கண்டால் நமக்கு ஆழ்ந்த துக்கம் உண்டாகின்றது அல்லவா? அன்பு வலியை ஈன்றெடுக்கிறதா? வலி என்பது அன்பை வெளிப்படுத்தும் சாதனமா?

அதே வருடம், ஜூன் மாதத்தில் நான் ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவில் ஒரு வெட்ட வெளியில் அடர்த்தியற்ற பனி பொழிகிற போது நான் நடந்து

கொண்டிருந்தேன். ஆயிரக்கணக்கான கறுப்பு மரக் கட்டைகள் அந்த வெளியில் விழுந்து கிடந்தன. ஒவ்வொன்றின் பின்னாலும் ஒரு சமாதிக் குவியல். நான் தண்ணீருக்குள் கால் வைத்துத் திரும்பிப் பார்த்த போது வெட்ட வெளியின் கோடியில் கடலைக் கண்டேன். அதைத் தவறாக நான் அடிவானம் என்று நினைத்திருந்தேன். இந்த மாதிரி இடத்தில் எதற்காகக் கல்லறைகள்? என்று நான் ஆச்சரியப்பட்டேன். கடலுக்கு அருகாமையில் கீழ் மட்டத்துக் குவியல்களில் இருந்து எலும்புகள் அடித்துச் செல்லப்பட்டிருக்குமே? மேல் மட்டக் குவியல்களில் இருக்கும் எலும்புகளையாவது தனியே எடுத்து வைக்க வேண்டாமா? ஆனால், எப்படி? என்னிடம் ஒரு மண்வெட்டி கூட இல்லை. தண்ணீர் ஏற்கனவே என் கணுக்கால் அளவுக்கு நின்றிருந்தது. நான் கனவிலிருந்து விழித்துவிட்டேன். ஜன்னல் வழியாகத் தெரிந்த புற உலகின் இருளைப் பார்த்தேன். இந்தக் கனவு என்னிடம் ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லுகிறது என்று எனக்குத் தோன்றிற்று. அந்தக் கனவை எழுதி முடித்த பின்பு இது என் அடுத்த நாவலின் ஆரம்பமாக இருக்கும் என்று எனக்குப் பட்டது.




'தி வெஜிடேரியன்', தமிழில் 'மரக்கறி' என்ற பெயரில் கவிஞர் சமயவேல் மொழியாக்கத்தில் வெளிவந்துள்ளது.

வெளியீடு:

தமிழ்வெளி பதிப்பகம், தொலைபேசி:

+91 94861 02498

எம்மாதிரி இது என்னை இழுத்துச் செல்லும் என்று எனக்குத் தெளிவாக யோசனை எதுவும் தோன்றவில்லை. கனவைத் தொடர்ந்து பல கதைகளின் ஆரம்பங்கள் என் மனதில் கிளைத்தெழ அவற்றை நான் கிறுக்கிக் கொண்டிருந்தேன். இறுதியில் 2017 ஆம் வருடம் டிசம்பர் மாதம் ஜிஜு தீவில் ஓர் அறையை எடுத்துக்கொண்டு அடுத்த இரண்டு வருஷங்களை ஜிஜுவிலும் சியோலிலுமாக என் நேரத்தைச் செலவழித்தேன். காடுகளிலும் கடல் புறத்திலும் கிராமத்து சாலைகளிலும் நடந்தபடி, ஜிஜுவின் வானிலையை - அதன் காற்றை, ஒளியை, பனியை அணுஅணுவாக ரசித்தபடி வந்த போது என் நாவலின் உருவம் எனக்குப் புலப்பட்டது. Human Acts ஐப் போல, படுகொலையிலிருந்து மீண்டவர்கள் தந்த வாக்குமூலங்களை, அவற்றில் தெரிவிக்கப்பட்டிருந்த மிருகத்தனமான சித்திரவதைகளைத் தவற விடாது மனதில் இருத்தி, ஒரு கட்டுப்பாட்டுடன் எழுதப்பட்டதுதான் We Do Not Part நாவல். கறுப்பு மரக் கட்டைகளும் பொங்கும் கடலுமாக வந்த கனவு எனக்கு ஏற்பட்டு ஏழாண்டுகளுக்குப் பிறகு இது பிரசுரமாயிற்று.

இந்த நாவலை எழுதும் போது என் நோட்டுப் புத்தகத்தில் இந்தக் குறிப்புகளை வடித்தெடுத்தேன்:

**வாழ்க்கை வாழ விரும்புகிறது. வாழ்வு உலராத ஒன்று.**

**சாவது நடுக்கத்தில் வளர்கிறது. பனி, கரைந்து போவதை விட முகத்தின் மேலேயே இருக்கட்டும்.**

**கொல்வது நடுக்கத்தின் இருப்பிடம்.**

**சரித்திரத்திலும் அண்ட பேரண்டத்திலும் உள்ள மனிதர்கள்.**

**காற்றின், கடலின் மின்னோட்டம். சுழற்சியில் ஒழுகும் நீரும் காற்றும் உலகமனைத்தையும் இணைக்கின்றன. நாம் இணைக்கப்பட்டவர்கள். நாம் இணைக்கப்பட்டவர்கள் என்று நான் பிரார்த்திக்கிறேன்.**

நாவல் மூன்று பகுதிகளை அடக்கியது. கதைசொல்லியான க்யூங்கா, முதல் பாகத்தில் ஜிஜூவில் உள்ள அவளது சிநேகிதியான இன்சியோனின் வீட்டுக்குப் பயணம் செல்கிறாள். பனி படர்ந்த வழியில் அவள் பாதுகாக்க வேண்டிய பறவையை எடுத்துக்கொண்டு செல்லும் அப்பயணம் ஒரு கிடைக்கோட்டைப் போல ஒன்று என்றால் இரண்டாம் பாகம் ஒரு செங்குத்தான பாதையில் இருவரும் மனித குலத்தின் மிக இருண்ட இரவுகளை நோக்கிச் செல்லுகிறார்கள் – 1948ஆம் ஆண்டின் குளிர் பருவத்தில் சாதாரண மக்கள் படுகொலை செய்யப்பட்டு கடலின் ஆழத்தில் புதைக்கப்பட்ட பொழுது அது. கடைசியான மூன்றாம் பாகத்தில் அவர்கள் இருவரும் கடலின் அடியில் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றுகிறார்கள்.

இந்த இரண்டு சிநேகிதிகள் தங்களுக்கிடையில் மெழுகுவர்த்தியைப் பாதுகாப்பாக எடுத்துச் செல்வதைக் கூறும் நாவல் அவர்களை சுற்றிப் படர்ந்தாலும் நாவலின் முதன்மைப் பாத்திரம், இருவருக்கும் நெருங்கிய தொடர்புள்ள இன்சியோனின் தாய் ஜியோங்சிம்தான். படுகொலையிலிருந்து தப்பித்த அவள் தன் உயிருக்குயிரானவரின் ஒரு சிறிய எலும்புத் துண்டை எப்படியோ கைப்பற்றி அதற்கான சீரிய இறுதிச் சடங்கைச் செய்து முடிக்கிறாள். துக்கம் கொண்டாடுவதை நிறுத்த மறுப்பவள் அவள். வலியைப் ஏற்றுக்கொண்டு புறக்கணிப்பை எதிர்த்து நிற்பவள். பிரியாவிடை தராமல் நிற்பவள். வலியும் அன்பும் ஒரே அளவில் அவளைத் தீண்டிய நீண்ட அவளது வாழ்வைப் பற்றிப் பேசுகையில் நான் கேட்ட கேள்விகள்

என்று நான் நினைப்பது இவற்றைத்தான்: 'நாம் எந்த அளவுக்கு நேசத்தைச் செலுத்த முடியும்? அதற்கான நமது எல்லை என்ன? இறுதி வரை நாம் மனிதர்களாக விளங்க எந்த அளவுக்கு அன்பை வாரி வழங்க வேண்டும்?'

கொரிய மொழியில் We Do Not Part வெளிவந்து மூன்று ஆண்டுகள் ஆகின்றன. நான் எனது அடுத்த நாவலை இன்னும் முடிக்கவில்லை. அதற்கும் அடுத்துப் பின் தொடர வேண்டிய நாவல் என்று நான் கற்பனை செய்து வைத்திருப்பது வெகு காலமாக என் நெஞ்சில் காத்துக் கிடக்கிறது. அந்த நாவல் என் வாழ்க்கையைப் பற்றி நான் எழுத விரும்பிப் படைத்த The White Book உடன் தொடர்புடையது. பிறந்த இரண்டே மணி நேரத்தில் இறந்துவிட்ட என் மூத்த சகோதரியின் நினைவில் எழுந்த ஒன்று அது. தவிர நமக்குள் என்றும் தகர்க்க முடியாதவற்றை உற்று நோக்க அது உதவியது . வழக்கம் போல எப்போது முடிக்க முடியும் என்று கணிக்க முடியாத போதும் எவ்வளவு நிதானமாகச் சென்றாலும் எழுதிக் கொண்டிருப்பேன். ஏற்கனவே எழுதிய புத்தகங்களைக் கடந்து எழுதுவதைத் தொடர்வேன். என் பார்வையில் பட இனிமேல் எதுவும் இல்லை என்னும் வரைக்கும். என் வாழ்க்கை அனுமதிக்கும் தொலைவு வரை.

நான் அவற்றை விட்டு விலகிய பின்பு என் புத்தகங்கள் அவற்றுக்கான ஜீவிதத்தில் இளைப்பாறும். அவைகளின் நடமாட்டம் அவற்றின் கைகளில். அதே மாதிரிதான் அந்த இரண்டு சகோதரிகளும். எப்போதும் விண்ட்ஷீல்டிலிருந்து பெருகி வரும் சூடான காற்று நிரம்பிய ஆம்புலன்சுக்குள் உட்கார்ந்திருக்கிறார்கள். விரைவில் பேசும் சக்தியைப் பெற்று விடக் கூடிய அந்த பெண் இருட்டில் அருகிலுள்ள மனிதனின் உள்ளங்கையில் தன் விரல்களால் எழுதியபடி இருக்கிறாள். பிறந்த இரண்டே மணி நேரத்தில் உலக வாழ்வை விட்டுச் சென்ற என் அக்கா, "வேண்டாம் செத்து விடாதே. ப்ளீஸ்" என்று கடைசி வரை அவளிடம் கதறிக் கொண்டிருந்த என் அம்மா. இந்த ஆத்மாக்கள் எவ்வளவு தூரம் போவார்கள்? என் கண்களுக்குள் பொத்தி வைத்து நான் பார்த்துக் கொண்டிருக்கும் இவர்கள்! எவ்வளவு தூரம் இந்த மெழுகுவர்த்திகள் பிரயாணம் செய்யும்? வெவ்வேறு சமயங்களிலும் இடங்களிலும் தாங்கவொண்ணாப் படுகொலைகள். நிகழ்ந்த ஒவ்வொரு சாவுக்கும் ஏற்றப்பட்டவை. அவை திரிக்குத் திரி, இதயத்துக்கு இதயம். அவை ஒரு தங்கக் கயிற்றின் மேல் பிரயாணிக்குமா?

சென்ற ஜனவரியில் என்னுடைய பழைய ஷூ பாக்சில் கிடந்த துண்டுப் பிரசுரத்தில் நான் 1979 ஏப்ரலில் எழுதிய வரிகள்:

***எங்கே அன்பு?***

***அன்பு என்றால் என்ன?***

2021இல் We Do Not Part பிரசுரமான போதுதான் இந்த இரண்டு பிரச்சினைகளுமே அடிப்படையில் ஒன்றுதான் என்று தோன்றியது:

***ஏன் இந்த உலகு இவ்வளவு வன்முறையுடன் வலியைத் தருவதாக உள்ளது?***

***இருந்தும் எப்படி அது இவ்வளவு அழகாக இருக்கிறது?***

இந்த இரண்டு வாக்கியங்களுக்கும் இடையே இருந்த கொந்தளிப்பும் அகப் போராட்டமும்தான் என் எழுத்தின் உந்துவிசையாக இருந்தன என்று வெகுகாலம் நம்பினேன். என் முதல் நாவலிலிருந்து சமீபத்திய படைப்பு வரை என் சிந்தனையில் நிலவிய பல கேள்விகள் மாற்றமடைந்தபடி இருந்தன. ஆனால், இந்த இரண்டு கேள்விகள் மட்டும் எந்த அசைவுமின்றி நிலைத்து நின்றிருந்தன. ஆனால், இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் எனக்குச் சந்தேகங்கள் ஏற்பட்டன. அன்பைப் பற்றியும் வலியைப் பற்றியும் நான் கேட்டுக்கொண்ட கேள்விகள் 2014இல் கொரிய மொழியில் Human Acts வெளி வந்த பிறகுதானா? ஆரம்ப நாவலிலிருந்து சமீபத்திய நாவல் வரை என் கேள்விகளின் அடியாழம் அன்பைப் பற்றித்தானே இருந்தன? என் வாழ்வின் மிகப் பழமையான அடிப்படையான குரல் அன்பைப் பற்றியதுதானே?

'என் இதயம் என்னும் தனிப்பட்ட இடத்தில்தான் அன்பு குடியிருக்கிறது' என்று 1979 ஏப்ரலில் அந்தச் சிறுமி எழுதினாள். (அது என் படபடக்கும் நெஞ்சினுள்ளே இருக்கிறது). அன்பு என்றால் என்ன என்னும் கேள்விக்கு அவளது பதில் இவ்வாறாக இருந்தது. (அது நமது உள்ளங்களை இணைக்கும் தங்கச் சரடு)

பார்த்ததை, கேட்டதை, முகர்ந்ததை, தன்மையுடைய குளிரையும் வலியைக் கொண்ட வெம்மையையும் அனுபவித்ததை, இதயம் படபடத்ததை, தூக்கத்தையும் பசியையும் உணர்ந்ததை, நடப்பதை, ஓடுவதை, காற்றையும் மழையையும் பனியையும் தொடுவதை, கைகளைச் சேர்த்துக்கொள்வதை என் உடல் அனுபவிக்க அவற்றை நான் எழுத்தில் கொண்டு வருகிறேன். இந்தப் பரவசம் நிரம்பிய உணர்வுகளை உடம்புக்குள் ஓடும் இரத்தத்தின் இயல்புடன் என் வாக்கியங்களில் கொண்டு வருகிறேன். ஏதோ நான் ஒரு மின்னோட்டத்தைப் பாய்ச்சுவது போல. இந்த மின்சாரம் என் வாசகர்கள் மீது செலுத்தப்படும் போது எனக்கு ஆச்சரியமும் நெகிழ்வும் ஏற்படுகின்றன. இத்தகைய தருணங்களில் மொழி என்னும் சாதனம் ஏற்படுத்தும் தொடர்பை அனுபவிக்கிறேன்; எப்படி என் கேள்விகள் வாசகர்களை ஒரு மின்னோட்டமென அடைகின்றன என்று புரிந்துகொள்கிறேன். இந்த சரடின் மூலம் என்னோடு இணைந்து கொண்டவர்களுக்கும் இனிமேல் வரப் போகிறவர்களுக்கும் என் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். ●

*mail to:* **weenvy@gmail.com**

# தமிழைத் தவிர வேறொன்றும் அறியேன் பராபரமே

புதுவை ஃப்ரென்ச் மொழியியல் நிறுவனம் வெளியிட்ட தமிழ் - சம்ஸ்கிருதம் பற்றிய ஒரு கருத்தரங்குத் தொகுதியில், தமது முன்னுரையில், எம்.கண்ணன், 'தமிழ் - சம்ஸ்கிருத உறவு பற்றிய ஒப்பீட்டு ஆய்வு செய்வதற்கான தகுதி பெற்றவர்கள் இந்தியாவில் அநேகமாக இல்லை என்பதால், அயல்நாட்டு ஆய்வாளர்களின் கட்டுரைகள்தாம் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன' என்று குறிப்பிட்டிருந்தார். இது மறுக்கவியலாத கூற்று என்றுதான் தோன்றுகிறது.

● **இந்திரா பார்த்தசாரதி**

மொழிகளை உணர்ச்சிகரமாகவோ ஓர் அரசியல் கோஷ அணுகுமுறையிலோ பார்க்கத் தொடங்கினால் சிந்தனை வயமான ஆய்வுக்கு அங்கு இடமிருக்காது. இதுதான் இப்பொழுது தமிழ்நாட்டுப் பல்கலைகழகக் கூடாரங்களில் நாம் காணும் அவல நிலை. இதனால் தமிழில் உள்ள நம்முடைய செவ்வியல் இலக்கியங்களை கூட விமர்சனக் கண்ணோட்டத்தோடு ஆராயும் பயிற்சியும் இல்லாமல் போய்விட்டது.

தமிழைத் தவிர வெறொன்றுமறியேன் பராபரமே என்றிருந்து விட்டால், தமிழின் முழு அருமையையும் கூட நம்மால் அறிந்துகொண்டு விட்டதாகச் சொல்ல முடியாது. மொழி, ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் கலாசார வெளிப்பாடே யன்றிச் சாதி, மதம் ஆகியவற்றுக்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அம்பேத்கர், ஒரு மிகச் சிறந்த சிந்தனையாளராக உருவாகி, ஹிந்து மதத்தின் ஆணி வேர்களை அசைத்துப் பார்க்க முடிந்ததென்றால், அவருடைய சம்ஸ்கிருத புலமையே இதற்குக் காரணம்.



தமிழிலக்கிய வரலாற்றில் காலனி ஆட்சி முன்பு வரை நம் தமிழ்ப் புலவர்கள் தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் தேர்ச்சி பெற்றவர்களாகதான் இருந்திருக்கிறார்கள். சம்ஸ்கிருதம் தெரியாமல் கம்பன் மூலத்தை இலக்கிய நயத்தில் விஞ்சிய ஒரு காவியத்தை இயற்றியிருக்க முடியுமா?

சேக்கிழார் இயற்றிய, 'பெரிய புராணத்'துக்கு சம்ஸ்கிருத மொழியிலிருந்த 'உபமன்யு பக்த விலாஸமே' மூல நூல் என்று பலர் சொல்லி வந்திருக்கிறார்கள். காரணம், சமயம் சம்பந்தப்பட்ட எந்த நூலாக இருந்தாலும் அது வட மொழியில்தான் முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்ற நம்பிக்கை.

'உபமன்யு பக்த விலாஸம்' என்ற நூல், ஸ்ரீநிவாச கவி என்பவரால், விஜயநகர அரசர் அச்சுத ராயன் (கிருஷ்ணதேவராயர் மகன்) காலத்தில பதினாறாம் நூற்றாண்டில் சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. அவர் அப்படியே சேக்கிழாரின் 'பெரிய புராணத்தை வடமொழியில் மொழியாக்கம் செய்திருக்கிறார், அவ்வளவுதான். காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள அச்சுதராயன் காலத்திய சம்ஸ்கிருத கல்வெட்டு (பதினாறாம் நூற்றாண்டு) இதைக் குறிப்பிடுகின்றது. மேலும், சேக்கிழார், குலோத்துங்க சோழனை (பன்னிரெண்டாம் நூற்றாண்டு) குறிப்பிடும் செய்யுளும் ஸ்ரீநிவாச கவியின் நூலில் அப்படியே மொழியாக்கம் பெற்றிருக்கிறது. 'உபமன்யு பக்த விலாஸம்' 'பெரிய புராணத்'துக்கு முந்தி என்றால் குலோத்துங்கனைப் பற்றிய குறிப்பு அதில் எப்படி இருந்திருக்க முடியும்? சம்ஸ்கிருத அறிவு மூலமாகத்தான் நம்மால் இதைத் தெளிவுபடுத்திக்கொள்ள முடிகின்றது.

அடுத்ததாகத், தமிழில் உள்ள பெரும்பான்மையான செவ்வியல் இலக்கிய நூல்களுக்கு செம்பதிப்பு இல்லை. சான்றாகத், தொல்காப்பியப் 'பொருளதிகாரத்'திலும் பதிற்றுப்பத்திலும் பிற்சேர்க்கைகள் (பதிற்றுப்பத்துப் பதிகங்ளில் பெரும்பகுதி, காலத்தால் பிந்தியவை) உள்ளன. 'பக்தி இலக்கியம்' என்றறியப்படும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் காணும் முத்திரைப் பாடல்கள்

(Signature songs) அனைத்தும் பிறகு சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். 'நாலாயிரம் என்ற கணக்கிற்காக அவையும் கவிஞர்களின் பாடல்களாக வைத்து எண்ணப்படுகின்றன. பக்தி இலக்கியங்கள், ஒவ்வொரு குறிப்பிட்ட சமயத்துக்குரிய வழிபாட்டு நூல்கள் என்று ஆகிவிட்ட படியால் ஆராய்ச்சி உலகம் செவ்வியல் வழியவையான இப்பக்தி நூல்களை (பன்னிரு திருமுறைகளையும் சேர்த்தே சொல்லுகிறேன்) சமூக-இலக்கிய விமர்சனப் பார்வையோடு அணுகுவதில்லை. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை பதிப்பித்த 'மர்ரே' பக்தி நூல் வெளியீடுகளிலும் குரு பரம்பரை பார்வையைத்தான் நம்மால் காண முடிகிறது.

சிலப்பதிகாரத்துக்கும் ஒரு செம்பதிப்புத் தேவை. அதில் காணும் பதிகமும் சமஸ்கிருத மயமாகிவிட்ட, 'மதுரைக் காண்டத்தி'ன் பிற்பகுதியும், 'வஞ்சிக் காண்டமும்' பிற்சேர்க்கைகளாகவோ அல்லது கலாசார மாற்றங்களுக்கு



உட்பட்டவைகளாகவோ தோன்றுகின்றன. இது குறித்து ஆழமான ஆய்வு தேவை. 'வஞ்சிக் காண்டத்தை' நிறுவதற்குத்தான், சிலப்பதிகாரப் பதிகத்தில் இக்காவியத்தின் செய்திகளாக மூன்று உண்மைகள் வற்புறுத்தப் படுகின்றன. சேரன், செங்குட்டுவன் பற்றி பரணர் பாடலாக அறியப்படும் பதிகத்தையும் இதன் பின்னணியில்தான் பார்க்க வேண்டும். சேரன் வடவர் மீது வெற்றி கொண்டான் என்ற அரசியல் செய்தியைக் காட்டிலும் சேர நாடு, கலாசார வழியாகப், பெரும் மாற்றத்துக்கு உள்ளானது என்பதுதான் முக்கியமான செய்தி.

எப்பாலும் கோடாமல் ஆய்வுக்கென்றே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட செவ்வியல் இலக்கியங்களில் தேர்ச்சி கொண்ட அறிஞர்கள் இப்பணிக்குத் தேவை.

*mail to:* **parthasarathyindira@gmail.com**

## தருமமிகு சென்னை - 14

# அசோக்நகர் வாசம்

சென்னையில் குடிநீர் தட்டுப்பாடு நிலவிய காலம். எம்ஜிஆர் முதல்வராக இருந்தார். அவரது இறுதிக்கட்டம் நெருங்கிக் கொண்டிருந்த வேளை.

● சந்தியா நடராஜன்

இரவுப் பணி முடித்துவிட்டு, காலையில் ரெங்கநாதன் தெரு சுகந்தி மேன்ஷனுக்குத் திரும்பி வந்தால் குளிப்பதற்கோ குடிப்பதற்கோ தண்ணீர் கிடைக்காது. 'வாட்டர் கேன்கள்' வலம் வராத காலம் அது. அதிகாலை அவஸ்தையைப் போக்க வழி காண முடியாத நிலை. சென்னையில் தாராளமாகத் தண்ணீர் கிடைக்கும் இடத்திற்கு நகர்ந்துவிடலாம் என்று நானும் என் நண்பன் பேராசிரியர் ராஜசேகரனும் முடிவு செய்தபோது, 'தண்ணீர்த் தட்டுப்பாடற்ற இடம் மடிப்பாக்கம்' என்று சொன்னார்கள்.

மடிப்பாக்கத்துத் தெருக்களில் மணமாகாத மாயவரத்துக்காரர்களாகிய நாங்கள் இருவரும் அலைந்தோம். தற்செயலாக என்னுடன் பணியாற்றிய 'விசு' என்கிற புன்னைவனம் விசுவநாதன் எதிர்ப்பட்டார். வந்த விஷயத்தைச் சொன்னேன். அவரது நண்பரின் வீடு வாடகைக்கு விடத் தயாராக இருப்பதாகக் கூறி அந்த வீட்டுக்காரரிடம் சிபாரிசு செய்து, எங்களுக்கு அந்த வீட்டை வாடகைக்குப் பெற்றுத் தந்தார். உள்ளகரம் மாவு மில்லுக்கு அருகில் இருந்த அந்த வீட்டைச் சுற்றி மூன்று பக்கமும் வயல். தினமும் ஆசை தீரக் குளியல் தொடங்கியது.



உள்ளகரத்திலிருந்து குதிரை வண்டியில் செயின்ட் தாமஸ் மவுண்ட் ரயில்வே நிலையத்திற்குச் செல்ல வேண்டும். ரயில்வே கேட்டைத் தாண்டினால் இடதுபுறம் ஒரு சைவ ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டுப் பணிக்குச் செல்ல வேண்டும். ஸ்கூட்டர் வாங்கிய பிறகு நங்கநல்லூர் வழியாக விமான நிலையம் செல்ல முடிந்தது. ஆனால், நள்ளிரவு வீடு திரும்பினால் திருப்பத்திற்கு இரண்டு நாய்கள் தாவி வரும். வேகத்தைக் கூட்டினால் நாய்களின் பாய்ச்சலும் குரைப்பும் நடுங்க வைக்கும்.

மடிப்பாக்கம் 'கூட்ரோடு' அருகில் ஒரு வட இந்தியர் உணவகம் மட்டுமே இருந்தது. இரவில் தாமதமாக வந்தால் பசியாற, பழங்கள் விற்கும் சாலையோரத் தள்ளுவண்டிகளையே நாட வேண்டும். தண்ணீர் பிரச்சினை போய் சாப்பாட்டுப் பிரச்சினை தலை தூக்கியது. பக்கத்து வீட்டுக்காரர் பரிவுடன் நடந்துகொண்டார். விசேஷ தினங்களில் திண்பண்டங்கள் கொண்டுவந்து கொடுப்பாள், அவரது சின்னஞ்சிறு பெண். பக்கத்தில்தான் விசுவின் வீடு. இருந்தாலும் இரவு உணவு ஒரு பிரச்சினையாக இருந்தது. நள்ளிரவில் பின்தொடரும் நங்கநல்லூர் நாய்களும், 'இந்தப் பாக்கம் உனக்குப் போதும்' என்று உரக்கக் கத்தின.

நானும் பேராசிரியர் ராஜசேகரனும் அடுத்த இடப்பெயர்வுக்குத் தயாரானோம். அப்போதுதான் ஏர் இந்தியா நிறுவனத்தில் பணியாளராக காயத்ரி என்ற பெண் சேர்ந்திருந்தார். அவர் அசோக் நகரில் உதயம் தியேட்டருக்கு அருகில் அவரது ஆண்டி கோமளாவுடன் வசித்து வந்தார். காயத்ரி எல்லோருடனும் இனிமையாகப் பேசுவார்; பழகுவார். ஒரு நாள் காயத்ரி வீட்டுக்குச் சென்றிருந்தபோது, அசோக் நகரில் ஒற்றைப் படுக்கை அறை கொண்ட பிளாட் வாடகைக்குக் கிடைக்குமா என்று கோமளாவிடம் கேட்டேன். அவர் இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். ஆன்மிகத்தில் பெரும் நாட்டம் கொண்டவர். என் மீது அளவுகடந்த அன்பு கொண்டிருந்தவர். நான், 'மடிப்பக்கத்திலிருந்து அசோக் நகருக்கு வந்துவிடலாமென நினைக்கிறேன்' என்று சொன்னவுடனே என்னை 53வது தெருவில் ஆஞ்சநேயர் ஆலயத்திற்கு அருகில் உள்ள சந்திரசேகர் வீட்டிற்கு அழைத்துச் சென்று அவருக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்.




உதயம் திரையரங்கம்

சந்திரசேகர் கே.கே. நகரில் ஹோட்டல் சரவணபவன் இயங்கிவந்த கட்டிடத்தில் இண்டேன் கேஸ் ஏஜென்சி ஒன்றை நடத்தி வந்தார். தொடக்கத்தில் ஐஓபி வங்கியில் பணியாற்றியவர். சரவணபவன் நிறுவனர் ராஜகோபால் அண்ணாச்சிக்கு ஆலோசகராகவும் கணக்காளராகவும் செயல்பட்டு வந்தார். வாடகைக்கு நான் வீடு தேடி வரும் விஷயத்தைச் சொன்னவுடன் மாந்தோப்பு காலனியில் உள்ள அவரது அண்ணன் பிளாட்டை வாடகைக்குத் தர முன்வந்தார். 1990 நவம்பர் 15இல் எனக்குத் திருமணம் ஆனது. அதுவரை மாந்தோப்பு காலனி வாசம் தொடர்ந்தது. அசோக் பில்லர் என் வாழ்விடத்தின் அடையாளமானது. உணவுக்கு ஹோட்டல் கங்காவும் ஹோட்டல் சரவண பவனும்; சினிமாவுக்கு உதயமும் காசியும்.

எண்பதுகளின் முற்பகுதி வரை மாம்பலம் லேக் வியூ சாலையில் 'நேஷனல்' என்று ஒரு டெண்ட் கொட்டாய் இருந்ததாக என்னுடன் பணியாற்றிய கங்கா சுவாமிநாதன் சொல்லியிருக்கிறார். அந்தத் திரையரங்கம் தொடக்கத்தில் ஒரு நாடக கம்பெனியாக இருந்திருக்கிறது. தரை டிக்கெட் 56 பைசா. திரையரங்கின் தளம் ஒரே சீராக இல்லாமல் படிப்படியாகத் திரையை நோக்கிக் கீழிறங்கிச் செல்லுமாம். தரை டிக்கெட் பகுதி தாழ்ந்த பள்ளமாக இருக்குமாம். மின்வெட்டு ஏற்பட்டால் சினிமா நிறுத்தப்பட்டு விடுமாம். நேஷனல் தியேட்டரில் சினிமா பார்த்திருக்கும் எனக்குத் தெரிந்த இன்னொருவர் எனது நண்பர் திரைப்பட இயக்குநர் சிதம்பரம். 'அவள் அப்படித்தான் II' என்ற படத்தை இயக்கியவர் இவரே.

சிதம்பரம் லேக் வியூ சாலையில் நேஷனல் தியேட்டர் அமைந்திருந்த இடத்தை எனக்குக் காட்டினார். இன்று அவ்விடம் ஒரு காலி மனை. ஸ்ரீ ராஜஸ்தானி ஜெயின் சமாஜ் எஜூகேஷனல் டிரஸ்ட் என்ற பெயர்ப் பலகை மாட்டப்பட்டிருக்கிறது. நேஷனல் தியேட்டரை நான் பார்த்ததில்லை. ஆனால், நான் பார்த்து, படம் பார்த்த உதயம் தியேட்டர் சமீபத்தில்தான் தனது கடைசிப் படத்தைக் காண்பித்துத் தனது கதையை முடித்துக்கொண்டது; உருக்குலைந்து தரைமட்டமாகி அதி நவீன அடுக்குமாடிக் கட்டிடம் எழப்போகிறது.

வெகு நாட்களாக என் மனத்தில் ஓர் எண்ணம் எழுவதுண்டு. வேலைக்குச் செல்லும் இணையர்கள் பெரும்பாலும் வார இறுதி நாட்களில் வீட்டில் சமைப்பதில்லை. தாமதமாக வீடு திரும்பும் நேரங்களிலும் வெளியில் சாப்பிட்டு வருகிறார்கள். வீட்டில் இருந்தாலும் ஸ்விகிகாரன் கதவைத் தட்டி, சாப்பாட்டுப் பொட்டலத்தைத் தந்துவிட்டுப் போகிறான். இந்த நிலை நீடித்து விரிவு பெறும்போது அடுக்ககங்களில் அடுக்களைகள் காணாமல் போகுமோவென நான் நினைப்பதுண்டு. தற்போது உதயம் தியேட்டர் வளாகத்தில் வரப்போகிற அதிநவீன அடுக்ககத்தில் சமையலறை இருக்காது என்கிறார்கள் விஷயம் தெரிந்தவர்கள். மைய சமையலறைக்குத் தொடர்பு கொண்டு வேண்டிய உணவைப் பெற்றுக் கொள்ளலாமாம். பெண்களுக்கு மட்டுமல்லாமல் பேச்சுலர்களுக்கும் பெரும் விடுதலை 'உதயம்' ஆகப் போகிறது. நெல்லை சைவப் பிள்ளைமார்களின் இடத்தில் அசைவமும் சமைக்கப்படுமா என்பது கேள்விக்குறி. ஏகப்பட்ட வாரிசுகளுக்கு உரிய பங்கீடு செய்து இப்போதுதான் இடம் பரிவர்த்தனை ஆகியிருக்கிறது.

மூன்று அடுக்குகளுக்கு மேல் உள்ள அடுக்ககங்களைக் காணாத அசோக் நகரில் வானுயர்ந்த கட்டிடங்கள் வர ஆரம்பித்துவிட்டன. 11ஆவது அவென்யூ தொடங்கும் இடத்தில் பாஷ்யம் பில்டர்ஸ் கட்டிவரும் 23 அல்லது 24 மாடி அடுக்ககங்கள் இரண்டு கட்டப்பட்டு முடிவுறும் நிலையில் இருக்கின்றன.

‘120 ஃப்ளாட்ஸ்’ என்று அழைக்கப்பட்ட அரசின் குடியிருப்பு வாரிய வீடுகள் தரை மட்டமாகி, அந்த இடத்தில்தான் இந்த இரட்டைக் கோபுரங்கள் எழுந்துள்ளன. எது எப்படியிருந்தாலும் மலையாளிகள் மினிமலிசத்தைத்தான் (Minimalism) கையாள்கிறார்கள். அசோக் நகரிலேயே முதல் மாடி, இரண்டாம் மாடி எதுவுமில்லாமல் மொட்டை மாடியுடன் கூடிய ஒரே வீடு கேரளா ஜீவல்லர்ஸ் உரிமையாளரின் வீடுதான்.

அசோக் நகரின் காணாமல் போன அடையாளங்களில் இன்னொன்று அசோக் பில்லர் அருகில் இருந்த விரிந்து பரந்திருந்த வணிக வளாகம். ரேஷன் கடை, மளிகை கடை தொடங்கி, ஸ்டேட் பாங்க் வரை எல்லாம் இருந்த இடம் தரைமட்டமாகி பனைமர உயரத்திற்கு அடுக்குமாடிக் கட்டிடம் உருவாகிவிட்டது. இனிக் காக்கும் தெய்வத்திற்கு வேலையில்லை. ஆக்கும் தெய்வத்திற்கும் அழிக்கும் தெய்வத்திற்கும் அசோக் நகர் ஆடுகளத்தில் சரியான போட்டி!

அசோக் நகர் உருவாகி 60 ஆண்டுகள் ஆகிவிட்டது. பிரதான சாலைகளில் அரசு அதிகாரிகளின் வீடுகள் அதிகம் இருந்தன. உள்துறை செயலாளராக இருந்த ஐஏஎஸ் அதிகாரி நாகராஜனின் வீடு அசோக் நகர் மகளிர் உயர்நிலைப் பள்ளியின் சுற்றுப் பாதையில் பள்ளிக்கு எதிர்ப்புறம் உள்ளது. ஐஏஎஸ் அதிகாரி முனீர் ஹோடா அந்தச் சுற்றுப்பாதை 11ஆவது நிழற்சாலையைச் சந்திக்கும் புள்ளியில் வசித்து வருகிறார். நூறாண்டு வாழ்ந்த எழுத்தாளர் கு. ராஜவேலுவும் தமிழக அரசின் அதிகாரியாக இருந்த சிவசுப்பிரமணியமும் இதே சுற்றுப்பாதையில் வாழ்ந்தவர்கள்.

சென்னையில் மூன்று ஆஞ்சநேயர் கோயில்கள் பிரபலமானவை. நங்கநல்லூர் ஆஞ்சநேயர், ஆழ்வார்பேட்டை ஆஞ்சநேயர், அசோக் நகர் ஆஞ்சநேயர் ஆகிய மூன்று ஆஞ்சநேயர்கள் மீது பக்தர்கள் வைத்திருக்கும் நம்பிக்கை அளப்பரியது. அசோக் நகர் ஆஞ்சநேயர் முதலில் தி.நகரில் இருந்ததாகவும் அங்கிருந்து அசோக் நகர் 53ஆவது தெருவில் ஒருவர் வீட்டில் வழிபடப்பட்டு வந்ததாகவும் பிறகு அங்கிருந்த பொது இடத்தில் கோயில் கட்டி பிரதிஷ்டை செய்யப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

தற்போது இருக்கும் கோயிலுக்குப் பின்புறத்தில் ஒரு வீடு இருந்தது. அந்த வீட்டில் ஒரு தெலுங்குக்காரர் ஆந்திராவில் இருந்து வந்து வாடகைக்குக் குடியேறியிருக்கிறார். அவருடன் ஒரு பெண்ணும் வாழ்ந்து வந்தார். அந்த வீட்டில்தான் ஒரு சின்ன ஆஞ்சநேயர் விக்ரகம் வழிபடப்பட்டு வந்தது. ஒரு சிறு தேரில் அந்த விக்ரகத்தை வைத்து அவர் ஊர்வலம் செய்வதும் உண்டு. பிறகுதான் இன்றிருக்கும் ஹனுமன் சிலை வடிக்கப்பட்டது. அந்தச் சிலையும் அந்தத் தெலுங்குக்காரர் வீட்டில் வைத்தே வழிபடப்பட்டு வந்தது. ஆரம்பத்தில் அந்த ஆஞ்சநேயரின் தீவிர பக்தையாக வந்துபோய்க் கொண்டிருந்தார் திரைப்பட நடிகை சில்க் ஸ்மிதா. அவர் வழிபாட்டுக்கெனப் பெரும் பொருள் உதவியும் செய்து வந்தார்.

சில்க் ஸ்மிதா 1980களில் இளைஞர்களின் கனவுக்கன்னியாக இருந்தார். அப்போது ஒரு திரைப்படத்தின் காட்சி படமாக்கப்பட்டிருந்தபோது இடைவேளையில் ஆப்பிள் ஒன்றைப் பாதி கடித்து வைத்துவிட்டு மீண்டும் நடிக்கச் சென்றுவிட்டார். அந்த ஆப்பிளை ஏலம் விட்டார்களாம். இந்த நிகழ்வுக்குப் பின் சில்க் ஸ்மிதா 53ஆவது தெரு ‘வீட்டு ஆஞ்சநேயரை’ வழிபட வருகிறார் என்றவுடன் இளைஞர்கள் ஒவ்வொருவரும் ஆப்பிளைக் கையில் வைத்தபடி நின்று கொண்டிருப்பார்களாம். வழிபாடு முடிந்து திரும்பும்போது ரசிகர்கள் தரும் ஆப்பிளைப் பெற்றுக்கொள்வாராம். கடித்துவிட்டுக் கொடுக்கும்படி வற்புறுத்தும் தீவிர ரசிகர்களையும் ஆனந்தத்தில் ஆழ்த்திவிட்டுச் செல்வாராம்.

தெலுங்குக்காரர் குடியிருந்த வீட்டின் உரிமையாளர், வாடகை சரிவர வந்துசேரவில்லை என்று அவர் மீது குற்றம் சாட்டி வந்தார். இருவருக்குமான பிணக்கு முற்றியபோது ஒரு நாள் தெலுங்குக்காரர் அந்த வீட்டைக் காலி செய்துவிட்டு, ஆஞ்சநேயரையும் விட்டுவிட்டு ஓடிவிட்டார்.

53வது தெருவில் இரண்டு பூங்காக்கள் உண்டு. ஒன்று சந்தியா பதிப்பகத்துக்கு எதிரே உள்ளது. இன்னொன்றில்தான் ஆஞ்சநேயர் கோயில் உள்ளது. இரண்டு பூங்காக்களும் தொடக்க காலத்தில் பூங்காக்களாக இருந்ததில்லை. செடி கொடிகள் வளர்ந்து காடாகக் காட்சியளிக்கும் வெற்று மனைகளாகவே இருந்தன. அப்படியிருந்த ஒரு பூங்காவில்தான் தெலுங்குக்காரர் விட்டுச் சென்ற ஆஞ்சநேயரை அந்தத் தெருவினர் கொண்டு போய் நிறுத்தி, கூரை வேய்ந்து வழிபடத் தொடங்கினர். அந்தத் தெருவில் ஐந்தாறு கிறித்துவக் குடும்பங்களும் பூங்காவுக்குப் பக்கத்தில் ‘பெட் லேண்ட் பாய்’ என்ற இசுலாமியரும் வாழ்ந்து வந்தனர். எல்லாச் சமயத்துப் பெருமக்களின் இசைவோடும் ஆதரவோடும் ஆஞ்சநேயர் கோயில் படிப்படியாக வளர்ந்தது.

ஒரு கட்டத்தில் கோயிலின் நிர்வாகம் இந்து முன்னணி சார்ந்த நபர்கள் வசம் வந்தது. ஆஞ்சநேயர் கோயில் ஓர் அறக்கட்டளை கோயிலானது. தற்போதும் கூட இந்து அறநிலையத்துறைக்கு இங்கு அதிகாரமில்லை. தமிழகத்திலேயே பாரத மாதாவுக்கு சந்நிதி உள்ள ஒரே ஆஞ்சநேயர் கோயில் அசோக் நகர் கோயில்தான். சமூகப் பணிகளும் இந்தக் கோயில் அறநிலையின் ஒரு பகுதி. ஏழ்மையிலுள்ள பள்ளி மாணவர்களுக்கு இங்கே சிறப்பு வகுப்புகள் நடைபெறுகின்றன. வீரத்துறவி என்றழைக்கப்படும் இந்து முன்னணி நிறுவனத் தலைவர் ராமகோபாலனுக்கு இந்த ஆலயத்தின் மீது தனிப்பட்ட கவனமும் ஈடுபாடும் உண்டு. ராமகோபாலன் தஞ்சை ஜில்லாக்காரர். மாயவரத்துக்குப் பக்கத்தில் உள்ள சீர்காழி சட்டநாதபுரத்தில் பிறந்தவர்.

ஆஞ்சநேயர் கோயில் தூய்மையிலும் அபிஷேக ஆராதனையிலும் அலங்காரத்திலும் சிறந்து விளங்குகிறது. ஏழை எளியவர்களுக்கு விசேஷ தினங்களில் அன்னதானமும் வழங்கப்படுகிறது. அன்னதானம் என்றால் மேஜை போட்டு சாப்பாடு. இந்த ஆஞ்சநேயர் சக்தி வாய்ந்தவர் என்பதால் கட்சி வேறுபாடு இல்லாமல் எல்லாக் கரைவேட்டி அரசியல்வாதிகளும் துளசியும் கையுமாக ஆஞ்சநேயர் ஆலயத்திற்குள் செல்வதைக் காணமுடிகிறது.

திரைப்பட நடிகை தேவயாணி அவ்வப்போது இங்கு வந்து செல்வதுண்டு. அவர் வீடு கோயிலிலிருந்து ஐந்தாறு வீடுகள் தள்ளி இருக்கிறது. அவர் வீட்டுக்கு நேர் எதிரே 1990களின் வெற்றிப்பட இயக்குநர் விக்ரமன் வாழ்ந்து வருகிறார். தனது முதல் படத்தின் நினைவாக வீட்டுக்கு 'முதல் வசந்தம்' என்று பெயர் வைத்திருக்கிறார். 'பூவே உனக்காக', 'சூரிய வம்சம்', 'உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேன்', 'வானத்தைப் போல', 'உன்னை நினைத்து' ஆகிய திரைப்படங்கள் விக்ரமனின் பத்தாண்டு வெற்றிப் படங்களில் மக்கள் மனத்தில் பதிந்தவை. விக்ரமன் இப்போதும் தன்னந்தனியாக 53வது தெருவில் நடைப்பயிற்சி செய்து வருகிறார்.

ஆஞ்சநேயருக்கு எதிரே மூன்று வீடுகள் தள்ளி அலுவலகம் வைத்திருக்கிறார் திரைப்பட இயக்குநர் பொன்ராம். பொன்ராமுடனான பழக்கம், என் மூத்த மகன் ஆருத் பதினைந்து வயது சிறுவனாக இருந்த போது அவன் மூலம் ஏற்பட்டது. இருவரும் 53வது தெரு (சந்தியா பதிப்பகத்துக்கு எதிரே) பூங்காவில் அமர்ந்து பேசிக்கொண்டிருப்பார்கள். அவரது பாதிப்போ என்னவோ அவனும் திரைத்துறைக்கே வந்துவிட்டான்.

பொன்ராஜ் வீட்டுக்குப் பக்கத்து வீடு நாடகங்களிலும் திரைப்படங்களிலும் நடித்துவந்த ரத்னா என்பவருக்குச் சொந்தமானது. அவர் அனைத்திந்திய வானொலி நிலையத்திலும் பணியாற்றி வந்திருக்கிறார். இந்த ரத்னாவுக்கும் எம்ஜிஆருடன் 'மாந்தோப்பில் நின்றிருந்தேன்' பாடலுக்கு ஆடிய ரத்னாவுக்கும் எந்தத் தொடர்புமில்லை. 'எங்க வீட்டுப் பிள்ளை' திரைப்படத்தில் இரண்டாவது கதாநாயகியாக நடித்த ரத்னாவை நான் சந்தித்திருக்கிறேன். 1985இல் ஏதோ ஒரு வழக்கு தொடர்பாக விசாரணைக்காக சுங்க இல்லத்துக்கு அவர் அழைக்கப்பட்டிருந்தார். அந்த விசாரணையின்போது நான் உடனிருந்தேன். அவர் எம்ஜிஆர் பட நாயகி.

அசோக் நகர் ரத்னாவின் மகள் கலைச்செல்வி யோகாவில் டாக்டர் பட்டம் பெற்றவர். அசோக் நகர் வாசிகளுக்கு, பூங்காக்களில் யோகா பயிற்சி அளித்து வந்தார். ஆன்மிக ஈடுபாடு கொண்டவர். நடைப்பயிற்சியின் போது அவரது வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாது. வார்டு எலெக்சனில் நின்றால் வெற்றி பெற வாய்ப்புள்ளவர். அந்த அளவுக்குச் சமூகப் பணிகளில் ஈடுபடுவதுடன் எல்லோருடனும் சகஜமாகப் பேசிப் பழகக் கூடியவர். கலைச்செல்வியின் கணவர் டாக்டர் ஷண்முகம் மிகச் சிறந்த சித்த மருத்துவர். அவர் எழுதிய 'மூலிகை அகராதி', 'அர்த்தமுள்ள அந்தநாள் சமையல்' ஆகிய நூல்களை சந்தியா பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இவரது ஆய்வுகளை சுவிட்சர்லாந்திலுள்ள சில ஆய்வகங்களுக்கு அனுப்புவார். அவருக்கு ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளிலும் பயிற்சி உண்டு. 'கிட்டிகா அங்காடி' என்ற சிறுகதை அவருக்கு மிகவும் பிடித்த தெலுங்கு கதை. அதை மொழிபெயர்த்துத் தருகிறேன் என்று சொல்லிக்கொண்டிருப்பார். அவர் பேச்சு அலுக்காது. ஆரணி பக்கத்திலிருக்கும் வாழைப்பந்தல் என்ற ஊரில் எழுந்தருளியிருக்கும் 'பச்சையம்மன்' அவர்களது குலதெய்வம். ஒரு முறை நான் அவர்களோடு சென்று அவர்கள் குலதெய்வ வழிபாட்டில் கலந்துகொண்டிருக்கிறேன்.


சில்க் ஸ்மிதா



க. திருநாவுக்கரசு

டாக்டர் ஷண்முகத்தின் மூத்த சகோதரர், திராவிட இயக்கத்தின் முதுபெரும் செயற்பாட்டாளரான க. திருநாவுக்கரசு. 'திராவிட இயக்கத் தூண்கள்', 'திராவிட இயக்க வேர்கள்', 'திராவிட இயக்கமும் திராவிட நாடும்', 'சுயமரியாதை இயக்க வரலாறு', 'திமுக வரலாறு', 'நீதிக்கட்சி வரலாறு' ஆகிய திராவிட இயக்க வரலாற்று நூல்களை எழுதியவர். எழுத்தாளர் ஜெயமோகனைக் கடுமையாக விமர்சித்தும் எழுதியிருக்கிறார். காந்தியைப் பற்றி ஜெயமோகன் எழுதியுள்ள 'இன்றைய காந்தி' என்ற நூலுக்கு விமர்சனமாகவும் எதிர்வினையாகவும் க.திருநாவுக்கரசு எழுதிய நூலே 'இன்றைய காந்தி யார்' என்ற புத்தகம். 'கலைஞரின் பண்பாட்டுப் புரட்சி', 'பாபர் மசூதி இடிக்கப்பட்டது சரியா', 'முரசொலி மாறன்', 'தொழிலாளர் முன்னேற்ற சங்கப் பேரவையின் வரலாறு', 'திராவிட இயக்கமும் திரைப்படவுலகமும்' ஆகியவை இவரின் ஏனைய படைப்புகள். 'நக்கீரன்', 'நம் நாடு' ஆகிய இதழ்களை நடத்திய இவருக்குத் தமிழக அரசு திருவிக விருது அளித்துக் கௌரவித்திருக்கிறது.

இவரது மகன் சிற்றரசு தந்தையின் வழியில் திராவிட இயக்க நூல்களைத் தனது நக்கீரன் பதிப்பகம் மூலம் வெளியீட்டு வருகிறார். சிற்றரசின் திருமணத்திற்கு அழைப்பதற்காக வயது முதிர்ந்த நிலையிலும் க. திருநாவுக்கரசு எங்கள் இல்லத்திற்கு நேரில் வந்திருந்தார். எந்நேரமும் இன்முகம் அவர் முகம். சிற்றரசின் திருமண விழாவில் முதல்வர் மு.க. ஸ்டாலின், திருநாவுக்கரசைத் 'திராவிட இயக்கத்தின் கணினி' என்று குறிப்பிட்டார். க. திருநாவுக்கரசு குடும்பத்தினர் கலைச்செல்வி வீட்டுக்குப் பக்கத்தில் இரண்டு வீடுகள் தள்ளி குடியிருந்தனர். டாக்டர் ஷண்முகம் கலைச்செல்வி மீது விருப்பப்பட்டார். க.திருநாவுக்கரசு குடும்பம் கலைச்செல்வியை பேசி முடித்து திருமணம் செய்வித்தது.

டாக்டர் ஷண்முகம் வீட்டில் மட்டுமே அப்போது தொலைபேசி இருந்தது. எதிர் வீட்டில் நடிகை ஷோபா இருந்தார்.

53வது தெரு என்பது மகளிர் உயர்நிலைப் பள்ளியின் இருபுறமும் அரைவட்ட வடிவில் செல்லும் நீண்ட சாலை. வலதுபுறம் சென்றால் சந்தியா பதிப்பகத்திற்குச் செல்லலாம். இடதுபுறம் சென்றால் ஆஞ்சநேயர் கோயிலுக்குப் போகலாம். ஆஞ்சநேயர் கோயிலை ஒட்டிய 53வது சாலையில் 28 வீடுகள் இருக்கும். 19ஆவது இலக்க வீட்டில் ஷோபாவின் பெற்றோர் இருந்தனர். அவர் வீட்டில் தொலைபேசி வசதி இல்லை. தனிமைச் சிறையில் இருப்பதுபோல்தான் இருந்திருக்கிறது அவரது வாழ்க்கை. ஷோபாவிடம் பேச வேண்டுமானால் டாக்டர் ஷண்முகம் வீட்டுக்கு போன் வரும். டாக்டரின் மனைவி கலைச்செல்வியும் ஷோபாவும் நெருங்கிப் பழகி வந்திருக்கிறார்கள். கே.பி. மேனனின் மகளுக்கு முதலில் மகாலட்சுமி என்று பெயர். சினிமாவுக்கு வந்தபிறகு ஷோபா ஆனாள். ஷோபா, மகாலட்சுமி போன்ற முக அழகோடுதான் வெள்ளித்திரையில் தோன்றினார். அவர் சிரிப்புக்கு ஆயிரம் பொன் தரலாம் என்பார்கள். ஆனால், அவர் வாழ்க்கையிலோ சிரிப்புக்கே இடமில்லாமல் போய்விட்டது. 'நிழல் நிஜமாகிறது' படம் தொடங்கி, 'ஒரு வீடு ஒரு உலகம்', 'ஏணிப்படிகள்', 'அகல் விளக்கு', 'முள்ளும் மலரும்', 'மூடுபனி', 'பசி' என மூன்று ஆண்டுகள் தமிழ்த் திரையுலகில் மின்னிக் கொண்டிருந்த ஷோபாவுக்கு சிறந்த நடிகைக்கான தேசிய விருது 'பசி' திரைப்படத்துக்காகக் கிடைத்தது. அதற்காக 1980ஆம் ஆண்டு மே முதல் நாள் அந்தப் படத்தின் இயக்குநர் துரை, ஷோபாவைப் பாராட்ட ஒரு விழா ஏற்பாடு செய்தார். அப்போது அவர் வயது



நடிகை ஷோபா

பதினேழு. அன்றுதான் ஷோபா, அசோக் நகர் காவலர் பயிற்சிப் பள்ளிக்கு அருகில் வசித்த வாடகை வீட்டில் தற்கொலை செய்துகொண்டார்.

53வது தெருவிலிருந்து இடம் மாறி ஷோபா தனியாக வசித்து வந்தது டாக்டர் கண்ணம்மாவின் வீட்டில். செய்தியறிந்து அந்த வீட்டுக்கு ஓடிச் சென்று பார்த்தவர் கலைச்செல்விதான். ஷோபா தனக்குப் பிடித்த மஞ்சள் நிற ஆடையில் சடலமாகக் கிடந்தாள் என்று சொன்னார் கலைச்செல்வி. ஷோபா, தனக்காக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் பங்கேற்கக்கூட, 'அவரால்' அனுமதிக்கப்படவில்லை என்கிறார்கள். உரிமைப் பொருள்கள் உரிமையாளரின் உடைமை வேட்கையாலேயே உடைந்து போய்விடுகின்றன. 45 ஆண்டுகளாகியும் ஷோபாவின் ஆவி இந்த 53ஆவது தெருவில் உலவிக்கொண்டிருக்கும். அந்த ஆவி புகுந்த தேவதையைக் காண்பதுதான் சிரமம்.

53ஆவது தெருவில் ஷோபாவின் ஆவி மட்டுமல்ல, இன்னும் பல ஆவிகள் அலையலாம். அந்தத் தெருவில் உள்ள 28 வீடுகளில் ஆறு வீடுகள் ஆவி வீடுகள். கோயிலுக்கு எதிரே உள்ள வீட்டில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஆறு பேர் அசோக் நகரின் தொடக்கக் காலத்தில் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள். பலகாலம் பூட்டிக்கிடந்த வீட்டிற்குத் தென்காசிக்காரரான செல்லதுரை என்ற லேபர் ஆபிசர் குடியேறினார்.

இவர்தான் பார்த்திபனின் 'புதிய பாதை' படம் வெளிவரப் பாதை போட்டவர் என்கிறார் செல்லதுரையின் மகன் ராமின் நண்பரான வசந்த்.

வசந்த், டாக்டர் ஷண்முகத்தின் இளைய மகன். 'புதிய பாதை'யின் தயாரிப்பாளர் ஸ்தானத்தில் செல்லதுரையை வைத்துப் பார்க்கிறார் வசந்த். இதே தெருவில் இன்னொரு வீட்டில் படித்த பெண் ஒருத்தி இருந்தாள். உயர்கல்வி படித்தவள். ஆங்கிலம் பேசுவாள். ஆனால், கொஞ்சம் மனம் பேதலித்தவள். ஓர் இரவுப் பொழுதில் அவள் கொலையுண்டு போனாள். அவள் அழகும் அறிவும் இடம் தெரியாமல் போனது. அவளது மரணத்தில் தெருவே நிலைகுலைந்து போனது. யார் அந்தக் கொலைகாரர்கள்? யாருக்கும் தெரியவில்லை. கற்பழித்துக் கொலை என்ற செய்தி மட்டும் பரவியது. இன்னும் மூன்று வீடுகளின் தற்கொலைக் கதைகள் ஒரு செய்தி என்ற அளவிலேயே உள்ளன.

ஆரம்ப கால அசோக் நகர் வீடுகள் பெரும்பாலும் சுற்றுச்சுவர் இல்லாமல் மாமரங்களும் கொய்யா மரங்களும் நெருக்கமாக இருந்துள்ளன. ஒரு வீட்டு மரத்தில் தாவித்தாவிக் கொய்யாப் பழங்களைக் கொய்துகொண்டு, 11ஆவது நிழற்சாலையை அடைந்துவிடலாம் என்கிறார் வசந்த். ஆஞ்சநேயர் சிலை பூங்காவில் நிறுவப்பட்ட போதும் இந்த நிலைதானாம். பாதி, சிறுவர்கள் விளையாடும் இடமாகவும், பாதி கூரைவேய்ந்த கோயிலாகவும் இருந்திருக்கிறது.

ஆஞ்சநேயரை நினைக்கும்போது ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. என்னுடன் விமான நிலையத்தில் மக்கள் தொடர்பு அதிகாரியாகப் பணியாற்றியவர் ராஜேஷ் பிரசாத். அவருக்குச் சொந்த ஊர் ஹைதராபாத். கோடம்பக்கத்தில் குடியிருந்தார். ஒரு நாள் மாலை வெளியே போன அவருடைய மகன் வீடு திரும்பவில்லை. இரவு நெடுநேரம் காத்திருந்தபின் காவல் நிலையத்தில் காணாமல் போன பையனைக் கண்டுபிடித்துத் தருமாறு மனு அளித்தார். டி.ஜி.பி அலுவலகத்திலும் அழுத்தம் தரப்பட்டது. இரவு முழுவதும் தேடாத இடமில்லை. காலையில்தான் இந்தச் செய்தி எனக்குக் கிடைத்தது. நானும் எனது நண்பர்களும் பீச், சென்ட்ரல் ஸ்டேஷன், கோயம்பேடு என மக்கள் கூடும் இடங்களில் எல்லாம் 8ஆம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த அந்தச் சிறுவனைத் தேடினோம். மாலை சுமார் ஐந்து மணி இருக்கும். சந்தியா பதிப்பகத்துக்கு வந்து கொஞ்ச நேரம் ஓய்வெடுத்துக் கொண்டு, தேடலைத் தொடர வெளியே வந்தோம். இரண்டு நிமிடங்கள்கூட இருக்காது. கோயில் கண்ணில் பட்டவுடன் ஆஞ்சநேயரிடம் பிரார்த்தனை செய்துவிட்டுப் போகலாம் என்று கோயிலை நோக்கிச் சென்றோம். ஓரிரு நிமிடங்கள் கடந்திருக்கும். ராஜேஷ் பிரசாத்திடமிருந்து போன் வந்தது. 'சார், பையன் வீட்டுக்கு வந்துவிட்டான்'. நானும் விஜயகுமாரும் ஆஞ்சநேயர் முன்பு நின்று வழிபட்டு, கோயில்


கடத்தல் தங்கம்

பிரசாதத்துடன் ராஜேஷ் பிரசாத் வீட்டுக்குச் சென்று பையனைக் கண்டு மகிழ்ந்தோம். இன்று ராஜேஷ் பிரசாத், ஹைதராபாத்தில் ஒரு மாபெரும் கட்டுமான நிறுவனத்தின் இயக்குநர். காலத்தின் கணக்கும் வழக்கும் ஒரு திருப்புமுனையில் அல்லது ஒரு சந்திப்பில் முடிவாகிவிடுகிறது.

1985 - -1992 காலகட்டத்தில் சென்னை விமான நிலையம் மூலம் ஆசன வாயில் மறைத்துத் தங்கக் கட்டிகளைக் கடத்தி வருவதும் வெளிநாட்டு கரன்சிகளை சென்னையிலிருந்து சிங்கப்பூர், இலங்கை போன்ற வெளிநாடுகளுக்குக் கடத்துவதும் தொடர்ந்து நடைபெற்று வந்தது. அதே நபர்கள் தங்கத் துண்டுகளையும் சிறு மாத்திரைகள் போல் செல்போன் காகிதத்தில் சுற்றப்பட்ட அமெரிக்க டாலர்களையும் விழுங்கிக் கடத்துவது உண்டு. இத்தகைய செயல்களில் ஈடுபடுபவர்களில் குறிப்பாக நம்புதலை, தொண்டி, எஸ்.பி பட்டினம், மன்னார்குடி, திருச்சி ஆகிய இடங்களைச் சேர்ந்தவர்கள் அதிகம். குற்றப் பதிவேடுகளில் உள்ள விவரங்களின் அடிப்படையில் பார்த்தால் இதுமாதிரியான கடத்தலில் தொண்டியும் நம்புதலையும் முன்னணி வகித்தன. தொண்டி, நம்புதலை நபர்கள் சந்தேகிக்கப்படுகிறார்கள் என்று தெரிந்துகொண்டு இவர்கள் போலி பாஸ்போர்ட்டுகளைப் பயன்படுத்தத் தொடங்கினார்கள். இவர்கள் வடபழனி, சைதாப்பேட்டை, ஆலந்தூர், ராயபுரம் போன்ற பகுதிகளில் வேலை செய்துகொண்டிருப்பார்கள். தள்ளுவண்டியில் வேகவைத்த கடலை விற்பார்கள்; மளிகைக் கடைகளிலும் டீக்கடைகளிலும் வேலை பார்ப்பார்கள். கூலிக்குக் கடத்தல் வேலையில் ஈடுபடுவார்கள். இவர்களைக் கடத்தல்காரர்கள் என்று சொல்ல முடியாது. அவர்களின் எடுபிடிகள். கல்வியறிவின்மையும் வறுமையும் அவர்களை இந்த

வேலைக்குக் கொண்டுவந்து விடுகிறது. இந்த வேலையின் கொடூரத்தை உணர்ந்தவர்கள் இவர்களுக்காகப் பரிதாபப்படுவார்கள்.

புதிதாகத் தொழிலுக்கு வருபவர்களிடம் சின்ன சைஸ் பாட்டரியை கருத்தடைக்குப் பயன்படுத்தும் காண்டம் ஒன்றில் இட்டு, உறைமீது எண்ணெய் தடவி ஆசன வாய்க்குள் செலுத்தி மறைத்து வைக்கச் சொல்வார்கள். பிறகு ஒரு மணி நேரம் கழித்து அந்த பாட்டரியை முக்கி முனகி ஆசன வாயிலிலிருந்து வெளியேற்ற வேண்டும். இந்தச் சோதனைக்குப் பழகி, தேர்ச்சி பெற்ற பின்பு, இதே போல் மீடியம் சைஸ் பாட்டரி தருவார்கள். இது இரண்டாவது டெஸ்ட். பிறகு பாட்டரி லைட்டுக்குப் போடும் பெரிய சைஸ் பாட்டரியை ஆசன வாய்க்குள் செலுத்தி ஒரு மணி நேரம் கழித்து வெளியே எடுக்க வேண்டும். இந்த மூன்றாவது டெஸ்டில் தேர்ச்சி பெற்றவன் கடத்தல் பயணத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படுவான். இதற்கு அழகான தொழில்முறை ரகசியக் கலைச் சொல் ஒன்று உண்டு. 'டிக்கி அடிக்கிறவன்' என்றால் ஆசனவாயிலில் தங்கத்தையோ வைரக் கற்களையோ டாலர்களையோ மறைத்துக் கடத்திச் செல்கிறவன் என்று பொருள். ஒரு கட்டத்தில் இவர்களில் சிலர் அசோக் நகரிலிருந்து ஸ்ரீநிவாசா தியேட்டருக்குச் செல்லும் கோவிந்தன் ரோட்டிலிருந்து இடதுபுறம் செல்லும் கோடம்பாக்கம் சாலையிலுள்ள டீக்கடைகளில் சந்திப்பதுண்டு. மாந்தோப்பு காலனியிலிருந்து 5 நிமிடத்தில் இங்கு நடந்தே சென்றுவிட முடியும். காலை நேரங்களில் கோடம்பக்கத்தில் உள்ள டீக்கடைகளுக்கு மாறி மாறி விஜயம் செய்து அங்கு வரும் இராமநாதபுரத்து ஆட்களின் முகங்களை மனத்தில் பதிய வைத்துகொண்டிருந்த நாட்களின் என்ணிக்கைக்கு அளவே இல்லை. நம்புதலை, தொண்டி பகுதிகளில் ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு பெயர் இருக்கும். நண்டு வீடு, வண்டு வீடு, சின்ன பூனை வீடு, பெரிய பூனை வீடு, வாசாக்கு வீடு என்றெல்லாம் விநோதமான பெயர்கள் உண்டு. இவை எல்லாவற்றையும் தெரிந்து வைத்திருக்க வேண்டும். உண்மையான பெயரில் இவர்கள் பாஸ்போர்ட் வைத்திருப்பதில்லை. இப்படிக் கடத்தலில் ஈடுபடும் ஒருவன் சுங்கச் சோதனையின் போது பிடிபட்டால் அவனது பாஸ்போர்ட் முகவரியில் உள்ள வீடு உடனே சோதனைக்கு உட்படுத்தப்படும்.

ஒருமுறை அசோக் பில்லரிலிருந்து வடபழனி செல்லும் 100 அடி சாலையில் ஒரு வீட்டைச் சோதனையிடச் சென்றோம். செந்தில் டவர்ஸ் தாண்டியவுடன் வலதுபுறம் V வடிவத்தில் பிரியும் சாலை முனையில் இருந்தது அந்த வீடு. வாழைக்காய்த் தார்கள் வரிசையாகக் குவிந்திருந்த இடம். அந்த வீட்டில் குடியிருந்த கிறித்துவரை விசாரித்தபோது அவருக்கும் பிடிபட்டுக் கைதான நபருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அதே முகவரி பல போலி பாஸ்போர்ட்டுகளில் இடம்பெற்றிருந்தது. அந்த முகவரி உடைய பாஸ்போர்ட்டுகளில் பயணிப்பவர்கள் பிடிபடும்போது மீண்டும் மீண்டும் அந்த முகவரிக்குச் சென்று சம்பிரதாயச் சோதனையை மேற்கொள்ள வேண்டி வரும். காலப் போக்கில் அந்தக் கிறித்துவர் எனக்கு நண்பராகிவிட்டார். STRANGERS ARE MY LOVERS.

தொடரும்

*mail to:*
**sandhyapathippagam@gmail.com**


Form IV

Statement about ownership and other particulars about newspaper 'AMRUDHA' as required to be published under section 19-D subsection (b) of the Press andRegistration of Books Act read with Rule 8 of the Registration of Newspapers (Central Rules) 1956

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | CHENNAI |
| 2 | Periodicity of the publication | Monthly |
| 3 | Printer's name | A.Chandran, Ayyanar Offset. 10 Subba RaoNagar, Choolaimedu, Chennai-94 |
| 4 | Publisher's name, nationality and address | G.Thilakavathi<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 5 | Editor's name, nationality and address | Dr Prabhu Thilaak<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders, holding more than one percent of the total capital | G.Thilakavathi; Dr Prabhu Thilaak; Ms Shruthi Thilaak- Directors- White Lotus Books Pvt. Ltd<br>Indian<br>5, Fifth street, Somasunderam Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |

I G.Thilakavathi hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date : 11.02.2025 Signature of publisher

# உடல்

உடல் தன்னிச்சையாக அதிர்ந்து குலுங்கியது. சரேலென்று தாவிக் கட்டிலின் மேல் போட்டிருந்த துண்டால் அவசர அவசரமாக உடலை மறைத்துக்கொண்டாள் சந்தியா. “ஸாரி... ஸாரி... ஸாரி... ” என்றபடி மதன் வேகமாக வெளியேறிக் கதவைச் சாத்தினான். “யூ... ப்ளடி...” என்று கத்தியபடி சந்தியா கதவைத் தாழ்ப்பாள் போட்டாள். உடல் இன்னமும் நடுங்கிக்கொண்டிருந்தது. தன்னையறியாமல் துண்டை உடலைச் சுற்றிப் போர்த்தி இறுக்கமாகக் கட்டிக்கொண்டாள்.

● **அரவிந்தன்**

ஓவியம்: **ரம்யா சதாசிவம்**

**ச**ந்தியா மின்விசிறியின் கீழே நின்றபடி இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக்கொண்டாள். முடி ஈரமாக இருந்தது. தலையைத் துவட்டுவதற்கான துண்டு நாற்காலியின் முதுகின் மேல் இருந்தது. அதை எடுத்துத் துடைக்கத் தோன்றாமல் ஈரத்தலையைக் கைகளால் கெட்டியாகப் பிடித்தபடி நின்றுகொண்டிருந்தாள். உடல் இலேசான நடுக்கத்துடன் அதிர்ந்துகொண்டிருந்தது. உடலிலும் ஈரம் காயாததால் இலேசாகக் குளிரெடுத்தது. சந்தியா அப்படியே நின்றுகொண்டிருந்தாள். எந்த எண்ணமும் தோன்றாமல் மனம் உறைந்திருந்தது. சற்றுமுன் நிகழ்ந்த விபத்தின் கணநேரக் காட்சி கண்களிலும் மனதிலும் நிரம்பியிருந்தது. அது விலகாமல் வேறொரு எண்ணமோ காட்சியோ தோன்ற முடியாது என்பதுபோல இருந்தது. கண்களுக்குள் தெரிந்த அந்தக் காட்சியை விலக்குவதற்காகக் கண்களைத் திறந்தாள். எதிரில் இருக்கும் சுவரில் அந்தக் காட்சி தெளிவாகத் தெரிந்தது. பயந்துபோய்க் கண்களை மூடினாள். கண்களுக்குள் அந்தக் காட்சி அப்படியே இருந்தது. உடலின் படபடப்பு அடங்கவில்லை. மூச்சு சீராகவில்லை. தலையிலிருந்து கைகளை எடுக்கத் தோன்றவில்லை. இதுபோன்ற சமயங்களில் ஆழமாக மூச்சை இழுத்து விட வேண்டும் என்று எங்கோ படித்தது நினைவுக்கு வந்தது. மூச்சை ஆழமாக இழுக்க முயன்றாள். அதன் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. திரும்பத் திரும்ப முயன்றாள். அந்த முயற்சியில் மூச்சின் மீது கவனம் திரும்ப, மூச்சு சீறி அடங்கும் வேகம் குறையத் தொடங்கியது. உடலின் படபடப்பும் குறையத் தொடங்கியது. கால்களில் நடுக்கம் நின்றுவிட்டதை உணர்ந்தாள். உடல் வெகுவாகக் குளிரெடுக்கத் தொடங்கியது. தலையிலிருந்து கைகளை எடுத்து மின்விசிறியை அணைத்தாள். கட்டிலின் மீது அமர்ந்தபடி தலையைத் துவட்டத் தொடங்கினாள். வழக்கமான வேகமும் அழுத்தமும் இல்லாததை உணர்ந்த அவள் அதைப் பற்றிக் கவலைப்படாமல் மெல்லத் தலையைத் துவட்டினாள்.



எப்படி இதுபோல நடந்தது என்று அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஞாயிற்றுக்கிழமையின் தவிர்க்க முடியாத வழக்கப்படி காலை ஒன்பது மணிக்கு எழுந்தாள். அம்மாவும் அப்பாவும் எங்கோ வெளியே போய்விட்டார்கள். மதன் யாருடனோ கைப்பேசியில் பேசிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காலை ஆறுமணிக்குக் கிளம்பி சைக்கிளில் எலியட்ஸ் கடற்கரைவரை போய்விட்டு வரும் பழக்கம் அவனுக்கு உண்டு. இன்றும் போய்விட்டு வந்திருப்பான். அவன் எப்போது பேசி முடிப்பான் என்று கவனித்தபடி படுத்திருந்தாள். அவனைக் காப்பி போடச் சொல்லிவிட்டு எழுந்து பல் தேய்க்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டாள். அவன் முடிப்பதாகத் தெரியவில்லை. கைப்பேசியை எடுத்து நோண்ட ஆரம்பித்தாள். வாட்ஸப்பில் வந்திருந்த இணைப்பொன்றைத் தொட, அதிலிருந்து பாட்டு ஒலித்தது. அந்த ஓசை கேட்டு மதன் எட்டிப் பார்த்தான். காப்பி என்று அவனிடம் சைகையில் சொன்னாள். ‘பல் தேய்க்கலயா’ என்று சைகையில் கேட்டான். ‘‘நா ப்ரஷ் பண்ணப்போறேன், நீ காஃபி போடு’’ என்று சொல்லிவிட்டு எழுந்தாள். கைப்பேசியில்



பேசியபடியே கட்டை விரலை உயர்த்திக் காட்டிவிட்டுச் சமையலறைக்குள் சென்றான் மதன்.

சூடான காப்பி தந்த உற்சாகத்துடன் சந்தியா அன்றைய நாளைப் பற்றி யோசித்துக்கொண்டு மெதுவாகக் காப்பியைப் பருகினாள். மாலையில் ரீத்துவும் ஷாலுவும் வருவார்கள். அவர்களோடு ஊர் சுற்றுவதுதான் இன்று இருக்கும் ஒரே வேலை. அம்மாவும் அப்பாவும் எப்போது வருவார்கள் என்று தெரியவில்லை. சமைக்க வேண்டியிருக்காது. அப்படி இருந்தால் அம்மா வாட்ஸப்பில் செய்தி அனுப்பியிருப்பாள். அவர்கள் வராவிட்டாலும் மதன் வீட்டில் இருந்தால் அவனே சமைத்துவிடுவான். அப்படியே இல்லாவிட்டாலும் உணவை வரவழைத்துக்கொள்ளலாம். சமைக்க வேண்டாம். தலைக்கு எண்ணெய் வைத்துக்கொண்டு நன்றாக ஊறவிடலாம். கை, கால்களில் நகங்களை வெட்டலாம். நெட்ஃப்ளிக்ஸில் எதையாவது பார்க்கலாம். போன வாரமே சவரம் செய்துகொள்ள வேண்டும் என்று நினைத்துத் தள்ளிப்போட்டது நினைவுக்கு வந்தது. பொறுமையாக எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு நிதானமாகக் குளிக்கலாம். தினமும் அரக்கப் பரக்கக் குளிப்பதுபோல இன்று குளிக்க வேண்டாம்.

திட்டமிட்டபடியே எல்லாம் நடந்தன. பதினோரு மணிக்கு மேல் குளிக்கச் சென்றாள். அக்குள்களிலும் காலிடுக்கிலும் கால்களிலும் இருக்கும் முடிகளைத் துப்புரவாக அகற்றிவிட்டுப் பொறுமையாகக் குளித்தாள். இதமான சூட்டில் குளிப்பது சுகமாக இருந்தது. தலையை நன்றாகத் தேய்த்துக் குளித்ததில் கைகள் வலித்தன. குளியலறையை விட்டு அறைக்குள் சென்று மின்விசிறியின் கீழ் நாற்காலியில் உட்கார்ந்தபடி தலையைப் பொறுமையாகத் துவட்டிக்கொள்ளலாம் என்று நினைத்தாள். நெடுநேரம் குளித்துக்கொண்டிருந்த அலுப்பு சற்றே தலைகாட்ட, உடம்பையும் சரியாகத் துடைக்காமல் நாற்காலியில் வந்து அமர்ந்துகொண்டாள். எதிரில் இருந்த அலமாரியின் கண்ணாடியில் தெரிந்த தன் உடலைப் பொறுமையாகப் பார்த்தாள். அவளுக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்கு அது. உடலைத் துடைக்கும் துண்டைக் கட்டிலின் மேல் போட்டாள்.

தலையைத் துவட்டுவதற்காக வைத்திருந்த துண்டை நாற்காலியின் முதுகின் மேல் போட்டாள். எழுந்து நின்று பொறுமையாகக் கண்ணாடியைப் பார்த்துத் தன்னைத் தானே ரசித்துக்கொள்ளத் தொடங்கினாள். ஐந்தரை அடி உயரம். ஒல்லி என்று சொல்ல முடியாவிட்டாலும் குண்டு என்றும் சொல்ல முடியாத நடுத்தர உடல் வாகு. மாநிறத்திற்கும் சற்றுக் கூடுதலான நிறம். பெரிய கண்கள். நீளமான கழுத்து. கச்சிதமான வட்ட முலைகள். சிறிய காம்புகள். உபரிச் சதையற்ற வயிறும் இடுப்பும். சுத்தமாக மழிக்கப்பட்ட பிறப்புறுப்பு. வலுவான நீண்ட கால்கள். சந்தியா தன்னுடைய அழகைத் தானே ரசித்தபடி நின்றிருந்தாள். மனதில் பொங்கிய மகிழ்ச்சி உதடுகளில் முறுவலாக வெளிப்பட்டது.

அப்போதுதான் கதவைத் திறந்து, "சார்ஜர் இருக்கா?" என்று கேட்டபடி எட்டிப் பார்த்த மதன் திடுக்கிட்டுப் பின்வாங்கினான். "யூ... ப்ளடி..." என்று கத்தியபடி சந்தியா கதவைத் தாழ்ப்பாள் போட்டாள்.

மெதுவாகத் தலையைத் துவட்டிக் கொண்டிருக்கும்போது மனம் மெல்லத் தன் நிலைக்கு வரத் தொடங்கியிருந்தது. சொந்த அண்ணனாக இருந்தாலும் உடலில் பொட்டுத் துணி இல்லாமல் நின்றதை அவன் பார்த்துவிட்டான் என்பதை நினைத்து மனம் கலங்கியது. அதுவும் கண்ணாடியின் முன்பு நின்று அழகு பார்த்துக்கொண்டிருந்தபோது பார்த்துவிட்டான். அந்த அறை அவளுக்கான தனி அறை இல்லையென்றாலும் குளிக்கும்போது அறைக் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுவிட்டுத்தான் குளியலறைக்குள் போவாள். ஒருநாளும் அது தவறியதில்லை. வீட்டில் இன்னொரு குளியலறை இருப்பதாலும் தினசரி அவள் குளிக்கும் நேரம் பிறருடைய வேலைகளில் எந்தத் தொந்தரவையும் ஏற்படுத்தாத நேரம் என்பதாலும் அந்த அறையைச் சாத்திக்கொள்வதில் எந்தப் பிரச்சினையும் எழுவதில்லை. இன்று தாழ்ப்பாள் போட எப்படி மறந்தோம் என்பது அவளுக்குப் புரியவேயில்லை. தாழ்ப்பாள் போடாததால் மதன் இயல்பாக உள்ளே வந்திருப்பான். தாழ்ப்பாள் போட எப்படி மறந்தேன்? குளியலறையிலிருந்து வெளியே வரும்போதாவது ஒருமுறை கதவைக் கவனித்திருக்கலாம். எப்படிக் கவனிக்கத் தோன்றாமல் போயிற்று. அந்த அளவுக்கா கவனமில்லாதவளாக ஆகிவிட்டேன். அப்படி என்ன ஆயிற்று இன்றைக்கு. நிதானமாக, சாவகாசமாகக் குளித்துவிட்டு அதே மனநிலையுடன் வெளியே வந்திருக்கிறேன். குளியல் தந்த உற்சாகத்தை அவ்வளவு ரசித்திருக்கிறேன். வேறு எதுவுமே உறைக்காத அளவுக்கு அதிலேயே ஊறியிருந்திருக்கிறேன். கண்ணாடியில் உடம்பைப் பார்த்ததும் வந்த உற்சாகமும் சேர்ந்துகொண்டுவிட்டது.

சந்தியாவுக்கு அவமானமாக இருந்தது. தன்னுடைய நிர்வாண உடலை ஒரு ஆண் – அண்ணனாக இருந்தாலும் ஆண்தானே – பார்த்துவிட்டான். அதுவும் தன்னுடைய உடலைத் தானே ரசித்துக் கொண்டிருந்தபோது. நினைக்க நினைக்க மனம் ஆறவில்லை. தாழ்ப்பாளைப் போட எப்படி மறந்தேன் என்று திரும்பத் திரும்பத் தன்னைத் தானே கேட்டுக்கொண்டிருந்தாள். நினைக்க நினைக்க மண்டை வெடித்துவிடும்போல இருந்தது. குளிக்கும்போதும் குளித்த பிறகும் இருந்த உற்சாகம், மகிழ்ச்சி, ஆசுவாசம் எல்லாம் கரைந்துபோயிருந்தன.

அவமானம், அதிர்ச்சி ஆகியவற்றைத் தாண்டி வேறொரு எண்ணம் தன்னிச்சையாகத் தோன்றியது. தன்னை நிர்வாணமாகப் பார்த்துவிட்ட மதனின் மனதில் என்ன தோன்றியிருக்கும் என்ற எண்ணம் வந்தது. உடன் பிறந்தவளிடமே தவறாக நடந்துகொள்ளும் ஆண்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாள். படித்திருக்கிறாள். மதன் அப்படிப்பட்டவன் அல்ல. ஆனால், தன்னை நிர்வாணமாக, அதுவும் இன்று நின்றிருந்த கோலத்தில் பார்த்தது அவன் மனதைப் பாதிக்கக்கூடும் அல்லவா? அண்ணனாகத் தன்னைப் பார்த்துக்கொண்டிருப்பவன் இனி ஆணின் கண்களோடு பார்க்க ஆரம்பித்துவிடுவானோ?

உடல் ஒருமுறை விதிர்த்து அடங்கியது. மதன் ஒரு ஆணின் கண்ணோடு பெண்ணாகத் தன்னைப் பார்க்கக்கூடும் என்ற எண்ணமே வயிற்றைக் கலக்கியது. மனதில் இனம் புரியாத அருவருப்பும் அச்சமும் எழுந்தன.

சிறு வயதிலிருந்தே இருவருக்குமிடையில் ஆண் பெண் என்ற இடைவெளி எதுவும் இருந்ததில்லை. இருவருக்குமிடையே இரண்டே ஆண்டுகள் வித்தியாசம் என்பதால் ஒரே வயதினரைப் போலத்தான் இருவரும் பழகினார்கள். விளையாட்டு, ஊர் சுற்றுதல், அடிதடி என எல்லாமே ஆண் பெண் வித்தியாசம் இல்லாமல் நடக்கும். பெரியவர்கள் ஆன பிறகும் பெரிதாக விலகல் ஏற்படவில்லை. படிப்பு, ஆர்வங்கள், நட்பு வட்டம், ரசனை ஆகியவற்றில் இருவருக்கும் தனித்தனியான போக்குகள் உருவானாலும் நெருக்கத்தில் குறைவில்லை. ஆண்களின் கண்களை அன்றாடம் சந்தித்துப் பழகிய சந்தியாவுக்கு மதன் தன்னை ஒருநாளும் ஆணின் பார்வையில் பார்த்ததில்லை என்பது நினைவுக்கு வந்தது. அவனுடைய கணினித் திரையிலும் கைப்பேசித் திரையிலும் தற்செயலாக அவள் பார்க்க நேர்ந்த சில பெண்களின் படங்களும் நினைவுக்கு வந்தது. ஆனால், தன்னை அவன் ஒரு பெண்ணாகவே பார்த்ததில்லை என்பதை நினைத்துக்கொண்டாள். ஒருவரையொருவர் சீண்டுவது, திட்டிக்கொள்வது, சில சமயங்களில் அடித்துக்கொள்வது எல்லாம் இப்போதும் தொடர்ந்தபடிதான் இருக்கின்றன.

அதெல்லாம் இன்றோடு முடிவுக்கு வந்துவிடுமா? இனி வீட்டிலும் கவனமாக இருக்க வேண்டுமா? மதனிடம் இனிமேல் பார்த்துப் பழக வேண்டுமா?



சந்தியாவுக்கு அடித்தொண்டையில் கசந்தது. இந்த எண்ணத்தை மேற்கொண்டு தொடர அவள் விரும்பவில்லை. ஆனால், அதை அவளால் தவிர்க்க முடியவில்லை. இனி மதன் தன்னை எப்படிப் பார்ப்பான்? அவனும் பிற ஆண்களைப் போலத் தன்னைப் பார்ப்பானா? அவனிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமா? இதை அப்பா, அம்மாவிடம் சொல்லிவிடுவதுதான் பாதுகாப்பானதா?

சந்தியா தலையை உலுக்கிக்கொண்டாள். அழுகை பொங்கி வந்தது. மதனைப் பற்றி அப்படி நினைப்பதே பாவம் என்று தோன்றியது. அச்சத்தை விலக்கி ஆசுவாசம் கொள்ள முயன்றாள். சிறிது நேரம் எதையும் யோசிக்காமல் இருக்க விரும்பினாள். வேகமாகத் தலையைத் துவட்டிக்கொண்டாள். உடல் ஏற்கெனவே காய்ந்துபோயிருந்தது. உடைகளை அணிந்துகொண்டாள். வீட்டில் பொதுவாக ஷார்ட்ஸும் டி-ஷர்ட்டும்தான் அணிந்துகொள்வாள். இன்று தன்னிச்சையாகக் கை சுடிதாரைத் தேர்வுசெய்தது. உடையை அணிந்துகொண்டு படுத்துக்கொண்டாள். எப்படித் தாழ்ப்பாள் போடாமல் இருந்தேன் என்ற கேள்வி மீண்டும் குடைய ஆரம்பித்தது. மதன் எதிரில் தான் நின்ற கோலம் நினைவுக்கு வந்தது. இதன் பிறகு மதனின் கண்கள் தன்னை எப்படிப் பார்க்கும் என்ற எண்ணமும் எழுந்தது. மதனை நினைத்து எச்சரிக்கையாக இருக்க வேண்டுமா என்னும் கேள்வி மனதை விட்டு அகலவில்லை. அசிங்கம், அவமானம் ஆகியவற்றைத் தாண்டிப் பாதுகாப்பு பற்றிய அச்சமும் தலைதூக்கியது. உடல் கூச ஆரம்பித்தது.

படுக்க முடியவில்லை. இப்படியே இருந்தால் பைத்தியம் பிடித்துவிடும் என்று தோன்றியது. காலையிலிருந்து காப்பியைத் தவிர எதுவுமே சாப்பிடவில்லை என்பது நினைவுக்கு வந்தது. உடனே பசியெடுத்தது. கைப்பேசியைத் திறந்து பார்த்தபடி வெளியே வந்தாள். அம்மாவும் அப்பாவும் இன்னும் வரவில்லை. மதனையும் காணோம். வெளியே போயிருக்கிறானா அல்லது பாத்ரூமில் இருக்கிறானா என்று யோசித்தாள். எங்காவது மறைந்து நின்றிருப்பானோ என்று தோன்றியது. உடனே அந்த எண்ணத்தை உலுக்கி எறிந்தாள். அம்மாவும் அப்பாவும் எப்போது வருவார்கள் என்ற எண்ணம் எழுந்தது. அந்த எண்ணம் அவளுக்கே வினோதமாகப் பட்டது. சிறிய வயதில்கூட அம்மா, அப்பா வீட்டில் இல்லாதபோது இப்படியெல்லாம் தோன்றியதில்லை.

உணவு மேஜையின் மேல் ஆப்பிள் இருந்தது. அதை எடுத்து நறுக்கிச் சாப்பிட ஆரம்பித்தபோது ‘டர்ரக்’ என்ற சிறிய ஓசை காதில் விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். ஜன்னல் திரைச்சீலையில் பொருத்தியிருந்த க்ளிப் ஜன்னலில் உரசும் ஓசை. சற்றே ஆசுவாசத்துடன் சாப்பிட ஆரம்பித்தாள். மீண்டும் ஏதோ ஒரு ஓசை கேட்டதும் பதற்றத்துடன் அந்தப் பக்கம் பார்த்தாள். மின்விசிறியின் காற்றால் பேப்பர் சலசலக்கும் சத்தம். மனதை அமைதிப்படுத்திக்கொள்ள முயன்றபடி மீண்டும் சாப்பிடத் தொடங்கினாள். அழைப்பு மணி ஒலித்தது. அதுவும் சற்று அதிரவைத்தது. தயக்கத்துடன் எழுந்து சென்று கதவைத் திறந்தாள். மதன். மதிய உணவு வாங்கி வந்திருந்தான். அவனைப் பார்க்காமலேயே மேஜைக்குத் திரும்பி அமைதியாகச் சாப்பிடத் தொடங்கினாள். வாங்கி வந்ததையெல்லாம் எடுத்து வைக்க மதன் சமையலறைக்குள் சென்றான். சந்தியா எதுவும் பேசாமல் கைப்பேசியைப் பார்த்துக்கொண்டே சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். அப்போது அவள் முதுகில் லேசாக ஒரு அடி விழுந்தது. மதன் அப்படி அடிப்பது பழக்கம்தான் என்றாலும் இன்று அதை அவள் எதிர்பார்க்கவில்லை. கோபமும் குழப்பமுமாக அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

“கதவ மூடிட்டு ட்ரெஸ் மாத்த மாட்டியாடி லூஸு” என்றான் சிரித்துக்கொண்டே.

சடாரென்று எழுந்த அவள், “கதவ தட்டிட்டு உள்ள வர மாட்டியாடா நாயே” என்றபடி அவன் தோளில் அறைந்தாள்.

“நீ மறுபடியும் தூங்கிட்டியோன்னு நெனச்சு கதவ தள்ளிப் பார்த்தேன். அது ஓப்பனாயிடுச்சு. நான் என்ன பண்றது?” என்று சொல்லிவிட்டு மீண்டும் சிரித்தான்.

சந்தியாவுக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

*mail to:* **aravindanmail@gmail.com**

# எழுதுவதும் ஒரு கலை

ஹருகி முரகாமியின் 'Novelist as a Vocation' ஒரு சுவாரசியமான நூல். இதில் முரகாமி எவ்வாறு தான் எழுத வந்தேன் என்பதிலிருந்து எப்படி ஒரு முழுநேர எழுத்தாளனாக முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக இருக்க முடிகின்றது என்பதுவரை பேசுகின்றார்.

● **இளங்கோ**

இது மட்டுமில்லாது எழுதும் பிரதியின் அசல்தன்மை, இலக்கியப் பரிசுகள், விமர்சனங்களுக்கு எப்படி முகங்கொடுப்பது, எதைப் பற்றி எழுதவேண்டும், எவ்வகையான பாத்திரங்களை ஒரு நாவலில் உள்ளடக்குவது, யாருக்காக நான் எழுதுகின்றேன் எனப் பல்வேறு தலைப்புக்களில் எழுதியிருக்கின்றார். இவற்றில் சில அவரின் வாசகர்களினால் கேட்கப்பட்ட கேள்விகளுக்குச் சொல்லப்பட்ட பதில்களாகவும் அமைந்திருக்கின்றன.

முரகாமி பொதுவெளியில் பெரிதாக தன்னைக் காட்டிக்கொள்ள விரும்பாதவர். 'அவ்வாறு உரையாட தனக்கு விருப்பமில்லை என்று அர்த்தமல்; என்னால் ஒழுங்காகப் பேசத்தெரியாது. அதனால்தான் நான் பொதுவாக வெளியில் வருவதில்லை' என்கின்றார். அத்தோடு, 'இந்த நூல் குறித்துக் கூட நான் இனி எங்கும் பேசப்போவதில்லை. வேண்டுமெனில் இன்னும் வயதாகட்டும், அப்போது ஓரளவு முதிர்ச்சி வந்து பொதுவெளியில் இதைப்பற்றி உரையாற்றுகிறேன்' என்று இந்நூலின் முன்னுரையில் எழுதுகின்றார்.



முரகாமியை வாசித்தவர்க்கு அவரின் பின்புலம் ஓரளவு தெரிந்திருக்கும். முரகாமி ஒரு உணவகத்தை ஜாஸ் இசைப் பின்னணியில் அவரது மனைவியுடன் நடத்திக் கொண்டிருந்தவர். பேஸ்பால் மீது அதீத ஆர்வமுள்ள முரகாமி சுவாரசியமாக ஓர் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, நான் ஒரு நாவல் எழுதுகின்றேன் என்று தீர்மானித்து, வீட்டுக்குப் போகும் வழியிலே எழுதும் பேப்பர்களை வாங்கிக்கொண்டு போய் எழுதத் தொடங்கியவர். ஓர் உணவகத்தை நடத்திக் கொண்டு அவர் எழுதி முடித்த நாவலே 'Hear and the wind sing'. அதுவரை எழுத்தாளராக வரும் எந்த எண்ணமும் இல்லாத முரகாமி எழுதிய இந்த நாவல் ஜப்பானில் இலக்கியத்துக்கான பரிசொன்றையும் பெற்றுவிடுகின்றது.

அதொரு குறுநாவல். பிறகு சிறுகதைத் தொகுப்பு என ஒன்றிரண்டு நூலகளை எழுதிய சில ஆண்டுகளில் ஒரு 'அதிர்ச்சிகரமான' முடிவை முரகாமி எடுக்கின்றார். நான் இனி முழுநேர எழுத்தாளராக ஆகப்போகின்றேன் என்று அவரது வாழ்வியல் செலவுகளை நிவர்த்தி செய்த உணவகத்தை விற்கின்றார். அவரது நண்பர்கள் 'ஓரளவு இலாபத்தோடு இருக்கும் இதை விற்காதீர்கள், வேண்டுமெனில் நீங்கள் நாவல் எழுதும் காலங்களில் வேறு ஒருவரை வைத்து இதை நடத்தலாம்' என்று ஆலோசனைகள் சொன்னபோதும், அவர், 'எழுதுவது மட்டுமே செய்யப்போகின்றேன்' என்று உணவகத்தை விற்று, டோக்கியோவை விட்டு வேறொரு புறநகருக்கு மனைவியுடன் இடம்பெயர்கின்றார்.

அதுவரை நள்ளிரவுகளில் பகுதி நேரமாக எழுதிக் கொண்டிருந்த முரகாமி, ஓர் ஒழுங்குக்குள் தன்னைக் கொண்டுவருகின்றார். இரவில் முன்னரே தூங்கி, விடிகாலையில் எழும்பி எழுதுவதும், பின்னர் உடல்நலத்துக்காக நீண்டதூரம் ஓடுவதுமென தினமும் தன்னைப் பழக்கிக் கொள்கின்றார். இந்தப் பழக்கம் தன்னை 'ஒவ்வொரு நாவலையும் எழுதத் தயார்ப்படுத்தும்போதும் பெரும் உதவியாக இருக்கின்றது' என்கின்றார்.

முரகாமி, தான் நாவலை எழுதத் தொடங்கும்போது, தினமும் எட்டு ஜப்பானியப் பக்கங்கள் (1600 ஆங்கில வார்த்தைகள்) எழுதுவேன் என்றும், அதற்காய் காலையில் நான்கைந்து மணித்தியாலங்கள் செலவழிப்பேன் என்றும் கூறுகின்றார். அதுபோலவே ஒருநாளில் நன்றாக எழுதும்போது நிறைய எழுதினாலும் பத்துப் பக்கங்களோடு தன் நாவலை நிறுத்திவிடுவேன் என்கின்றார். ஒருநாளிலேயே நிறைய எழுதிவிட்டால் சிலவேளைகளில் அடுத்துவரும் நாட்களில் ஒன்றும்



எழுதமுடியாது போய்விடும். தொடர்ச்சியாக ஒரு நாவலை எழுதுபவர்க்கு இது நல்லதல்ல என்கின்றார்.

இவையெல்லாவற்றையும் சொல்லும்போது, இது தன் தனிப்பட்ட அனுபவங்கள் என்பதையும் அடிக்கடி நமக்கு முரகாமி நினைவுபடுத்துகின்றார். இப்படி 'அளவாக' தினம் எழுதுவதை ஹெமிங்வேயும் சொல்லியிருக்கின்றார். 'நல்லாய் எழுத்து ஊறிக்கொண்டு வருகின்றதென்பதற்காய் ஊற்றை ஒட்ட இறைத்து விடாதீர்கள். ஓரிடத்தில் நிறுத்திவிட்டு அடுத்தநாளுக்கும் அதே ஊற்றுப் பெருக அனுமதியுங்கள்' என ஹெமிங்வே நமக்கு அறிவுறுத்தியிருக்கின்றார்.

முரகாமி, தனது நாவல்களுக்காய் 'கிட்டத்தட்ட மூன்று நான்கு மாதங்கள் எழுதுவதற்கு உழைப்பேன்' என்கின்றார். உதாரணத்திற்கு 'Kafka on the shore' இற்காய் தினமும் 10 பக்கங்கள் வீதம் மாதமொன்றுக்கு 300 பக்கங்களும், அதை ஆறுமாதங்களுக்கு எழுதி 1,800 பக்கங்கள் வரை தொடர்ந்து எழுதியதாகச் சொல்கின்றார். முதல் வரைவை முரகாமி எழுதிய பிறகு கொடுக்கும் உழைப்புத்தான் இன்னும் கவனிக்கத்தக்கது.

'நாவலை எழுதி முடித்தபின் கிட்டத்தட்ட இரண்டு வாரங்களிலிருந்து ஒரு மாதம்வரை அதை அப்படியே டிராயருக்குள் போட்டு மூடிவிடுவேன். அதைப் பற்றி ஒரு துளியும் யோசிக்காது இருக்க அந்தக்காலங்களில் முயற்சிப்பேன்' என்கின்றார். பின்னர் முதலாம் திருத்தத்தை சில வாரங்களுக்குச் செய்வார். அதன் பிறகு கொஞ்சம் இடைவெளி விட்டு 2வது, 3வது திருத்தங்களும், மீள எழுதுதலும் செய்வாரென்று சொல்கிறார். இவை எல்லாம் செய்து ஒரளவு முழுமையான பின் தனது முதல் வாசகரான மனைவிக்கு வாசிக்கக் கொடுப்பேன் என்கின்றார்.

அவரின் மனைவி ஒரு தேர்ந்த எடிட்டரைப் போல மாற்றங்களைச் சொல்ல, அவரோடு சிலதை முரண்பட்டு, சிலதை ஏற்று, பிறகு இன்னொருமுறை முரகாமி திருத்தங்களைச் செய்வார். அதன்பின்னரே அவரின் எடிட்டர்களின் கையில் பிரதி போகும். என்னதான் தனது எடிட்டர்கள் சிறப்பானவர்களாக இருந்தாலும், 'அவர்களோடு எப்போதும் சண்டையிட்டே மாற்றங்களைச் செய்வேன்' என்கின்றார். இவ்வாறு பல படிமுறைகளுக்குப் பிறகுதான் நாம் வாசிக்கும் முரகாமியின் பிரதி நம் கைகளை வந்து சேர்கிறது.

அதேபோல ஒரு நாவலை எழுதத் தொடங்கும்போது, தான் 'வேறெந்த எழுத்து வேலையிலும் கவனம் செலுத்துவதில்லை' என்கின்றார், முரகாமி. அப்படி அந்தக் காலங்களில் செய்யும் ஓரேயொரு விடயம் மொழியாக்கங்கள் மட்டுமே என்கின்றார். அது புனைவில்லாததால், மூளையில் இன்னொரு பகுதியைச் செயற்படுத்த வைப்பதால் அப்படி மொழியாக்கங்களைச் செய்வது எளிதாக இருக்குமென்கின்றார்.

இவ்வாறு முரகாமி சொல்வதை வாசிக்கும்போது எனக்கு உடனே தமிழில் நினைவுக்கு வருபவர் சுகுமாரன். அவர் தனது முதலாவது நாவலான 'வெலிங்டனை' எழுதிக் கொண்டிருக்கையில் ஒரு

தொய்வு வந்தபோது தான் மொழியாக்கம் செய்யத் தொடங்கியதாக எழுதியிருப்பார். அப்படி அந்தக் காலத்தில் அவர் மொழியாக்கம் செய்ததுதான் 'பட்டு'.

முரகாமி தனது நாவல்கள் எழுதும் அனுபவங்களையும் அவரின் பாத்திரங்கள் உருவாக்கப்படும் வழிமுறைகளையும் இங்கே எழுதிச் செல்வது சிலாகிக்கக் கூடியது. நாவலை ஒரு படைப்பாளி எழுதிக் கொண்டிருக்கும்போது, நாவலாசிரியரும் அந்தப் பிரதியால் உருவாக்கப்படுகின்றார் எனச் சொல்கின்றார் (While Novelist creating a novel he is simultaneously being created by the novel as well). அவ்வாறு தான் உருவாக்கும் பாத்திரங்களே வேறு பாத்திரங்களை உருவாக்க அவை நாவலாக உருவாகின என்று சொல்கின்றார். முரகாமி, 'Colorless Tsukuru Tazaki and His Years of Pilgrimage'-ஐ முதலில் ஏழெட்டுப் பக்கக் கதையாக எழுதியிருக்கின்றார். அந்த நாவலை வாசித்த நமக்குத் தெரியும், டஸாக்கியின் நான்கு பாடசாலை நண்பர்கள் சட்டென்று ஒருநாள் எங்களோடு நீ பேசக்கூடாது என்று எந்தக் காரணமும் சொல்லாது விலகிப் போய்விடுகின்றார்கள். இது நடந்து கிட்டத்தட்ட 18 வருடங்களின் பின், டஸாக்கி தனது முப்பத்தாறு வயதில் இருக்கும்போது ஏன் எனது நண்பர்கள் இப்படி நடந்து கொண்டார்கள் என யோசிக்கின்றார். அப்போது டஸாக்கி டேட்டிங் செய்துகொண்டிருக்கும் பெண், இந்தக் கேள்வியை ஆழமாக அவரிடம் கேட்க வைக்கின்றார். இத்தனைக்கும் அந்தப் பெண் பாத்திரம் ஒரு முக்கிய பாத்திரமே அல்ல. சிறுகதையில் அதற்கான காரணம் எதையும் சொல்லாது, ஒரு கற்பனையான முடிவாக எழுதி வைத்ததை, அந்தப் பெண் பாத்திரம் ஏன் என்று கேட்பதிலிருந்தே அது பெரு நாவலாக விரிந்தது என்கின்றார். அது டஸாக்கியை டோக்கியோ வரை கொண்டு சென்று இறுதியில் இந்த உண்மையை அறிவதற்காய் அவர் பின்லாந்துக்கு தனது நண்பரொருவரைத் தேடிப் போவதுவரை விரிவதை நாவலை வாசித்த நமக்குத் தெரியும்.

இவ்வாறு முரகாமி தான் எழுதிய சில நாவல்களின் பின்னணிகளையும், பாத்திரங்களின் சிக்கலான வார்ப்புகள் எவ்வாறு உருவாகின என்பதையும் இந்த நூலில் விரிவாக எழுதிச் செல்கின்றார்.

ஒருவர் எதை எழுதவேண்டும், எந்த வகையான பாத்திரங்களை நாவலுக்குள் அனுமதிக்க வேண்டும் என்று முரகாமி தன் நாவல் எழுதும் அனுபவங்களிலிருந்து சில திறப்புக்களைச் செய்கின்றார். மேலும், 'உங்களுக்கு நம்புவதற்கு கடினமென்றாலும் பலர் சொல்லும் writer's block எனக்கு வந்ததில்லை' என்றும் குறிப்பிடுகின்றார். 'ஏதோ எப்போதும் எனக்குள் சிருஷ்டி பாய்கின்றதாக நீங்கள் நினைக்கத் தேவையில்லை. நான் எழுத விரும்பும்போது மட்டுமே எழுதுவேன். ஆகவே, அது எப்போதும் எனக்கு மகிழ்ச்சியான மனோநிலையைத் தந்துகொண்டிருக்கின்றது' என்கின்றார்.




எந்த நாவலாயினும், தனக்குள் உருவாகி, உருவாகி ஒருகட்டத்தில் இதற்குமேலும் என்னால் தாங்கமுடியாது என்கின்றபோதே எழுதுவதற்கு சென்று அமர்வேன் என்று முரகாமி சொல்கின்றார். 'தன்னால் இன்னும் இந்தக் காலக்கோட்டுக்குள் எழுதித் தரவேண்டும் என்று சொல்லப்பட்டு நேரம் வரையறுக்கப்பட்டு எழுதுபவர்களை விளங்கிக் கொள்ளமுடியவில்லை' என்கின்றார்.

மேலும் ரேமண்ட் கார்வர் கூறியதுபோல, ஒரு படைப்பை, 'இன்னும் கொஞ்சம் நேரமிருந்தால் இதைவிட மிகச் சிறப்பாக எழுதியிருப்பேன்' என்று சொல்வோரை, 'என்னால் மன்னிக்கவே முடியாது' என்கின்றார். 'எழுத்து என்பதே ஒரு அருமையான விடயம். உங்களுக்கு அதற்கு வேண்டிய நேரத்தைக் கொடுக்காது அவசரத்தில் எழுதுகின்றீர்கள் என்றால் நீங்கள் இதைவிட உங்களுக்கு நல்ல வருமானத்தைத் தரும் வேறு தொழிலுக்குப் போகலாம். எழுத வந்தால் அதற்காய் உங்களை முழுதாய்க் கொடுக்கவேண்டும்' என்கின்றார். முரகாமியே முதன்முதலில் ரேமண்ட் கார்வரை ஜப்பானுக்கு மொழிபெயர்த்து, கொண்டு சென்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக முரகாமி எப்படி ஒரு ஜப்பானியராக இருந்து அமெரிக்கவுக்கு தனது நூல்களைப் பதிப்பிக்க கொண்டு போனார் என்கின்ற பகுதிகளை வாசித்துக் கற்றுக்கொள்வது என்பது நமது தமிழ்ப் படைப்புக்களை எவ்வாறு

மேற்கிற்கு அறிமுகப்படுத்தலாம் என்பதற்கான சிறந்த படிப்பினைகளாக இருக்கின்றது. தனது நூல்களின் பிறமொழி அறிமுகத்தால் கிடைத்ததைவிட, 'முகமற்ற ஜப்பானியர்களாக எல்லா ஜப்பானியர்களும் மேற்குலகில் நடமாடிக் கொண்டிருந்தபோது எமக்கென்றொரு அடையாளம் வேண்டும் என்கின்ற ஓர் உந்துதலும் அதற்கு முக்கிய காரணம்' என்கின்றார் முரகாமி.

அதேபோல, ஜப்பானைப் போல ஒரு நாவலை எழுதிவிட்டு அது பரவலாக வாசிக்கப்படட்டும் என்று அமெரிக்காவில் சும்மா இருக்கமுடியாது. தான் தனது நாவல்களுக்காய் அது செல்லக்கூடிய எல்லாப் பாதைகளுக்கும் சென்று அமெரிக்காவில் பதிப்பிக்க முயற்சித்தேன் என்கின்றார். உங்களுக்கு ஓர் எடிட்டர்/பதிப்பகம் இருந்தால் கூட, ஒரு எழுத்தாளராக உங்களின் விடாமுயற்சியும், அவர்களை உந்தித்தள்ளுதலும் -ஜப்பானில் இல்லாதது- தான் அமெரிக்காவில் கற்றுக்கொண்டது என்கின்றார். அதேபோல ஆசியாவுக்கு அப்பால் முதலில் இரஷ்யாவில்தான் தனது அரைவாசிக்கு மேற்பட்ட நாவல்கள் விற்பனையில் முன்னணியில் நின்றது என்பதையும் குறிப்பிடுகின்றார்.

அமெரிக்கப் பதிப்பகங்களை நாடும்போது, நீங்கள் உங்கள் நாட்டில் மில்லியன்கணக்கில் நாவல்களை (அவரது 'நோர்வேஜியின வூட்' ஜப்பானில் 2 மில்லியன் விற்றது) விற்கப்பட்டது என்பதோ, இத்தனை விருதுகளைப் பெற்றது என்பதோ ஆங்கில வாசகர்களுக்கு முக்கியமில்லை. அவர்களுக்குரிய வாசிப்புத் தளங்களில் நீங்கள் முக்கியமானவராக இருக்கவேண்டும். அந்தவகையில் தனது சிறுகதைகள் 'நியூ யார்க்கரில்' வந்ததே தனது நாவல்களை பெருமளவில் அமெரிக்க வாசகர்களிடையே கொண்டு சென்றதற்கு முக்கிய காரணம் என்கின்றார். இன்றைக்கு முரகாமியின் நாவல்கள் 50 இற்கும் மேற்பட்ட மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. உலகளவில் அவரின் புதிய நாவல்களுக்காய்க் காத்திருக்கும் வாசகர்களும் கூடிக்கொண்டே இருப்பதையும் பார்க்கலாம்.

இவ்வளவு பிரபல்யமும் புகழும் பெற்றபோதும் முரகாமி மிகவும் தாழ்மையுடனேயே பேசிக் கொண்டிருக்கின்றார். 'எழுத்து என்ற ஒன்று இல்லாதுவிட்டால் என்னை நீங்கள் தெருவில் கண்டால் கூட அடையாளங் கண்டிருக்கமாட்டீர்கள். நான் இப்போதும் ஒரு சாதாரண மனிதனே, என்ன எனக்கு கொஞ்சம் எழுதத் தெரியும். அந்த ஒரு நம்பிக்கையில் இப்படி 35 வருடங்களுக்கு மேலாக ஒரு முழுநேர எழுத்தாளனாக இருக்கின்றேன்' என்றே எழுதுகின்றார்.

ஒரு எழுத்தாளருக்கு அவர் ஒரு படைப்பை எழுதும்போது இருக்கவேண்டிய (தனக்குத் தெரிந்த) மூன்று விடயங்களைச் சொல்கின்றார். ஒன்று ஓர் எழுத்தாளர் தனக்குரிய நடையை (style) அவசியம் உருவாக்கிக் கொள்ளவேண்டும். எப்படி ஒரு பாடகருக்கு தனித்துவமான குரலும், ஓர் ஓவியருக்கும் குறிப்பிட்ட சில வர்ணங்களும் அவர்களுக்குரியதாகின்றதோ அதுபோல எழுதுபவர்க்கு ஒரு தனித்த நடை அவசியம். இரண்டாவது அந்த நடை உருவாகியபின் அப்படியே தேங்கிவிடாது காலத்தோடு அதுவும் இன்னும் வளர்ந்தபடியே இருக்கவேண்டும். மூன்றாவது இந்த தனித்துவமான நடை வாசகரிடையே நுழைந்திருக்க வேண்டும். வாசகர்களும் அதன் ஒரு பகுதியாக மாறியிருக்கக்கூடியதாக ஒரு படைப்பாளியின் எழுத்து நடை மாறி அந்தப் படைப்பின் அடிப்படைகள் அவர்களுக்குப் பரிட்சயமாயிருக்க வேண்டும். இவை தனது தனிப்பட்ட கருத்துக்களென முரகாமி சொல்கின்றபோதும், அவரின் நாவல்களை தொடர்ச்சியாக வாசிக்கும் நம்மைப் போன்றவர்களால் இவற்றை நன்கு தொடர்புபடுத்திப் பார்க்கமுடியும் என்றே நினைக்கின்றேன்.

அவ்வாறே, இலக்கிய விருதுகளால் பெரும் நன்மைகள் விளையப்போவதில்லை என்பதைச் சொல்லவே ஓர் அத்தியாயத்தையே உருவாக்கி இருக்கின்றார். மேலும், முதலாவதாக எழுதும் படைப்புக்கு கிடைக்கும் விருதை விட விமர்சனங்களே ஒருவகையில் நல்லது என்கின்றார். முதல் சில படைப்புக்களினால் மிகவும் உயர்ந்தேந்தப்பட்ட எத்தனை படைப்பாளிகள் 20/30 வருடங்களில் அடையாளமே இல்லாது போயிருக்கின்றனர் என்பதை அவர் பார்க்கச் சொல்கின்றார். மேலும் வான்கோவும் பிகாஸோவும் அவர்கள் வாழ்ந்த காலத்தைவிடவும் அவர்களின் மரணத்தின் பின்னே பெரிதாக விஸ்வரூபம் எடுத்திருக்கின்றனர், அவர்களின் புதுமுயற்சிகள் பின்னாட்களிலே அதிகம் போற்றப்பட்டன என்பதையும் குறிப்பிடுகின்றார்.

முரகாமியின் படைப்புக்களில் ஈர்ப்புள்ளவர்களை மட்டுமில்லை, இலக்கியத்தில் ஆர்வமுள்ள எவரையும் இந்த நூலை வாசிக்கப் பரிந்துரை செய்வேன். தமிழில் எண்ணற்ற புத்தகங்கள் மொழியாக்கம் செய்யப்படும் பொற்காலமாக இருக்கின்ற இக்காலத்தில், விரைவில் யாரேனும் இந்த நூலை தமிழாக்கம் செய்யவேண்டும் எனவும் விரும்புகின்றேன். அதேவேளை இது எழுதுபவர்க்கான கையேடோ எழுதச் சொல்லி உற்சாகப்படுத்தும் 'முன்னேற்ற' வகை நூலோ அல்ல.

'எதற்காக அல்லது யாருக்காக எழுதுகின்றீர்கள் என தன்னிடம் அடிக்கடி கேட்கப்படுவதுண்டு' என்று சொல்லும் முரகாமி, 'எனக்காகத்தான் முதலில் எழுதுகின்றேன்; என்னைப் பரவசப்படுத்த மட்டுமில்லை, எனது அகம் சார்ந்த பல சிக்கல்களையும் எழுத்து முடிச்சவிழ்த்து என்னை ஆற்றுப்படுத்துகின்றது' என்கின்றார். அநேகரின் எழுத்துக்கள் இவ்வாறுதான் தொடங்குகின்றன போலும்.

*mail to:* **elanko@rogers.com**

# நம்பிக்கைகள், அதிசயங்கள்
## பிறமொழிகளில் க.நா.சு. படைப்புகள்

இன்றைய தமிழ் இலக்கிய வளர்ச்சியில் தாக்கம் செலுத்திய மொழிபெயர்ப்புகளைச் செய்தவர்களில் மிக முக்கியமானவர் க.நா. சுப்ரமண்யம். உலக மொழிகளின் சிறந்த படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்துத் தந்த அவர், சொந்தமாகவும் நாவல், சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை என எல்லா வகைமைகளிலும் எழுதினார்.

● **ஸ்ரீநிவாச கோபாலன்**

**வா**ழ்நாள் முழுக்க தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் எழுதிக்கொண்டே இருந்தார். ஆனால், தமிழ் தவிர மற்ற மொழிகளில் வெளியான அவரது படைப்புகள் பற்றி போதிய பதிவுகள் இல்லை. இந்நிலையில், மற்ற மொழிகளில் வெளியான க.நா.சு. படைப்புகளை கவனப்படுத்தும் முயற்சியே இக்கட்டுரை.

### கட்டுரை

1986ஆம் ஆண்டு க.நா.சு.க்கு சாகித்ய அகாடமி விருது பெற்றுத்தந்த ‘இலக்கியத்துக்கு ஓர் இயக்கம்’ (1985) நூலின் ஆங்கிலப் பதிப்பு ‘A Movement of Literature’, 1998ஆம் ஆண்டு வெளியாகியுள்ளது. அந்நூலை வெங்கட் சாமிநாதன் மொழிபெயர்த்திருக்கிறார்.



The Palm, The Plantain and The Lotus என்ற தலைப்பில் முந்நூறு இந்திய நாவல்களைப் பற்றி ஒரு நூல் எழுத க.நா.சு. திட்டமிட்டார். பிறகு அத்திட்டத்தைச் சுருக்கி, தலைசிறந்த பத்து நாவல்களைப் பற்றி மட்டும் எழுதிப் பார்க்கலாம் என்று நினைத்தார். அதன்படி 1982-8இல் The Mirror பத்திரிகையில் Ten Great Novels of India என்ற தலைப்பில் தொடர் கட்டுரைகள் எழுதினார். அக்கட்டுரைகள் இன்னும் நூலாக்கம் பெறவில்லை. இருந்தாலும், அக்கட்டுரைகளின் தமிழ் மொழிபெயர்ப்பை ‘கணையாழி’ பத்திரிகை வெளியிட்டது. தேவகி குருநாத் கட்டுரைகளை மொழிபெயர்த்தார். இவ்வெளியீட்டிற்கு அசோகமித்திரன் முக்கியக் காரணமாக இருந்தார். ‘கணையாழி’யில் வந்த இக்கட்டுரைகளை அன்னம் பதிப்பகம் ‘சிறந்த பத்து இந்திய நாவல்கள்’ (1985) என்ற நூலாகவும் வெளியிட்டது. ஆனால், இந்நூலுக்கு மூலமாக அமைந்த ஆங்கிலக் கட்டுரைகள் இன்னும் நூலாக வெளிவரவில்லை.

இதுபோல க.நா.சு. நேரடியாக ஆங்கிலத்தில் எழுதிய நூற்றுக்கணக்கான கட்டுரைகள், தொடர்கள் தொகுக்கப்படாமல் உள்ளன. அவற்றைத் தொகுப்பதற்கான முதல் முயற்சியாக பாரதியார் பற்றி க.நா.சு. எழுதிய கட்டுரைகளும் கவிதை மொழிபெயர்ப்புகளும் அடங்கிய நூல், The Birth of a Poet (2024), சென்ற ஆண்டு வெளியானது. இத்தொகுப்பு இன்னும் பல தொகுப்பு நூல்கள் வெளிவருவதற்கான சாத்தியத்தையும் உணர்த்துகிறது.

க.நா.சு., ஆங்கிலப் பத்திரிகைகளில் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து நூலாக்க முயலாதபோதும், இரண்டு ஆய்வு நூல்களை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இந்தியாவில் கத்தோலிக்கக் கிறிஸ்வத்தின் வருகை மற்றும் பரவல் பற்றிய ஆய்வு, The Catholic Community in India (1970). இந்நூல் நீரத் சௌத்ரியின் முன்னுரையுடன் வெளியானது. மற்றொரு நூலான, Tiruvalluvar and His Tirukkural (1987) சமண நோக்கில் திருக்குறளை அணுகும் ஆய்வு. இந்நூலில் திருக்குறளிலிருந்து பல அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இவ்விரு நூல்களும் இப்போது மறுபதிப்புக் காணவேண்டியது அவசியம்.

இவை தவிர The Literary Experience என்ற நூலையும் க.நா.சு. எழுதியிருப்பதாகக் குறிப்புகள் உள்ளன. ஆனால், இது எவ்வகை நூல், எப்போது வெளியானது என்ற விவரங்கள் இல்லை. 1983 ஜனவரியில் க.நா.சு. வின் பாரதியார் பற்றிய கட்டுரையை வெளியிட்ட SPAN இதழின் குறிப்பில் இந்நூல் சுட்டப்படுகிறது. INFA Publications வெளியிட்ட Indian Who’s Who 1980-81 என்ற நூலிலும் The Literary Experience என்ற நூலை க.நா.சு. எழுதியிருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இந்நூல் இதுவரை பார்வைக்குக் கிடைக்கவில்லை.



க.நா.சு.வின் கட்டுரைகள் பல அயல்மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. UNESCO பத்திரிகைகளில் அவ்வப்போது கட்டுரைகள் எழுதியுள்ளார். பல மொழிகளில் வெளியாகும் யுனெஸ்கோ இதழ்களின் ஆங்கிலப் பதிப்பில் வெளியான கட்டுரைகள் சில கிடைத்துள்ளன. அவற்றில், வீரமாமுனிவரைப் பற்றி எழுதிய ஆங்கிலக் கட்டுரை (1957) பிரெஞ்சு, ஸ்பானிஷ் மொழி பதிப்புகளிலும் வெளியாகியுள்ளது.

1961ஆம் ஆண்டு சரஸ்வதி மகால் நூல் நிலையம் பற்றி எழுதிய கட்டுரை, Fönstret என்ற ஸ்வீடிஷ் பத்திரிகையில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது.

ஐம்பதுகளின் பிற்பகுதியில் சிலப்பதிகாரம் பற்றி எழுதிய கட்டுரைகள் பிரெஞ்சில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவற்றை La Réforme (1957), L'Action Catholique (1959) ஆகிய இதழ்கள் வெளியிட்டுள்ளன. (இவ்விதழ்கள் யுனெஸ்கோ வெளியிடவிருக்கும் சிலப்பதிரகாரத்தின் பிரெஞ்சுப் பதிப்பு பற்றியும் அறிவிக்கின்றன. அந்தப் பிரெஞ்சுப் பதிப்பு வெளியானதா, அதில் க.நா.சு.வின் பங்களிப்பு இருந்ததா என்ற வினாக்களுக்கு விடை இல்லை.)

க.நா.சு.வின் கட்டுரையொன்று Shiva Tanzt Das Indien Lesebuch (1999) என்ற ஜெர்மன் நூலிலும் இடம்பெற்றுள்ளது. இந்திய எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த படைப்புகள் அடங்கிய நூல் இது. இத்தொகுப்பில் க.நா.சு. பற்றிக் கொடுக்கப்பட்டுள்ள அறிமுகக் குறிப்பில், 'இவர் ஆங்கிலம், ஸ்வீடிஷ் மொழிகளிலும் எழுதியுள்ளார்' என்ற தகவல் உள்ளது. இந்தக் கூற்றுக்குச் சான்றாக்கூடிய கட்டுரை ஒன்று Bonniers என்ற ஸ்வீடிஷ் இலக்கியப் பத்திரிகையின் ஏப்ரல் 1969 இதழில் வெளியாகியுள்ளது. இக்கட்டுரையின் ஆரம்பப் பகுதி மட்டும் கிடைத்துள்ளது. Bloomsbury Academic 2020ஆம் ஆண்டில் Global Modernists on Modernism: An Anthology என்ற தொகுப்பை வெளியிட்டது. சிறந்த தொகைநூலுக்கு Modernist Studies Association வழங்கும் பரிசைப் பெற்ற இத்தொகுப்பில் தருண் சுப்ரமணியம் மொழிபெயர்ப்பில் க.நா.சு. எழுதிய 'நவீன இலக்கியம்' என்ற கட்டுரை இடம்பெற்றுள்ளது.

## நாவல்

க.நா.சு. சக படைப்பாளிகள் பலரின் நாவல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். ஆனால், தனது சொந்தப் படைப்பு எதையும் அவ்வாறு வெளியிட்டதாகத் தெரியவில்லை. க.நா.சு.வின் காலத்தில் அவரது நாவல்கள் எதுவும் மற்றவர்கள் மொழிபெயர்ப்பில் ஆங்கிலத்தில் தனி நூலாக வெளியானதாகவும் தெரியவில்லை.

1970களில் Arnold-Heinemann இந்திய மொழிகளில் வெளியான சிறந்த படைப்புகளைத் தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் வெளியிடும் திட்டத்தைத் தொடங்கியபோது, நாவல்களைப் பதிப்பிக்கும் பொறுப்பாசிரியராக க.நா.சு. நியமிக்கப்பட்டார். அப்போது நாவல் வரிசையில் க.நா.சு.வின் 'அசுரகணம்' நாவல் Demon Breeds என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் வெளியாக இருந்தது. வங்காளத்திலிருந்து தாராசங்கர் பானர்ஜியின் 'ஆரோக்கிய நிகேதனம்', மராத்தியிலிருந்து பி. எஸ். ரெகேவின் 'ரேணு' ஆகிய நாவல்களும் வெளிவர ஆயத்தம் செய்யப்பட்டிருக்கிறது. 1973ஆம் ஆண்டின் பத்திரிகை விளம்பர அறிவிப்பு ஒன்றிலிருந்து இந்த விவரம் தெரியவருகிறது. விளம்பரத்தில்










*ஆங்கிலம், ஸ்பானிஸ், பிரெஞ்சு மொழிகளில் வெளியான வீரமாமுனிவர் பற்றிய கட்டுரை. Srimati S Rajee என்பது க.நா.சு.வின் துணைவியார் பெயர். இதே புனைபெயரில் வேறுசில படைப்புகளும் வெளியாகியுள்ளன.*

GENERAL EDITOR: KA NAA SUBRAMANYAM

Indian fiction in the various languages of India have had an innings of over a hundred years and has come of age. Readers of India have not yet been exposed to this fiction. An attempt will be here made to present to readers both the work of the pioneers as well as the work of writers with definite modernistic trends, creating an image of Indian fiction that will be valid as a tradition. Novels written originally in the English language will also be presented in the series to round up the image of Indian fiction.

*The first two titles in the series are:*

**ZERO**

C. RADHAKRISHNAN

Originally written in the Malayalam language it is a demonstration of great sensibility. It fully portrays how things physical in India tend to become metaphysical. Told with great art and intensity it is Indian fictional art at its most high. Symbolic and serious, this novel will mould the image of Indian fiction in the right perspective. Rs. 20.00

ONION PEEL

K. M. TRISHANKU

Written in the English language the novel portrays an existentialist situation with charm, vigour and completeness. A mature novelist who deals with the exciting theme of a man's impending loss of virility and the pre D-Day glut of girls making the fulness of a living. Rs. 20.00

*Forthcoming novels will be:*

3. P. S. REGE'S : RENU
A Translation from Marathi by Kumud Mehta
4. KA NAA SUBRAMANYAM'S : DEMON BREED
A Translation from Tamil
5. TARASANKAR BANERJEE'S : AROGYA NIKETAN
A Translation from Bengali by Enakshi Chatterjee

*The Indian Publisher and Bookseller - Vol 23 – 1973 – Advt.*

கூறியுள்ளபடி, 'ஆரோக்கிய நிகேதனம்' நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பை 1977ஆம் ஆண்டில் Arnold-Heinemann வெளியிட்டுள்ளது. ஆனால், 'அசுரகணம்' பற்றிய அறிவிப்பு பலித்ததா என்று தெரியவில்லை.

இதே காலப்பகுதியில், க.நா.சு.வின் 'வாழ்ந்தவர் கெட்டால்' (1951) நாவலை, நகுலன் 'The Fall' என்ற தலைப்பில் மொழிபெயர்த்திருக்கிறார். இந்த மொழிபெயர்ப்பு சாகித்ய அகாடமியின் Indian Literature பத்திரிகையின் ஜூலை - ஆகஸ்ட் 1978 இதழில் வெளிவந்துள்ளது. தமிழ் இலக்கியச் சிறப்பிதழாக வெளியான அந்த இதழில், 'வாழ்ந்தவர் கெட்டால்' நாவலின் மொழிபெயர்ப்புடன், க.நா.சு.வின் நாவல்களை அறிமுகப்படுத்தி நகுலன் எழுதிய முன்னுரையும் உள்ளது. இந்த மொழிபெயர்ப்பை, அச்சேறுவதற்கு முன்பே வாசித்திருப்பதாக அசோகமித்திரன் எழுதியுள்ளார். 46 ஆண்டுகள் கழித்து, இந்த மொழிபெயர்ப்பை Zero Degree Publishing சென்ற ஆண்டு நூலாக வெளியிட்டுள்ளது. இப்போது ஆங்கிலத்தில் கிடைக்கும் க.நா.சு.வின் ஒரே புனைவு நூலும் இதுதான்.

'அவதூதர்' (1988) நாவலைப் பற்றியும் இங்கே குறிப்பிட வேண்டும். அந்த நாவலின் மூல வடிவம் முதலில் ஆங்கிலத்தில்தான் எழுதப்பட்டது. லதா ராமகிருஷ்ணன் அதனைத் தமிழில் மொழிபெயர்த்தார். 'அவதூதர்' நாவல் தமிழில் வெளியானபோது அதற்கு க.நா.சு. எழுதியிருக்கும் முன்னுரையில், அறுபதுகளிலேயே இந்நாவலை ஆங்கிலத்தில் எழுதிவிட்டதாகச் சொல்கிறார். இந்நாவல் ஆங்கிலத்திலேயே வெளியாகும் வாய்ப்பு இருந்திருக்கிறது. ஆனால், பதிப்பாளர் கோரிய திருத்தத்தைச் செய்ய மறுத்ததால், நாவல் வெளியாகவில்லை. வேறு பதிப்பகம் மூலம் வெளியிடவும் க.நா.சு. முயலவில்லை. பின்னர், எண்பதுகளில் இந்த நாவலைத் தமிழாக்கம் செய்த லதா ராமகிருஷ்ணன், மொழிபெயர்ப்பை முடித்துவிட்டு மூலப்பிரதியை க.நா.சு.விடமே ஒப்படைத்துவிட்டதாக நினைவுகூர்கிறார். 'அவதூதர்' நாவலின் மூலப்பிரதி என்னவாயிற்று என்பது இன்றுவரை தெரியவில்லை.

1965ஆம் ஆண்டில் வெளியான ஒரு குறிப்பு, க.நா.சு. 'ஆங்கிலத்தில் ஒரு நாவல் எழுதிக் கொண்டிருக்கிறார்' என்று சொல்கிறது. டி.எஸ். எலியட் நூற்றாண்டை முன்னிட்டு பி. லாலின் Writers Workshop வெளியிட்ட கட்டுரைத் தொகுப்பில் க.நா.சு.வும் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில், க.நா.சு. எழுதிக்கொண்டிருந்த ஆங்கில நாவல் பற்றிய தகவல் உள்ளது. இக்குறிப்பில் சுட்டப்படுவது 'அவதூதர்' நாவலின் மூலப்பிரதியாக இருக்கக்கூடும். ('இலக்கிய வட்டம்' பத்திரிகைக்கு இணைப்பாக வெளியாகிக் கொண்டிருந்த 'நடுத்தெரு' நாவலை எழுதிமுடித்த கையோடு, அதே நாவலை வேறு கோணத்தில், ஆங்கிலத்தில் எழுதிப் பார்த்ததாக க.நா.சு. கூறுகிறார்.)

'அவதூதர்' நாவலைத் தமிழாக்கம் செய்த லதா ராமகிருஷ்ணன் க.நா.சு.வின் 'தாமஸ் வந்தார்' (1988) நாவலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். முதலில் பகுதியளவு மொழிபெயர்த்திருந்த நிலையில்,

# Ka Naa Subramanyam
# Att skriva på tamil

I Indien – vare sig man nu vill kalla det för en kontinent eller en "subkontinent" – har Södern rest allt ljudligare anspråk och krav gentemot norr. Det fanns en tid då man med indisk litteratur avsåg enbart sanskritlitteraturen; senare inkluderades även litteraturerna på bengali, hindi och urdu. Numera kan man inte tala om indisk litteratur och bortse från de sydindiska litteraturspråken, där tamil är äldst och kannada, telugu och malayalam jämförelsevis unga.

Men ännu i dag har inte Söderns inflytande på Indiens kultur i dess helhet studerats så intensivt som det borde. Söderns bidrag – i form av tankegångar, filosofi, livsformer, litteratur, konst – börjar blott sakta bli erkänt. Inte ens de olika faserna i Söderns historia är lika välkända som Nordens historia. Medan vilken skolpojke som helst vet namnet på *Ashoka*

och tamilpoeten var Subramanya Bharati, som var säker på att han om någon förtjänade priset.

Under det att sanskritlitteraturen har studerats i sitt indiska sammanhang har tamil, som kan göra lika starka anspråk på all indisk uppmärksamhet både som klassiskt och levande språk, inte alls blivit föremål för några jämförande studier. Tamilerna glömmer ofta att de själva har lika stor skuld till det som de andra. De har ännu inte kritiskt granskat sitt eget förflutna, de har ännu inte gjort klart för sig vilka höjdpunkter de nått i sin gärning och hur. Tamilerna har liksom många andra indier en fullkomligt okritisk inställning till både sitt förflutna och till sin nuvarande situation, och de är lika blöthjärtade som några partioter från Bengalen eller Maharashtra, när det gäller sådant som de är överkänsliga för eller

*Att skriva på tamil, Ka Naa Subramanyam, Bonniers (Swedish literary magazine), April 1969, pg 280*

க.நா.சு. அதனைப் பார்வையிட்டு இசைவு தெரிவித்துள்ளார். விரைவிலேயே க.நா.சு. காலமாகிவிட, மொழிபெயர்ப்பும் பூர்த்தியடையாமல் நின்றுவிட்டது. மொழிபெயர்த்த சில அத்தியாயங்களை லதா ராமகிருஷ்ணன் தன் வலைப்பூவில் (https://letgolatha.blogspot.com) வெளியிட்டிருக்கிறார். பல வருடங்களுக்குப்பின், தற்போது எஞ்சிய அத்தியாயங்களையும் மொழிபெயர்த்து நிறைவுசெய்ய முனைந்துள்ளார்.

Arnold-Heinemann பதிப்பகத்தின் நாவல் வரிசையில் 'அசுரகணம்' நாவலின் ஆங்கிலப் பதிப்பு வெளியானதா என்று தெரியவில்லை. ஆனால், தெலுங்கிலும் மலையாளத்திலும் அந்த நாவல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பி. சபாபதி, சிங்கராசாரியார் இருவரும் இணைந்து தெலுங்கில் மொழிபெயர்த்துள்ளனர். 1968ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்த மொழிபெயர்ப்பு பற்றி க.நா.சு. 'இலக்கியச் சாதனையாளர்கள்' நூலில் குறிப்பிடுகிறார். தெலுங்கு நூற்றொகைக் குறிப்பும் இந்த மொழிபெயர்ப்பு வெளியானதை உறுதிசெய்கிறது. நூலை வெளியிட்ட பதிப்பகத்தின் பெயர் தெரியவில்லை.

'அசுரகணம்' நாவலை மலையாளத்தில் மொழிபெயர்த்திருப்பவர் மா. தட்சிணாமூர்த்தி. இதனை 1977ஆம் ஆண்டு DC Books வெளியிட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்புப் பிரதி கிடைத்துள்ளது. புதிய பதிப்புக்கான முயற்சியும் நடக்கிறது.

'வாழ்ந்தவர் கெட்டால்' நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பை 1978ஆம் ஆண்டு வெளியிட்ட Indian Literature பத்திரிகை, அதற்கான எதிர்வினைகளை நான்கு ஆண்டுகள் கழித்து 1982ஆம் ஆண்டு செப்.-அக். இதழில் வெளியிட்டுள்ளது. அவற்றில் இரண்டு எதிர்வினைகள் முக்கியமானவை. கவுஹாத்தி பல்கலைக்கழகப் பேராசிரியர் ஜே.என். பருஹா எழுதியிருக்கும் கடிதத்தில், இந்நாவலை அசாமி மொழியில் வெளியிட அனுமதி கோரியுள்ளார். மற்றொரு கடிதத்தை தில்லியைச் சேர்ந்த விரிவுரையாளர் ஆனந்த் குமார் வாஜ்பாயி எழுதியுள்ளார். அவரும் இந்நாவலின் இந்தி மொழிபெயர்ப்புக்கு அனுமதி வேண்டுகிறார். இவ்விரு விருப்பங்களும் செயல்வடிவம் பெற்று, நூலாகவும் வெளிவந்தனவா என்று அறிய முடியவில்லை.

## சிறுகதை

க.நா.சு. எழுதிய சிறுகதைகள் பல இந்திய ஆங்கிலப் பத்திரிகைகளிலும் வெளிநாட்டுப் பத்திரிகைகளிலும் வெளிவந்துள்ளன. பல சந்தர்ப்பங்களில் தானே தனது தமிழ்ச் சிறுகதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அவை கணிசமான எண்ணிக்கையில் கிடைத்துள்ளன. சிலவற்றை இங்கே குறிப்பிட்டுச் சொல்லலாம்.

க.நா.சு. தொகுத்த Tamil Short Stories (1976) நூலில் The Search என்ற சிறுகதை இடம்பெறுள்ளது. 'சோதனை' என்ற சிறுகதையின் மொழிபெயர்ப்பு




*கேரளப் பல்கலைக்கழகத்தில் உள்ள 'அசுரகணம்' மலையாள மொழிபெயர்ப்பு (1977)*

இது. இந்திரா பார்த்தசாரதி இக்கதையை மொழிபெயர்த்துள்ளார்.

'ஆடரங்கு' என்ற தனது சிறுகதையை The Debut என்ற தலைப்பில் க.நா.சு.வே மொழிபெயர்த்துள்ளார். சுரேஷ் கோலி தொகுத்த Modern Indian Short Stories (1974) நூலில் இக்கதை இருக்கிறது. இதே கதையை Indian Horizons இதழும் வெளியிட்டுள்ளது. இன்னும் சில கதைகளும் Indian Horizons இதழில் பிரசுரமாகியுள்ளன.

க.நா.சு. நேரடியாக ஆங்கிலத்திலேயே எழுதிய சிறுகதை Bosanski Novi. 1972ஆம் ஆண்டு Quest பத்திரிகையில் வெளியான இக்கதை, Contemporary Indian Short Stories (1977), The Craft of Writing (1978) ஆகிய தொகுப்புகளிலும் இடம்பெற்றது. இக்கதைகள் விரைவில் நூலாக்கம் பெறவுள்ளன.

## கவிதை

நகுலன், கமில் ஸ்வலபில், ஆர். பார்த்தசாரதி, டி.எஸ். தட்சிணாமூர்த்தி, தம்பி சீனிவாசன், கே. சச்சிதானந்தன் முதலிய பலரின் மொழிபெயர்ப்பில் க.நா.சு.வின் வெவ்வெறு கவிதைகள் ஆங்கில இதழ்களிலும் தொகுப்புகளிலும் வெளியாகியுள்ளன. க.நா.சு. தானே மொழிபெயர்த்து வெளியிட்டவையும் உண்டு.

Situation என்ற கவிதையை எழுதி, அது ஒரு ஆங்கிலப் பத்திரிகையிலும் வெளியாகி பாராட்டும் பெற்றது என்று க.நா.சு. ஒரு கட்டுரையில் குறிப்பிடுகிறார். கவிதை எழுதுவது குறித்த தன் தந்தையின் எச்சரிக்கை காரணமாக, தொடர்ந்து எழுதுவதை நிறுத்திவிட்டதாகவும் சொல்கிறார். இக்கவிதை மிகப் பிரபலமாகி பல தொகுப்புநூல்களில் இடம்பெற்றுள்ளது. குறிப்பாக, வினய் தர்வாட்கரும் ஏ.கே. ராமானுஜனும் இணைந்து தொகுத்த The Oxford Anthology of Modern Indian Poetry (1994) தொகுப்பிலும் இக்கவிதை சேர்க்கப்பட்டுள்ளது.

'பாதை நீ' என்ற கவிதை க.நா.சு. மறைவையொட்டி வெளியான Indian Literature இதழில் நகுலன் மொழிபெயர்ப்பில் வெளியானது. 1994ஆம் ஆண்டில் Indian Literature மே-ஜூன் இதழில் க.நா.சு. நினைவாக அவரது சில கவிதைகள் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளன. 'ஏற்றமும் இறக்கமும்', 'அனுபவம்', 'பயணம்', 'நீதிக்கிளி', 'அலிகள்', 'தேவடியாள்', 'கடிதம்', 'முச்சங்கம்', 'காலம் தாழ்ந்தபின் வந்தவன்' முதலிய கவிதைகள் ஆங்கில மொழிபெயர்ப்பில் வெளியாகியுள்ளன.

தற்போது, மொழிபெயர்ப்பாளர் லதா ராமகிருஷ்ணன் க.நா.சு.வின் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வருகிறார். தேர்ந்தெடுத்த கவிதைகளின் தொகுப்பொன்றை வெளியிடும் திட்டமும் இருப்பதாகச் சொல்கிறார்.

**க.**நா.சு. எழுத்துகளுக்குத் தமிழிலேயே நேர்த்தியான பதிப்புகள் இல்லாத காரணத்தால் அவரது பங்களிப்புகள் இன்னும் சரிவர புரிந்துகொள்ளப்படவில்லை. குறிப்பாக, க.நா.சு.வின் சிறுகதைகள், கவிதைகள் குறித்து இப்போது நிலவும் மதிப்பீடுகள் மறுபரிசீலனைக்குரியவை. அத்துடன், ஓர் இருமொழி எழுத்தாளராக க.நா.சு.வின் ஆங்கில எழுத்துகளும் கவனம்பெற வேண்டும். க.நா.சு. வாழ்ந்த காலத்திலேயே அவரது புனைவெழுத்துகளுக்கு நல்ல மொழிபெயர்ப்புகள் வெளியாகியிருந்தால், தமிழ் இலக்கிய சாதனைகளும் சரியான வகையில் கவனிக்கப்படும் வாய்ப்பு அப்போதே உருவாகியிருக்கும். இருந்தாலும், இப்போது அதற்கான முயற்சிகள் நடந்துவருவது மகிழ்ச்சிக்குரியது.

க.நா.சு. சொல்வதைப்போல நம்பிக்கைகளும் அதிசயங்களும் பிரிக்க முடியாதவை. நம்பிக்கையுடன் செயல்புரிந்தால் அதிசயங்கள் நிகழலாம். ●

*mail to:* **sharetosrini@gmail.com**

# மழை பொழிந்து..

பறவைகளின் இறக்கைகள் குஞ்சுகளுக்குப் பாதுகாப்பானவை என்று சித்தப்பா ஒரு முறை அவளிடம் சொன்னார். அப்போது மழை லேசாகத் தூறிக் கொண்டிருந்த நேரம். தாழைக்கோழிப் பறவை ஒன்று தன் குஞ்சுகளுடன், கொஞ்சம் பரவியிருந்த நீர் ஓரத்தில் தரையில் நடந்து சென்று, சுவர் அருகில் ஒதுங்கிக்கொண்டது. அது தாழைக்கோழி என்று மெல்ல முணுமுணுத்துச் சொன்னாள் அம்மா. அந்தப் பெயரை அப்போதுதான் துளசி கேட்டிருந்தாள்.

● சுப்ரபாரதிமணியன்

ஜன்னல் ஆடி அசைந்து மார்பில் அடித்துக்கொண்டது. அப்படி அடித்துக்கொள்ளும்படி அதற்கு என்ன ஆனது என்று தெரியவில்லை. ஆனால், மழை வரப்போகிறது, அந்த மழை அந்த ஜன்னலை இன்னும் கொஞ்சம் அசைத்துப் பார்க்கும். அந்த பயத்தில் தான் அந்த ஜன்னல் அப்படி மார்பில் அடித்துக்கொள்கிறது. காற்று அதிகமானால் கதவும் அப்படித்தான் அடித்துக்கொள்ளும். அப்படி அடித்துக்கொள்ளாமல் ஜாக்கிரதையாக முன்னதாகவே தாழ்ப்பாள் போட்டு விட வேண்டும்.

துளசிக்கு சீக்கிரம் மழை வந்துவிடும் என்று தோன்றியது. ஜன்னல் செய்கிற களேபரங்கள் தவிர கதவும் தன் பாட்டுக்கு எதையோ சொல்லிக் கொண்டிருந்தது. வெளியில் இருந்து காசிமேடு வருகிற ஈரக்காற்று மழை பற்றி சொல்லிக் கொண்டிருந்தது. ஆனால், இன்றைக்கு ஜெமிலைத் தேடி கொஞ்ச தூரம் போக வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. வேறு வழியில்லை. தினந்தோறும் கொஞ்ச தூரம் போனால் ஏதாவது செய்தி கிடைக்கலாம். ஜெமில் எங்கே போய் விழுந்திருக்கும் என்று தெரியவில்லை. ஆனால், விசாரித்து அது எங்கே இருக்கிறது என்று தெரிந்துகொள்ள முயற்சி செய்யலாம்.



துளசிக்கு துணையாகத் தான் ஓர் ஆண்டாக ஜெமிலி இருந்தது. அது இப்போது காணாமல் போய்விட்டது. காணாமல் போய்விட்டது என்றால் யாரோ கடத்திக்கொண்டு போய்விட்டார்கள். ஒன்றரை வயது நாய் ஜெமிலி வீட்டுக்கு யார் வந்தாலும் குரைக்கும். இரவுகளில் அந்த பக்கம் யாராவது நடமாடிக் கொண்டிருந்தால் குலைக்கும். தனக்கு பாதுகாப்பாக அது இருப்பதாக அவள் சொல்லிக்கொள்வாள். ஆனால், அதற்கு பாதுகாப்பு இல்லை என்பது போல் ஜெமிலி காணாமல் போய்விட்டது. பக்கத்து வீதிகளில் முகமூடி கொள்ளையர்கள் நடமாட்டம் என்று தொலைக்காட்சிகள் காண்பித்தன. ஆளில்லா வீடுகளில் திருடர்கள் புகுந்துகொள்கிறார்கள் என்று செய்தித்தாள்களும் சொல்லின. இவை எல்லாம் நடந்து கொண்டிருந்தபோது தனியாக இருந்த தனக்கும் ஏதாவது கெட்டதாக நடக்கும் என்று அவள் உறுதியாக நம்பினாள். நல்லது நடக்காது, கெட்டதாகத் தான் நடக்கும் என்று அவள் மிகவும் நம்பினாள். ஆனால், அப்படி எதுவும் நடந்துவிடக்கூடாது என்றும் நினைத்தாள். இப்போதைக்கு இரவு நேரம் தான். மக்கள் நடமாடக் கூடிய அளவு வெளிச்சம். கொஞ்சம் நடமாடி அவளின் ஜெமிலியை கண்டுபிடிக்க வேண்டும் என்று தோன்றியது. தேடினால் ஜெமிலி பற்றி ஏதாவது தகவல் கிடைக்கும்.

நேசம் வைத்தால் எதுவும் கைவிட்டுப் போகாது என்று அம்மா சொல்லியிருக்கிறாள். ஜெமிலியிடம் நேசம் இருந்தது. நாய் தானே என்பதில் கொஞ்சம் அசூசை இருந்தது. அதுதான் துரத்தி விட்டதா. ராகவனிடம் அன்பும் இருந்தது. அவனும் விலகிப் போய்விட்டான். அவன் நேசிக்க வேறு சிலர் இருந்திருப்பார்கள் என்று நம்பினாள். எல்லாம் நம்பிக்கைதான். அவை பொய்யாகக்கூட இருக்கலாம்

அம்மா உனக்கு இதுதான் துணையாக இருக்கப் போகிறது என்று சாவதற்கு முன்னால் சொன்னாள். ஒரு நாய் தனக்கு எப்படி துணையாகும் என்று அவள் கேட்டு வைத்தாள். பல சமயங்கள் அப்படித்தான் துணை அமைந்து விடுகிறது என்று சொன்னாள்.

அம்மாவுக்கு அப்பா ஒரு சரியானத் துணையாக இல்லாமல் போய்விட்டார். அதனால் அம்மா தனியாகத்தான் ஜீவனம் செய்து கொண்டிருந்தாள். அந்த ஜீவனத்தில் அவளையும் தங்கையையும் வளர்த்தாள். பொதுவாகவே அவளை பார்க்கிற பலர், 'அன்லக்கி சிஸ்டர்ஸ்' என்று சொல்வார்கள். காரணம் தங்கை கொஞ்சம் நிறமாக, அழகாக இருப்பாள். துளசி அவ்வளவு அழகானவள் அல்ல. ஆனாலும் எடுப்பான முகம். அவளை திரும்ப பார்த்துச் செல்லச் செய்யும். தங்கைக்கு கொஞ்சம் அவசரம். காதல் செய்கிறேன் என்று வீட்டை விட்டுப் போய்விட்டாள். கல்யாணம் செய்துவிட்டாள். வீட்டை விட்டு போனது அம்மாவுக்கு பலவீனம் ஆகிவிட்டது. அந்த கவலையிலேயே செத்துப் போய்விட்டாள்.

"உனக்கு ஒரு வீடு இருக்கிறது. சொந்த வீடு. உன்னை நம்பி ஒருவன் வருவான். இந்த வீட்டுக்காக வேண்டி. இந்த வீட்டின் சொத்து மதிப்பு இப்போது சில லட்சங்கள் ஆகும். அந்த லட்சங்களுக்காக யாராவது உன்னை தேடி வருவார்கள்" என்று அம்மா சொல்லி இருந்தாள்.

"உனக்கு ஒரு வேலை இருக்கிறது. தனியார் வேலை என்றாலும் போதும். அது போதும் நீ பாதுகாப்பாக வாழ்ந்துகொள்ளலாம். ஒரு கணவர் வருகிற வரைக்கும் உனக்கு ஜெமிலி பாதுகாப்பாக இருக்கும்" என்று அம்மா சொல்லியிருந்தாள். அதை நிஜமாக்கி போய்விட்டது. இரவுகளில் குரைத்து தெரு வழிகளில் பிறர் நடமாட்டத்தை சொல்லிக் கொண்டிருந்தது.

உறவினர்கள் வந்து போவார்கள். அம்மாவுக்கு பிறகு என்ன செய்வது என்பதை அவளே முடிவு செய்துகொள்ள சொல்லிவிட்டார்கள்.

ஜெமிலின் குரைப்பு இப்போது இரண்டு நாட்களாய் இல்லாமல் போய்விட்டது. யாரிடம் போய் சொல்வது என்று தெரியவில்லை. காவல்துறையிடம் பொய் சொன்னால் அவர்கள் சிரிப்பார்களா அல்லது அக்கறையோடு எடுத்துக்கொள்வார்களா. உனக்கு யாரும் துணை இல்லையா என்று கேட்பார்களா? ஜெமிலி இருந்தால் நன்றாகத் தான் இருக்கும் பாதுகாப்பாக இருக்கும் என்று நினைத்தாள்.

அவள் தாத்தா வீட்டுக்குச் சமீபத்தில் போயிருந்தபோது அம்மா இருந்த அறையை கூர்ந்து பார்த்தாள். அங்கே ஒரு பழைய கட்டில் இருந்தது. அதில் படுத்துகொண்டு பார்த்தாள். அதில் படுக்கிற அனுபவம் பாதுகாப்பாக இருப்பதாகத் தோன்றியது. தாத்தா இன்னொரு கட்டிலில் கட்டில் கம்பி போல இளைத்துக் கிடந்தார் அவரால் எழுந்து கூட பேச இயலவில்லை. அவருடைய வயது அப்படி. அது குறித்து துளசிக்கு எந்த வருத்தமும் இல்லை. ஆனால், நமக்கு பாதுகாப்பு அளிக்க ஒரு பழைய கட்டில் இருந்தது என்பது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

செத்துப் போனவர்களை பக்கமாய் இருந்து பார்த்ததில்லை, அவள் அம்மாவை தவிர. அம்மா சாகுற போது பக்கத்தில் இருந்தாள். அதைத் தவிர வேறு எவரையும் அவள் பக்கம் இருந்து பார்த்ததில்லை. தாத்தா இறக்கிறபோது அப்படி பக்கத்தில் இருந்து பார்க்கிற வாய்ப்பு கிடைக்காது. ஏனென்றால் வெவ்வேறு ஊர்கள். வெவ்வேறு கட்டில்கள். வெகு தூரம்தான்.

இந்த உலகத்தில் எல்லோரும் கெட்டவர்களாக இருப்பார்களா என்று யோசித்து பார்த்திருக்கிறாள். அப்படி எல்லோரும் கெட்டவர்களாக இருக்க வாய்ப்பில்லை என்று தான் அவள் நினைத்திருந்தாள். நடக்கிறதைப் பார்த்தால் எல்லாம் கெட்டவர்கள் தான் என்று சொல்லிக் கொண்டிருந்தது. ராகவன் அப்படித்தான் கெட்டவனாகிக் கொண்டிருந்தான். சீக்கிரம் அப்படி ஒரு முத்திரை அவன் மீது விழும் என்று அவளும் சொல்லிக் கொண்டிருந்தாள். ரொம்பவும் நெருக்கமாக இருந்தவன்தான். இடுப்பு எலும்பு போல் தேவையாக இருந்தவன்.

அவள் மெல்ல வடக்கு தெரு நோக்கி செல்ல ஆரம்பித்தாள். அவளுக்கு கால் வலி தோன்றுவதாகத் தோன்றியது. நின்று கை கால்களை நீட்டி மடக்கிக் கொண்டாள். குனிந்து நிமிர்ந்து உடம்பைத் தளர்த்திக்கொண்டாள். தெரு விளக்குகள் சாதாரணமாக மின்னிக் கொண்டிருந்தன. இன்னும் கொஞ்ச நேரத்தில் இருட்டு முழுமையாக ஆக்கிரமித்து விடும். அப்போது இந்த விளக்குகளின் பிரகாசம் சரியாகத் தெரியும். இப்போதைக்கு வீதியில் நடமாடுபவர்களை அடையாளம் காட்டுகிற விளக்காக இருந்தது.

நகரின் ஒதுக்குப்புறத்தில் தான் இருந்தது அவள் வசிக்கிற இடம். அவள் வீடு 40க்கு 20 என்ற இடத்தில் பாதியாக கட்டப்பட்டது. மீதி இருந்த இடத்தில் கொஞ்சம் செடிகளும் புல்லும் புதராக முளைத்து விட்டது. அவற்றை ஒழுங்குபடுத்த அவளுக்கு நேரமில்லாமல் போய்விட்டது. பாம்பு கூட நடமாடும். ஜெமிலி இருந்தால் அது நடமாட்டத்தை அடையாளம் கண்டு ஏதோ ஒரு வகையில் சொல்லிவிடும்.

இப்படி நடந்து நான் தனியாக இருந்து தொலைந்து போவேனா என்ற பயம் மெல்ல கம்பளிப்பூச்சி ஊர்வது போல் வந்தது. ஜெமிலி காணாமல் போனது போல் காணாமல் போவேனா. அவள் அலுவலகத்திற்குப் போகிற போதுகேட்டை சரியாகச் சாத்திவிட்டுப் போவாள். இரவில் தன் அறையில் ஜெமிலியை வைத்துக்கொள்ளத் தோன்றியிருக்கிறது. சில சமயம் படுக்கையில் தன்னுடன் போட்டுத் தூங்கியுமிருக்கிறாள். வெதுவெதுப்பாகத்தான் இருந்திருக்கிறது. சட்டெனத் தூக்கம் கலைகிற போது அருவருப்பானது போல் அதைக் கட்டிலை விட்டு தள்ளி விட்டிருக்கிறாள். இரவில் அவள் அறையில் நடமாட விடுவதில் சில சமயம் சில சிரமங்களை உணர்ந்திருக்கிறாள். அது சிறுநீர் கழிப்பது, மலம் கழிப்பது, அதை பின்னர் சுத்தம் செய்வது அவளுக்குச் சிரமமாகவே



இருந்திருக்கிறது. அதன் பொருட்டே ஜெமிலியை வீட்டிற்கு வெளியே பாதுகாப்பாக்கியிருந்தாள். பாதுகாப்பு செய்தது பலனில்லாமல் போய்விட்டது.

வெளியில் நடமாடுவது கூட கொஞ்சம் அபாயகரமானது என்று அவளுக்கு தோன்றியது. இருட்டு கூட அபாயம். இருட்டைப் பார்த்து அவள் பயப்பட ஆரம்பித்திருந்தாள்.

அவள் நடக்க ஆரம்பித்தபோது சிவன் கோவில் தெற்கு தெரு பக்க பேருந்து நிறுத்தம் அருகில் இருந்த அந்த மனிதர் அணிந்திருந்த சட்டை அவள் வீட்டிலிருந்த சட்டையைப் போல் இருந்தது. அவள் ஏதோ பலவீனமான ஒரு தருணத்தில் இரண்டு மூன்று சட்டைகளை வாங்கி போட்டாள். அதை அவ்வப்போது அணிந்துகொள்வாள். அம்மா அதற்கு எதிராகத்தான் இருந்தாள். இதெல்லாம் எதற்கு என்று எரிச்சலோடு தான் கத்துவாள். பெண்கள் சட்டை என்பது ஆண்கள் சட்டையில் இருந்து மாறுபட்டது என்பது அம்மாக்கு தெரியாமல் இருந்தது. கட்டட வேலைக்கு போகிற பெண்கள் கணவன்மார்களின் பழைய சட்டையை போட்டுக்கொள்வது போல இந்த சட்டைகள் என்று தான் அம்மா நினைத்து இருந்தாள். அது ஆண்களுக்கான சட்டை இல்லை, பெண்களுக்கான சட்டை. பெண்களுக்கான சட்டை என்பதால் அது எப்படி வித்தியாசமானது என்று கூட ஓரிரு விஷயங்களை சொல்லி பார்த்தாள். அம்மாவுக்கு அது பிடிக்கவில்லை. ஆனாலும் எடுத்துவிட்டோம் என்று பயன்படுத்தினாள். சில சமயம் இரவுகளில் தூங்கப்போகையில் அவற்றை போட்டுக்கொள்வாள். உடம்பைப்போர்த்திக்கொள்ளும் போர்வை போல் அது பாதுகாப்பாக சில சமயங்களில் இருந்திருக்கிறது

அவளைக் கடந்து போய்க் கொண்டிருந்த அந்த இளைஞன் போட்டிருந்த சட்டை அவள் அணிகிற சட்டை போலிருந்தது. அவள் அணிகிற சட்டை எப்படி அந்த இளைஞனுக்கு கிடைத்திருக்கும். அதே சட்டை தானா அல்லது அதே நிறத்தில் வேறு சட்டையா. இது பெண்கள் சட்டையா ஆண்கள் சட்டையா. அவன் தன்னைக் கடந்து போய்விட்ட பின்னாலும் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

துளசி வேலை செய்யும் பின்னலாடை தொழிற்சாலையில் இப்போதெல்லாம் இந்த வகைச் சட்டைகளைத் தான் அதிகமாகத் தயார் செய்கிறார்கள். ஆண்களுக்கும் பெண்களுக்குமான பொதுவான சட்டை வந்துவிட்டதாக தோன்றியது. ஆண்கள், பெண்கள் இருவருக்குமான தனித்தனி உடைகள் என்று இல்லாமல் ஒரே மாதிரியான உடையை போட்டுக்கொள்வது இப்போது பேசன் என்று அவள் அலுவலகத்திற்கு வந்து போகும் சிலரின் பேச்சுகள் மூலம் அறிந்திருந்தாள். அப்படி ஏதாவது இருக்குமா. அவன் பொதுவான சட்டையை விரும்புகிற இளைஞனாக இருப்பானா. அவளுக்குக் குழப்பமாகத்தான் இருந்தது.

ஆண், பெண் பொதுவான உடைகள் போல் பல விசயங்களில் இருக்கலாம். முதலில் தலையில் இருந்து ஆரம்பிக்கலாம் என்று ஒரு முறை அவள் நிறுவன மேலாளர் சொன்னார். அதன் பின் அவள் அலுவலகத்தில் இருந்த இளம் பெண்கள் ஜடைகளைத் துறந்துவிட்டு முடியைக் குறைத்துக்கொண்டார்கள். அவளும் ஜடையைக் குறைக்க வேண்டியானது. கழுத்தில் புரள்கிற மாதிரி கேசத்தைத் துண்டித்துக் கொண்டாள். நல்ல வேளை அம்மா இல்லாத காலம். அம்மா இருந்திருந்தாள் அதற்காக வருத்தப்பட்டிருப்பாள். அழுதும் இருப்பாள்.



இரண்டு தினம் முன்னாள் அவள் அலுவலகத்தை விட்டு வெளியே செல்வதற்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. வெளியே அலுவலக நேரத்தில் செல்லும் வாய்ப்பு அபூர்வமாகத்தான் வாய்க்கும். ஒரு சர்வதேச பின்னலாடை கண்காட்சி நடைபெற்றது. அதில் சில அரங்குகளில் வெவ்வேறு வகைத் துணிகள் பார்வைக்கு இருந்தன. பின்னால் பேஷன் பேரேடு என்று ஒன்று இருக்கும். அதற்கான உடைகள் இரண்டை கொண்டு போய் கொடுக்க சொன்னார்கள். அந்த உடையை அணிந்து நடமாட ஒரு மாணவர், நகரத்தில் பேஷன் டெக்னாலஜி படிக்கிறவர், நியமிக்கப்பட்டிருந்தார். பேஷன் டெக்னாலஜி சார்ந்த கல்லூரி ஒன்றில் படிக்கிற மாணவர்கள் அந்த பேஷன் பேரேடு நடத்தினார்கள். அதில் ஒருவருக்கான உடையைத் தர வேண்டியிருந்தது. தர சொல்லி மேலாளர் தகவல் சொல்ல அவள் போக வேண்டியானது.

கருத்தரங்கம் நடந்த குளிரூட்டப்பட்ட பெரிய அரங்கத்தில் அந்த நேரக் குளிரில் அவள் உடம்பை நடுங்குவதாக உணர்ந்தாள். கொஞ்ச நேரத்தில் எல்லாம் சரியாகிவிடும் என்று உட்கார்ந்திருந்தாள்.

கருத்தரங்க உரைகளெல்லாம் முடிந்த பின்னால்தான் பேசன் பேரட் இருக்கும். இரண்டு மூன்று அமர்வுகள். எல்லாவற்றிலும் மனிதன் மூலமாக தயாரிக்கப்படும் பைபர்களும் அவை சார்ந்த துணிகள் சார்ந்த உற்பத்தியும் பற்றியப் பேச்சிருந்தது. பருத்தி என்பது பேச்சு வழக்கில் கூட இல்லாமல் போய்விட்டது. இனி எல்லாமே பைபர் தான். செயற்கை இழை நூல்களில் இருந்து தயாரிக்கப்படும் துணிகள் தான். அந்த துணிகள் இனி வரும் காலங்களில் ஆட்சி பண்ணும். அதில் என்ன வகையானவை உள்ளன அது எப்படி எல்லாம் தயாரிக்கப்படுகின்றன என்பதை பற்றியெல்லாம் சொன்னார்கள். எல்லாம் ஆங்கிலத்தில் இருந்தன. புரிந்துகொள்கிற ஆங்கிலம் தான். பேசியவர்கள் எல்லாம் வடநாட்டுக்காரர்கள். உள்ளூர்காரர்கள் ஐந்து சதவீதம் கூட இல்லை. மொத்தமே நூறு பேர் இருந்திருப்பார்கள். அந்த பெரிய அரங்கில் ஐந்து பேர் தான் தமிழ் முகங்களாக இருந்தார்கள். எண்ணியும் பார்த்து விட்டாள். மற்றபடி எல்லாரும் வடநாட்டு முகங்கள்.

உள்ளூரில் வடநாட்டு தொழிலாளர்கள் அதிகமாகி விட்டார்கள். எங்கு போனாலும் அவர்கள் தென்படுகிறார்கள். சுலபமான கூலிக்கு வந்து விடுகிறார்கள் என்பதால் அவர்களை அதிகம் காண முடிந்தது. பேருந்தில் போனாலும் மார்க்கெட்டுக்கு போனாலும் அப்படித்தான். நகரமே வடநாட்டுக்காரர்கள் ஆக்கிரமிப்பில் வந்துவிட்டதாக பல விஷயங்கள் சொல்லிக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு மளிகைக் கடையிலும் கடைக்காரரின் ஒவ்வொரு வகையான இந்தி உச்சரிப்பு இருந்தது. வெவ்வேறு வகையான உச்சரிப்பில் அவர்கள் தங்கள் வாடிக்கையாளர்களுடன் பேசிக்கொண்டார்கள். வியாபாரம் செய்துகொண்டார்கள். எல்லோரும் இந்தியில்தான் பேசினார்கள். இந்த கருத்தரங்கில் எல்லோரும் அவர்கள்தான். ஆனால், விஷயம் பொதுவானதுதான் வடநாட்டுக்காரர்களுக்கான விஷயம் அல்ல. வியாபாரம் ஒரு லட்சம் கோடி அந்நிய செலவாணி என்பதுதான் அதனுடைய அதிகபட்சமான எல்லையாக இருந்தது.

அவள் கையில் கொண்டு வந்திருந்த உடைகளை வாங்கிக்கொண்ட பெண்மணி கூட வடநாட்டுக்காரியாகத் தான் இருந்தார். அவரைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருந்தது. அவளுக்குத் தரப்பட்ட கைபேசி எண் எல்லைக்கு அப்பால் இருப்பதாகச் சொன்னது. மேலாளருக்கு கைபேசி அழைப்பு விடுத்த போது, "அங்குதான் இருப்பார்; அவசரப்பட வேண்டாம்" என்றாள். கலவரமாகிவிட்டது. திரும்பத் திருமப் அழைத்துக் கொண்டிருந்தாள்.

மேடையில் பேசிக்கொண்டிருந்தவர் விளையாட்டு ஆடை உற்பத்தி பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தார். திரையில் விளையாட்டு ஆடைகளைப் பல விதங்களில்

அணிந்து பலர் கடற்கரையில் நடந்து கொண்டிருந்தார்கள். அது சென்னைக் கடற்கரை அல்ல, வடநாட்டுக் கடற்கரை.

இன்று உடுத்தியிருக்கும் தன் ஆடை எந்த வகையானது என்று யோசித்துப் பார்த்தாள். நிச்சயம் பருத்தியாக இருக்க முடியாது. பருத்தி இந்தப் பகுதியில் விளைந்த காலம் போய்விட்டது. நெசவில் கூட செயற்கை இழைகள் வந்துவிட்டதாகச் சொன்னார்கள். அவை பம்பர், கோரா என்றார்கள். கோரா சேலை ஒன்றை சமீபத்தில் அவள் வாங்கினாள். அதனால் பம்பர், கோரா பெயர்கள் மனதில் இருந்தது. அவளிடமிருந்த அந்த சேலை விசைத்தறி நெசவில் மிளிர்ந்தது. விலை குறைவாகவும் இருந்தது.

சம்பந்தப்பட்டவரைக் காண முடியாமல் போனால் என்னவாகும். பேசன் பேரேடு நின்று விடுமா. அவளை எப்படி தேடுவார்கள். மேலாளரிடம் தகவல் போய் தகராறாக அமைந்து விடுமா. அந்தக் குளிரூட்டப்பட்ட அரங்கிலும் சட்டென முகம் வியர்க்க ஆரம்பித்தது. பதட்டம் தொடர்ந்தது. மேடைப்பக்கம் இருந்து வந்த ஓர் இளம் பெண் கைபேசியில் எண்களைத் தட்டியபடி வந்தாள். அது தன் கைபேசியை அடைந்தது ஆறுதலாக இருந்தது.

அவள் பெயரை சரியாக கூட உச்சரிக்க தொடர்ச்சியாக முடியவில்லை. ஆனால், அவளாக வந்து அறிமுகப்படுத்திக் கொண்டு துணிப்பையை வாங்கிச் சென்றுவிட்டாள். அவளுக்கு பின்னால் சென்ற சில கல்லூரி மாணவர், மாணவிகள் அந்த பேசன் பேரடில் கலந்துகொள்பவர்களாக இருக்க வேண்டும். எல்லோரும் விதவிதமான தலைக்கேச அலங்காரங்களுடன் வினோதமாக இருக்கும்படி பார்த்துக்கொண்டார்கள். உடைகளில் கூட அந்த வினோதம் இருந்தது. இனிவரும் பேசன் பேரேடில் கூட அந்த வினோதம் இருக்கும்.

அதை பார்ப்பதற்காக அவள் உட்கார்ந்து இருந்தாள். கொஞ்ச நேரத்தில் குளிர் அதிகமாகவே வெளியே வந்தாள். அந்த அரங்கின் முகப்பில் கொஞ்சம் நேரம் நின்று கொண்டிருந்துவிட்டு வீட்டிற்கு கிளம்பினாள்.

பன்னாட்டுக் கண்காட்சி நடக்கும் இடத்துக்குள் செல்ல அவள் விரும்பவில்லை. போனால் அடையாள அட்டை கேட்பார்கள். விசிட்டிங் கார்டு கேட்பார்கள். ஏதாவது படிவம் கொடுத்து பூர்த்தி செய்யச் சொல்வார்கள். கழுத்தில் மாட்டிக்கொள்ள அட்டை தருவார்கள். உள்ளே போய்விட்டு வெளியேறும் போது அதை ஏதாவது பெட்டிக்குள் போடச் சொல்வார்கள். அந்த வகையான ஏதோ பெட்டி அவள் கண்களில் தென்பட்டது.

இன்னொரு மூலையில் சில பைபர் சிலைகள் தென்பட்டன. ஒன்று நிர்வாணமாக இருந்தது. அது ஆணா பெண்ணா. மர்ம உறுப்பை ஏனோ அவள் கண்கள் தேடின. ஆனால், அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. உடைகள் ஆணிற்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரியாகிவிட்டது போல இந்த நிர்வாண சிலைகளும் கூட. உலகமே பொதுவானதுதான் என்று சொல்லிக்கொண்டாள்.

சிலைகளின் பார்வையிலிருந்து தப்புவதற்காக நடக்க ஆரம்பித்தாள்.

**ஜெ**மிலியைத் தேடி அந்த இரவில் இரண்டு மூன்று வீதிகளில் திரிந்தாள். இன்றைக்கு இது போதும். வீதி விளக்குகள் சோம்பலாக அழுது கொண்டிருந்தன. மனிதர்கள் அவசரமான நடவடிக்கைகளில் இருந்தார்கள். அவள் தனியாக செல்வதை பார்த்த சிலர் ஆச்சரியத்துடன் திரும்பத் திரும்ப பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்படி அவசரமாக ஓடிக் கொண்டிருப்பவர்களின் சட்டையை பிடித்துக்கொண்டு என் ஜெமிலி எங்கே என்று தெரியுமா என்று கேட்கவா முடியும்? இரண்டு மூன்று வீதிகள் சென்றபோது அந்த வீதியில் சமீபத்தில் சாலை ஒழுங்கமைக்கப்பட்டு இருந்தது. நடந்து செல்வதற்கான சரியான வீதிகள் என்று கண்டுகொண்டாள். கொஞ்சம் இப்படி நடக்கலாம் தான். ஆனால், யாராவது பின்தொடர்ந்து வந்து ஏதாவது கேள்வி கேட்கலாம். அவளிடம் ஜெமிலி பற்றி கேட்க கேள்வி இருந்தது. அதை மற்றவர்களிடம் கேட்க முடியுமா என்று தெரியவில்லை.

இப்போது தூறல் மெல்ல பரவ ஆரம்பித்தது. இந்த தூறலை தவிர்ப்பதற்காக வீட்டிற்கு போய் சேர வேண்டும் என்று நடையை விரைசலாக்கினாள். வீட்டுக்கு வந்த போது முன்பக்க ஜன்னல் இன்னும் தாறுமாறாக ஆடி மார்பில் அடித்துகொண்டது. அது போல் மார்பில் அடித்துக்கொண்டு அழுது சில சமயம் பாரம் குறைக்கலாம் என்று தோன்றும் அவளுக்கு. அதை சரியாக மூடிவிட்டால் போதும் இப்போதைக்கு பயம் சென்றுவிடும். அவள் கதவை திறக்க சட்டெனக் கொட்டிய மழையில் நனைந்து விட்டாள். அவள் கண்களில் இருந்து வழிந்த கண்ணீர் அந்த மழையோடு கரைந்து போகும் என்பது அவளின் நம்பிக்கையாக இருந்தது.

நேற்று பேசன் பேரேடுக்காக ஆடைகளைக் கொண்டு போய் கொடுக்கப் போன போது பதட்டத்துடன் இருந்தது ஞாபகம் வந்தது. அது போல் இப்போதும் பதட்டம் வந்தது. இப்படி ஏதாவது விசயம் பதட்டத்திற்கென்று வந்துவிடுகிறது அவளுக்கு. தினந்தோறும் ஏதாவது பதட்டம். இப்போதைக்கு ஜெமிலி குறித்த பதட்டம்.

அந்த இரவு பாதுகாப்பாக இருக்கும் என்று அவளுக்கு தோன்றவில்லை. ஆனால், ஜெமிலி இருந்தால் அது தனக்கு பாதுகாப்பாக இருக்கும் என்று மட்டும் அவளுக்கு அப்போதைக்குத் தோன்றியது.

*mail to:* **subrabharathi@gmail.com**



# கி. சரஸ்வதி கவிதைகள்

## 1.

மென்மையாகப்
பேரழகாகப்
பளிச்சென்று
பூத்திருக்கிறது அழகு மலர்

நீங்கள் தான் அரளி என்று
பெயரிட்டுத் திடுக்கிடுறீர்கள்

## 2

காற்றைச் சாக்கு வைத்து
கிளை பிரிந்து
உயரப் பறந்து மெத்தென்று
இறங்குகிறது பழுப்பிலை

பறவைகளுடனான சகவாச
தோஷம்

## 3. வேற்று மொழிதல்

நன்னாட்களுக்கு முதல் வாழ்த்து
எப்படியிருக்கிறாய் எனும்
சர்க்கரைக் கேள்வி
சாதனைகளுக்கெல்லாம்
பூங்கொத்துக் குறுஞ்செய்திகள்

தலைவலிக்கு அக்கறை வினா
சூரியனை முந்தி வரும் காலை வணக்கம்

காதலைத் தவிர எல்லாம் சொல்கிறாய் நீ
எல்லாமே காதல் மட்டும்
எனக் கொள்கிறேன் நான்

## 4.

உன்னருகில் இருக்கும்போது
புன்னகை மாறாமல் இருக்கிறேன்
வெட்கப்படாமல் வெட்கப்படுகிறேன்
என்னை உணர்ந்துகொள்கிறேன்
காதலை அறிந்துகொள்கிறேன்

இவையெல்லாம் கிடக்கட்டும்
எதற்கு உன்னை
இவ்வளவு பிடித்திருக்கிறது தெரியுமா?

நீ என்னைச் சிறுமியென்றே
எண்ணிக் கொள்கிறாயே
அதற்காகத்தான்

## 5. மொழிதல்

மனம் நிறையப் பெரும்பாரத்தைச்
சுமந்தபடியே
ஒரு சிரிக்கும் முகத்தை அனுப்ப முடிகிறது

குதூகலத்தை  மறைத்துக்கொண்டு
சோகமயமாய்க் காட்டிக் கொள்ள
உதவுகிறது

வார்த்தைகள் அற்றுப் போகயில்
உதவிக்கு ஓடோடி வருகின்றன

இதயம் என்றால் சிவப்பு மட்டும்
என்பதை மாற்றி வண்ணங்களை
வாரி வழங்குகின்றன

அதிவேக உலகில்
மொழியற்றவர்களாய்த் திரியும் சுதந்திரம்
தந்திருக்கின்றன

எல்லாவற்றிற்கும் மேலாக
முகமூடிகளின் தேவையைத்
தெளிவாய்ப் புரியச் செய்த
எமோஜிக்களை
நான் நேசிக்கிறேன்



## 6.

இதயக் குறியீட்டிற்குப் பதிலாகக்
கோபமுகம் ஏன் என்கிறார் நண்பர்

நகைச்சுவைப் பதிவிற்கு வருத்தம் தெரிவித்த
காரணம் கேட்கிறாள் தோழி

வெறும் லைக்குகள் எல்லாம்
அக்கறைக் குறியீடுகளாக மாறிய
வித்தையை நானே காண நேர்ந்தது

வியப்பைத் தெரிவிக்க நினைக்கையில்
முண்டியடித்து
முன்வந்து நிற்கிறது சிவப்பு இதயம்

அவைபாட்டுக்கு இருந்த
எமோஜிக்கள் எல்லாம்
மனிதனின் விரல்பழகியதில் தந்திரம்
கற்றுத் தேர்ந்திருக்கின்றன

இனி எதை அனுப்பினாலும்
வார்த்தையிலும் சொல்லிவிடுங்கள்
மொழிக்கு கபடுசூது கிடையாது

## 7.

பாலைவனத்திற்குத்
தனித்திருந்து பழக்கம் தான்
செடிகள் முளைப்பது தான்
சற்று வித்தியாசமானது

## 8.

ரகசியமில்லாப் பெருவெளியில்
வசந்தமும் கடுங்கோடையும்
ஒன்றேயென்பதாக
எல்லையற்ற தனிமையைத்
தரிசித்தபடித் துளிர்ப்பை
எண்ணி உயிர்த்திருக்கிறது
அந்தப் பாலைவனம்

அவ்வப்போது கடந்து செல்லும்
உயிரினங்களின்
ஒலியை உள்வாங்கிச் சேமித்து
யாருமற்ற பொழுதுகளில்
தனக்குத்தானே ஒலிபரப்பிச்
சுகித்துக் கொள்கிறது

ஒரே பொழுது
மழை கண்டுவிட்டால் போதும்
இவ்வுலகம் காணப் பூத்துக் குலுங்கி விடும்
ஒவ்வொரு மணல் துகளும்

அந்தப் பொழுதில்
அதற்குப் புதியதொரு
பெயர் சூட்டத்
தயாராக இருக்க வேண்டும் நீங்கள்

*mail to:* **ameech2004@gmail.com**

# மீண்டும் மொழிப் போர்!

தமிழ்நாட்டின் வரலாற்றை மாற்றிய, வீரம்செறிந்த 1965 இந்தி எதிர்ப்பு போராட்டத்தின் 60ஆம் ஆண்டில் இருக்கிறோம். ஆனால், 60 ஆண்டுகள் கடந்துவிட்ட பிறகும், மொழிப் பிரச்சினையில் நாம் தொடங்கிய இடத்துக்கே மீண்டும் கொண்டுவந்து நிறுத்தப்பட்டுள்ளோம். ஒன்றிய அரசு, இந்தியையும் சமஸ்கிருதத்தையும் திணித்து, ஏற்றுக்கொள்ளாவிட்டால் நிதி தரமாட்டோம் என அச்சுறுத்துகிறது. முற்றிலும் ஜனநாயக விரோதமான ஒன்று, மும்மொழி கொள்கை என்ற புது பெயரில், நம் மீது திணிக்கப்படுகிறது. மீண்டும் இந்தி ஒரு முக்கியப் பிரச்சனையாக ஆக்கப்பட்டிருக்கிறது.

● **பிரபு திலக்**

மொழிப் பிரச்சினை என்பது வெறும் அடையாளப் பிரச்சினை அல்ல; அது வெறுமனே ஒரு மொழிசார்ந்த பிரச்சினையும்கூட அல்ல. அது அதிகாரப் பிரச்சினை. மூன்று மொழி கொள்கையை ஏற்றுக்கொள்ள சொல்பவர்கள் எண்ணம் தங்கள் மொழியை பரப்புவதல்ல; திணிப்பது. அதன் வழியே மேலாதிக்கம் செய்வது.

பல்வேறு மொழி, பல்வேறி இனம் என இருந்தாலும் வேற்றுமையில் ஒற்றுமை என்றிருக்கும் இந்தியாவை இந்துத்துவத்தையும் இந்தியையும் கொண்டு ஒருங்கிணைக்க முனைபவர்கள் உண்மையில் சிதறடிக்கும் வேலைகளையே செய்கிறார்கள். இந்தி ஒன்றிய ஆட்சிமொழியாவதை காந்தி, நேரு, பட்டேல் போன்றவர்கள் விரும்பியது உண்மையே. அதற்கு இந்தி அல்லாத மாநிலங்களில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் இருந்து பெரும் எதிர்ப்புக் கிளம்பியது. இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் தமிழ்நாடு 500க்கும் மேற்பட்ட உயிர்களை இழந்தது. இதனையடுத்து, இந்தி பேசாத மாநிலங்கள் விரும்பாதவரை அவர்கள் மீது இந்தியைத் திணிக்கமாட்டோம் என்று அன்றைய பிரதமர் நேரு வாக்குறுதி அளித்தார். அந்த வாக்குறுதி இன்று பொருள் இழந்து நிற்கிறது.



தமிழர்கள் இந்தி படித்தால் வட இந்தியா சென்று வேலை பார்க்கலாம் என்கிறார்கள். வடமாநிலங்களில் வேலை இருந்தால் எதற்காக அங்குள்ளவர்கள் வேலை தேடி தமிழ்நாட்டுக்கு வருகிறார்கள்; அதுவும் மிகக் குறைவான சம்பளத்துக்கு. ஏன் திருட்டுத்தனமாக அமெரிக்காவுக்கு சென்று பிடிபட்டு விலங்கு பூட்டித் திருப்பியனுப்பப் படுகிறார்கள்?

இந்தியை திணிக்கவில்லை; மூன்றாவது மொழியாக ஏதாவது ஒரு இந்திய மொழியை எடுத்து படிக்கத்தான் சொல்கிறோம் என்கிறார்கள். ஒரே பள்ளியில், மூன்றாவது மொழியாக மாணவர்கள் வெவ்வேறு மொழிகளை தேர்வுசெய்தால், அந்த பல்வேறுமொழிகளை எப்படி கற்றுத் தர முடியும்? அத்தனை மொழிகளுக்கும் ஆசிரியர்களை நியமிப்பார்களா? நிச்சயம் மாட்டார்கள் என்பதற்கு கடந்த காலங்களே சாட்சி.

2021 நிதிநிலை அறிக்கையில் புதிய கல்விக் கொள்கையின் படி, இந்தி ஆசிரியர்களை நியமிக்க 100 கோடி நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால், வேறு எந்த மொழிக்கும் ஒதுக்கவில்லை. தமிழ்நாட்டில் இருக்கும் கேந்திரிய வித்யாலயா பள்ளிகளில் இந்தி, தமிழ், சமஸ்கிருதம் என 3 மொழிகள் கற்றுத்தரப்படுவதாக சொல்லப்படுகிறது. இந்தியை கற்றுக் கொடுக்க 109 ஆசிரியர்கள், சமஸ்கிருதத்துக்கு 53க்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் உள்ளார்கள். ஆனால், தமிழை கற்றுக் கொடுக்க ஒரு ஆசிரியர் கூட இல்லை. இதுதான் மும்மொழிக் கொள்கை நடைமுறைப்படுத்தும் லட்சணம்.

சரி, தமிழ்நாட்டு மாணவர்கள் 3 மொழிகளை கற்க வேண்டும் என்றால், வட இந்திய மாநில அரசுப் பள்ளிகளில் மாணவர்கள் பயிலும் 3 மொழிகள் யாவை?

இந்தியா விடுதலை பெற்ற காலத்தில் மிக சிறப்பாக நிர்வகிக்கப்பட்ட மாநிலங்களாக பீஹார் உட்பட மாநிலங்களே இருந்தன. ஆனால், கடந்த 75 ஆண்டுகளில் சரியாக நிர்வகிக்கப்படாமல் சீரழிந்து போனதன் காரணமாக இன்று பின் தங்கியிருக்கிறார்கள். ஒப்பீட்டளவில் தமிழ்நாடு முன்னேறியிருக்கிறது. அதற்கு தமிழ்நாட்டின் மொழிக் கொள்கையும் முக்கியக் காரணம். இணைப்பு மொழியாக ஆங்கிலம் கற்றதன் வழியாக இந்தியாவில் பிற மாநிலங்களுக்கு மட்டுமல்ல உலகம் முழுவதும் தமிழர்கள் சென்றிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டின் வளர்ச்சியை சிதைத்து, தங்கள் நிலைக்கு தாழ்த்த முயற்சிக்காமல், தமிழ்நாட்டுக்கு அறிவுரை சொல்லும் இடத்தில் தாங்கள் இல்லை என்பதை உணர்ந்து, தமிழ்நாட்டை மாதிரியாகக் கொண்டு தாங்களும் உயர்வதற்கான வழியையே வட மாநிலத்தவர்கள் தேட வேண்டும். ●

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**

**Editor : PRABHU THILAAK**

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.